# ஆண்டாள்

## சொர்ணம்மாள் நினைவுச் சொற்பொழிவுகள்




டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,
பேராசிரியர் – தலைவர்,
தமிழ் மொழித்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்.




அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்
1984

கலைமாமணி டாக்டர் ஆறு. அழகப்பன்,
தமிழ்ப்பேராசிரியர்,
இந்திய மொழிப்புல முதன்மையர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

அண்ணாமலைநகர்,
16—11—1984.

# அணிந்துரை

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெறும் சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் தெய்வத்தமிழ்-மதுரத்தமிழ் - நங்கை **ஆண்டாள்** பற்றிய மூன்று சொற்பொழிவுகளைச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்மொழித்துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கள் 1984 ஆம் ஆண்டு நிகழ்த்தியுள்ளார். வைணவ உலகில் அவதாரமாட்சி கொண்ட ஆண்டாளைப் பற்றிச் 'சூடிக் கொடுத்த சுடர்க் கொடி', 'பாவை பாடிய பாவை', 'கோதில் தமிழ் உரைத்த கோதை' ஆகிய முத்தலைப்புக்களில் அவர்தம் பொழிவுகள் அமைந்துள்ளன.

பேராசிரியர் சி. பா. அவர்கள் டாக்டர் மு. வ. அவர்களைப் போலத் தம் எழுத்தாலும் பேச்சாலும் தமிழ்மொழியின் ஏற்றத்திற்கு நாளும் பணிபுரிந்து வருபவர் என்பது தமிழ்கூறும் நல்லுலகம் நன்கறியும். பக்தியீடுபாடு, தோய்ந்த சிந்தனை, பரந்த நூலறிவு முதலியவற்றின் பின்னணியில் ஆண்டாள் என்ற பொருள் பற்றித் திருப்பாவைப் பாசுரங்களிலிருந்தும் நாச்சியார் திருமொழியிலிருந்தும் சத்தான கருத்துக்களை அவர் வித்தக மொழிநடையுடன் வெளிப்படுத்தியுள்ளார்; தமிழில் காதலுடையார் பலரும் படித்துப் பயன் கொள்ளத் தக்க வகையில் பேராசிரியர் அவர்களின் இந்த அணுகு முறை உள்ளதெனலாம்.

பைந்தமிழ் வளர்க்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினின்று வெளிவரும் பக்திப்பாங்கான இந்நூல் தமிழ்த் தாய்க்குச் சூட்டப்பெறும் துளசி மணமொத்த நறுமண மாலையேயாகும்.

சொர்ணம்மாள் நினைவுப் பொழிவுகளை வெளிக் கொணர்வதற்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகின்ற அண்ணாமலைப் பல்கலைக்கழக நிறுவனர்-இணை வேந்தர் டாக்டர் மு. அ. மு. இராமசாமி அவர்களுக்கும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்களுக்கும், தமிழ்த் துறை சார்பாக நன்றி கூறி மகிழ்கிறோம். இந்நினைவு அறக்கட்டளையை நிறுவிய டாக்டர் ரா. பி. சேதுபிள்ளை அவர்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் என்றும் நினைவுகூர்ந்து வருகிறது என்பதற்கு இந்நூலே சாட்சி. இதனை நன்கு அச்சிட்டு உதவிய மயிலாடுதுறை லெட்சுமி அச்சகத்தார்க்கும் பாராட்டுக்கள்.

அண்ணாமலை நகர்,<br>16—11—1984.

ஆறு. அழகப்பன்,<br>தமிழ்ப்பேராசிரியர்.

5-4

# முன்னுரை

தமிழ்நாட்டின் பழம்பெருஞ் சமயங்கள் சைவமும் வைணவமும் ஆகும். முகத்திரண்டு கண்ணேபோல் தமிழர் பண்பாட்டின் தனிப்பெரும் தத்துவக் கோட்பாடுகளாய் இவ்விரு சமயங்களும் தமிழகத்தே புகழ்பூத்து நின்று நிலவிவருகின்றன. சைவர்களுக்குக் கோயில் என்றால் அது சிதம்பரத்தையே குறிக்கும்; வைணவர்களுக்கு அது திருவரங்கத்தையே குறிக்கும். சைவரும் வைணவரும் பெருங்கோயில் என்று சிதம்பரத்தினையும் திருவரங்கத்தினையும் முறையே குறிப்பர். தொன்மையும் பெருமையும் மிக்க இவ்விரு தலங்களும் இன்றளவும் சிறப்புக் குன்றாமல் இலங்கிவருவது தமிழர் எண்ணி மகிழத்தக்கவொன்றாகும்.

சிதம்பரம் என்றால் இன்று உலகில் எவருக்கும் அந்நகருக்கு அண்மையில் அண்ணாமலை நகரில் நிறுவப் பட்டுள்ள அண்ணாமலைப் பல்கலைக்கழகம் நினைவிற்கு வாராமற் போகாது. "எல்லையிற் செல்வம் கண்டு ஈகையின் பெருமை கண்டு பல்கலைக்கழகம் கண்டு பாரெலாம் புகழக் கண்டவர்" அண்ணாமலை அரசர் ஆவார். அவர்கள் ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் தொலைநோக் குடனும் கல்விச் சிந்தையுடனும் அறத்தாற்றுப் பண்புடனும் தமிழர்தம் தனிப்பெரும் கல்விக்கெனத் தோற்றுவித்த இப்பல்கலைக்கழகம் தொடக்கக் காலத்திலிருந்தே சிறந்த பேராசிரியப் பெருமக்களைப் பெற்றிருப்பதோடு உலகெங்கும் பலதுறைகளிலும் புகழ் மணக்கச் செய்யும் ஒப்பற்ற மாணவச் செல்வங்களையும் அளித்துள்ளது. தமிழர் "தமிழ்ப் பல்கலைக்கழகம்" என்று போற்றுமளவிற்குத் தமிழ்த்துறையில் தனிச் சிறப்பு வாய்ந்த பணிகளைத் தொடர்ந்து ஆற்றி வருகின்றது. "மணிகாட்டும் கோபுரம்போல் உயர்ந்த

நெஞ்சுடனும், மலைகாட்டும் அகலம்போல் விரிந்த நோக்குடனும், பணிகாட்டும் திருக்குறளிற் படிந்த வாழ்வுடனும், பதவியெலாம் படிபோலக் கடந்த வாழ்வுடனும், அணிகாட்டும் தாமரையாள் அடைந்த மார்புடனும், ஆரையுமே உறவாக அணைக்கும் கையுடனும், பிணிகாட்டும் மருத்துவன் போல் பேணும் அன்புடனும்'' பெற்ற தமிழரசர் முத்தையவேள் அவர்களின் அருட்பார்வையில் இவ்அண்ணாமலைப்பல்கலைக் கழகம் ஏற்றத்தினையும் எழிலினையும் பெற்று வருகின்றது. இதனாற்றான் தம் வாழ்க்கையில் நில்லாத செல்வத்தை நிலைக்கச் செய்து, நீங்காத கலைப்புரட்சியை நிரம்பச் செய்து, கல்லாத இனத்தையெல்லாம் கற்கச் செய்து, காணாத பெருங் கழகம் களத்து வைத்து, இல்லாத புலவர்களை இருப்போர் ஆக்கி, இணையாத தமிழ்ப் புகழை ஈட்டிக் கொண்டு, வெல்லாத செயலில்லை என்று போற்ற விளங்கிய மன்னர் அண்ணாமலை அரசர் புகழ் நின்று நிலவுகின்றது.

வைணவர்கள் பெருங்கோயில் என்று பெருமையுடன் பேசும் திருவரங்கத்திலும் சென்ற ஆண்டிலே இந்நூற்றாண்டின் புரட்சிக் கவிஞராகவும் பாவேந்தராகவும் ஒருங்கே திகழ்ந்த பாரதிதாசன் பெயரில் பல்கலைக்கழகம் அமைந்திருப்பது மகிழ் தற்குரியதாகும். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின்பால் மட்டற்ற ஆர்வமும் அக்கறையும் கொண்டிருந்ததோடு, அப் பல்கலைக்கழகத்திற்கு அடிக்கடி வந்து நெருங்கிய நேயமும் தொடர்பும் கொண்டிருந்தவர் பாரதிதாசன் என்பதனை அனைவரும் அறிவர். எனவே யான் தில்லையின் எல்லையில் அண்ணாமலை அரசரின் திருப்பெயர் சொல்லிக் கொண்டிருக்கும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இருந்து கொண்டு, இந்த ஆண்டில் இப்பல்கலைக்கழகத்தில் தொடக்க நாட்களில் தமிழ்ப் பேராசிரியர்களாகப் பணியாற்றிய பெருமக்களில் ஒருவராகிய சொல்லின் செல்வர் பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தம் அருமை அன்னையார் திருப்பெயராம் சொருணாம்பாள் நினைவாக இப்பல்கலைக்கழகத்தில் நிறுவிய அறக்கட்டளையின் சார்பில் ''மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்'' என்று

எண்ணிய எண்ணத்தினைத் திண்ணிய நெஞ்சமுடன் எடுத்துரைத்துத் திருவரங்கத்து எம்பெருமானுக்கே மணவாட்டியாய் நினைந்து அதில் வெற்றியும் பெற்ற சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாகவும், திருப்பாவை பாடியருளிய பாவையாகவும், கோதில் தமிழுரைத்த கோதையாகவும், திருவில்லிபுத்தூர் கோன் என்றும், பட்டர்பிரான் என்றும், பெரியாழ்வார் என்றும் போற்றப்பெற்ற ஆழ்வார்தம் அன்புமகளாகவும் விளங்கித் திகழ்ந்த "ஆண்டாள்" என்னும் தலைப்பில் இன்றும் நாளையும் நாளை மறுநாளும் சொற்பொழிவு நிகழ்த்தத் துணிந்துள்ளேன்.

சொல்லின்செல்வர் பேராசிரியர் டாக்டர் சேதுப்பிள்ளை அவர்கள், உலகப் புகழ்பெற்ற சென்னைப் பல்கலைக் கழகத்தில் இருபத்தைந்து ஆண்டுகள் பாங்குறப் பணியாற்றிய நல்லார் ஆவர். தாம் இருபத்தைந்து ஆண்டுகள் தமிழ்த் தொண்டாற்றியதனைக் கொண்டாடும் பொருட்டுத் தாம் தொடக்கத்தில் பணியாற்றிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு இருபத்தையாயிரம் ரூபாயும், அதனைத் தொடர்ந்து பணியாற்றிய சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு இருபத்தையாயிரம் ரூபாயும் வழங்கினார்கள். சங்க காலத்தில் புரவலர்கள் புலவர்களாகவும் திகழ்ந்த வரலாற்றினைக் கண்டுள்ளோம். இந்நூற்றாண்டிலே புலவர் புரவலராகவும் விளங்கித் திகழ்ந்த செய்தியினைக் கண்டு மகிழ்ந்தோம்.

"கடந்த ஞானியரும் கடப்பரோ தம் மக்கள் மேட் காதல்" என்பர். தாம்பெற்ற குழந்தைகள் மாட்டுப் பெற்றோர் அன்பு செலுத்துவதென்பது உலக இயல்புகளில் ஒன்றாகும். ஆனால் பேராசிரியர் சேதுப்பிள்ளை அவர்கள் தம்முடம்பிற்குக் காரணமாய் அமைந்து பின்னர்ப் புகழுடம்பு பெற்றுவிட்ட தம் அன்னையாரை நினைவுகூர்ந்து அறக்கட்டளை நிறுவினார்கள். "முற்றும் துறந்த முனிவர் பட்டினத்தடிகள் போல் யாரும் துறக்கை அரிது" என்பார் தாயுமான தயாபரர். "காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே" என்று தூய துறவுள்ளத்துடன் வாழ்ந்த பட்டினத்தடிகளாலேயே தாய்ப் பாசத்தைத் துறக்க முடியவில்லை. எனவே அருமை அன்னையார் சொருணாம்பாள் அம்மையார் திருப்பெயரால்

ஆழ்ந்தகன்ற படிப்பும், துறைதோறும் துறைதோறும் தோய்ந்துநின்ற பண்பாடும் கொண்ட பேராசிரியர் அவர்கள் அறக்கட்டளை அமைத்தது சிறப்பே யன்றோ!

சொருணாம்பாள் அறக்கட்டளையினை நிறுவிய சேதுப் பிள்ளை அவர்கள் அவ் அறக்கட்டளையின் சார்பாக ஆண்டு தோறும் புலவர் திருநாள் கொண்டாடப் பெற வேண்டும் என்று கருதினார்கள். அவர்கள் கொண்ட கருத்திற்கியைய முதன்முதலாகப் புலவர் திருநாள் 1959 ஆம் ஆண்டிற் கொண்டாடப் பெற்றது. என்னைப் பண்படுத்தி வழிகாட்டி ஆளாக்கிய என் அருமைப் பேராசிரியப் பெருந்தகை டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் அத்திருநாளிற் கலந்து கொண்டு "இளங்கோவடிகள்" என்னும் பொருள் பற்றிச் சீரியதோர் சொற்பெருக்காற்றினார்கள்.

என் ஆசிரியப் பிரான் முதலாண்டிற்பேச இன்று இவ் இருபதாம் ஆண்டில் யான் பேசும் வாய்ப்புக் கிடைத்தமை யினைப் பெரும்பேறாகக் கருதுகின்றேன். சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஏழெட்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து சொருணாம்பாள் அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கு உரிய தமிழறிஞர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், அச்சொற்பொழிவு களுக்குத் தலைமை தாங்குவதிலும் என் பங்கு கழிந்து கொண்டிருக்கத் தமிழ்ப் பயிர் வளர்க்கும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தினர் என்னை 'வாவென்று வான்கருணை தான் காட்டி' அழைத்துப் பேசச் செய்திருக்கின்றனர்.

முதலாவதாகத் தம் அருமைத் தந்தையார் அண்ணாமலை அரசர் அவர்கள் நிறுவிய இருபெரும் பொது நிறுவனங்களான அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தினையும், சென்னைத் தமிழ் இசைச் சங்கத்தினையும் தம் இரு கண்களென எண்ணிக் கண்ணின் மணியெனக் காத்து, எளியேன் போன்ற எண்ணற்றோருக்கு ஊக்கமும் ஆக்கமும் நல்கி, தோற்றமும் ஏற்றமும் தந்து புரந்துவரும் முத்தையவேள் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியினை முதற்கண் நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஆங்கிலமும் அருந்தமிழும் பாங்குடன் பேச வல்லவரும், நிர்வாகத் திறன் மிக்கவரும், எவரையும் எளிதிற் கவர்ந்து தாம் பணியாற்றும் நிறுவனத்திற்குப் புகழும் புதுமையும் சேர்ப்பவரும், 'கடையவனுக்கும் கடைத் தேற்றம்' என்னும் அருட்பார்வைப் பொலிவு வாய்ந்தவரும், சிறந்த கல்வியாளரும் தமிழ்ப் பற்றாளருமான துணைவேந்தர் உயர்திரு சை. வே. சிட்டிபாபு அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இச்சொற்பொழிவு நிகழ்த்தும் அரியதொரு வாய்ப்பினை எனக்கு நல்கிய அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் நிகழ்நிலைத் துணைவேந்தர், முத்தமிழ் வித்தகர், பண்டிதமணி பேராசிரியர் லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் உள்ளிட்ட ஆட்சிக் குழுவினர்க்கு அகங்குழைந்த நன்றியினைச் செலுத்திக் கொள்கிறேன்.

'தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின் மகிழ்நனை மறுகின் மதுரை' யில் தண்டமிழ் வளர்த்து இன்று அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சித் தமிழ் வளர்க்கும் அரும் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருப்பவரும், வைண வத்தில் தோய்ந்து, பௌத்தத்தில் ஊறி, சமரசத்தில் நிலைத் திருப்பவருமான தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் நா. பாலுசாமி அவர்களுக்கு நன்றிக் கடப் பாடுடையேன்.

விரித்த இலையிருந்தாலும், விதம்விதமான அறுசுவை உணவு வகைகள் அவ்இலையிற் பரிமாறப்பட்டிருந்தாலும் அகமும் முகமும் மலர விரும்பி உண்ணும் விருந்தினராலேயே அவ்விருந்து சுவை கூடுகின்றது; பெருமை கொள்கின்றது. அம்முறையில் நள்ளிரவில் நட்டம் பயிலும் தில்லை நடராசப் பெருமானையும், அவர் முன்றில் துலங்கும் கோவிந்தராசப் பெருமானையும் உளத்தே நிறுத்தி யான் சொற்பொழிவாற்று வதனைச் செவிமடுக்க ஈண்டுத் திரண்டு வந்திருக்கும் தமிழ் நெஞ்சங்களுக்கு என் கனிந்த கைகூப்பு.

நான் இப்புலவர் திருநாளில் பேச மேற்கொண்ட புலவர் 'ஆண்டாள்' ஆவர். ஆண்டாளை நான் தேர்ந்தெடுத்ததற்குச் சில காரணங்கள் உண்டு. அவற்றை யான் ஈண்டுக் குறிப் பிடுதல் இன்றியமையாததாகும். யான் பிறப்பால் சைவன்; வாழும் நெறியால் சமரச நெறியினைச் சார்ந்து நிற்பவன். நான் ஏறத்தாழ இருபத்தைந்தாண்டுகளுக்கு முன்னர்த் தமிழ் முதுகலை பயிலும் மாணவர்களுக்கு நான் படித்த 'உச்சிமேற் புலவர்கொள் பச்சையப்பன் கல்லூரி'யிலேயே ஆசிரியனாய் அமர்ந்து பாடஞ்சொல்லிக் கொடுத்தகாலையில், ஒரு ஞான்று ~~மணிவாசகப் பெருமான்~~ என் சொந்த ஊராம் திருவண்ணா மலையில் மார்கழித் திங்களில் அருளிச்செய்த திருவெம் பாவையினையும், ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை யினையும் பாடஞ்சொல்லும் வாய்ப்புக் கிட்டியது. அதுபோது திருவெம்பாவையின் தத்துவக் கோட்பாடுகளில் திளைத்த நான், ஆண்டாளின் அழகு தமிழில் என் நெஞ்சத்தைப் பறி கொடுத்து விட்டேன். 'தமிழிலக்கிய வரலாறு' என்னும் நூலினைச் சரியாக இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் எழுதிய எனக்கு ஆண்டாள் கவிதைகளே உயர்ந்த செழுமை வாய்ந்த கவிதைகள் (Richest poetry) என்னும் உண்மை புலப்பட்டது. இவ்வுண்மையினைச் செல்லுமிடமெல்லாம் சொல்லி வந்தேன். திருப்பாவை, நாச்சியார்திருமொழிப் பாடல்களின் அழகும் மாட்சியும் என்னைப் பலகாலும் அகங்குளிரச் செய்துள்ளன; அப்பாடல்கள் என்னை இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தியுள்ளன. "இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர் விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்" என்று நினைக்க வைத்துள்ளன.

மேலும் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படைகளாக யான் மூன்றனைக் கருதுவதுண்டு. ஒன்று இறை பரவல்; இரண்டு இயற்கையில் ஈடுபடல்; மூன்று பெண்மை போற்றல் என்பதாகும். இறைவனை வணங்கி, இயற்கைக் காட்சிகளில் தோய்ந்து, பெண்மையைப் பாராட்டி நிற்பது என்கடன் எனக் கொண்டு ஒல்லும் வகையான் யான் வாழ்ந்து வருகின்றேன். அம்முறையில் ஔவையார், வெள்ளிவீதியார், காக்கைப் பாடினியார், அள்ளூர் நன்முல்லையார், பாரி மகளிர் முதலான

புலமைச் செல்வியர்களுக்குப் பின் இடைக்காலத்தில் வாழ்ந்த வர்களுள் நாயன்மார்களுள் "பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல் சிறந்து நின் சேவடியே சிந்தித்தேன்" என்னும் புனிதவதியாராம் காரைக்காலம்மையாரும், "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்று வைராக்கிய உள்ளத்துடன் வாழ்ந்து காட்டிய ஆண்டாளும் நம் கண்முன் நிற்பர்.

எனவே ஆழ்வார்களில் ஒருவரும், பெரியாழ்வாரின் பெண் கொடியாகத் திகழ்பவரும், வேயர் குலத்து விளக்காக ஒளிர் பவரும், சூடிக்கொடுத்த சுடர்க் கொடியாகத் துலங்குபவரும், பாவை பாடிய பாவையாகப் பளிச்சிடுபவரும், கோதில் தமிழ் உரைத்த கோதையாகக் கொண்டாடப் பெறுபவருமாகிய "ஆண்டாள்" குறித்துப் பேச அவாவுற்றேன்.

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,
பேராசிரியர் - தலைவர்,
தமிழ்மொழித்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்.

சென்னை-600 005.

# இதனுள் ........

# ஆண்டாள்

## (1)

## சூடிக்கொடுத்த சுடர்க்கொடி

மார்கழித் திங்களில் சைவர்கள் திருவெம்பாவை படிப்பதும், வைணவர்கள் திருப்பாவை படிப்பதும் தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு நிலவிவரும் வழக்கமாகும். ஆண்டாள் இயற்றிய திருப்பாவையில் முப்பது பாக்கள் இருக்கின்றன. இவை நெஞ்சை அள்ளும் உணர்ச்சி மிக்கவைகளாய் இருப்பதோடு படிக்குந்தோறும் படிக்குந்தோறும் ஆரா இன்பம் மாறாது அளிக்கும் இறைநெறிப் பாடல்கள் ஆகும். திருப்பாவையில் இறைவனோடு உயிர் மணந்து கொள்ளுதலையே ஆண்டாள் கற்பனையாக அழகுறப் பாடியுள்ளார்.

"கடவுள் நெறி கொள்ளின், காதல் நெறியில் உயிர்கள் செல்ல இயலாது'' என்று சிலர் வாதிடுவர்; ''காதல் கடவுள் நெறிக்கு முற்றிலும் மாறுபட்டது'' என்றும் கூறுவர்; ''கடவுளை அடைய வேண்டுமாயின் காதலை அறவே கைவிட வேண்டும்'' என்பர். வேதாந்திகள் உலகம் அனைத்தும் மித்தை என்று காட்டி, ''பெண்ணாகியதொரு மாயப் பிசாசம்'' என்று கூடப் பெண்களை நிந்திப்பார்கள்,[1] (பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், வையைத் தமிழ், ப. 101) என்னும் கருத்துகள் ஆழ்வார்கள் போக்கில் அடிபட்டுப் போகின்றன.

கி. பி. ஆறாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் பெருக்கெடுத்தோடிய பக்தி வெள்ளம், நிலையாகத் தன் பயனை உலகிற்கு அளித்துள்ளதைக் காணுகின்றோம். சைவ, வைணவ பக்தி இயக்கங்களினால் தமிழ்ப் பூங்காவில் மலர்ந்த முல்லை மலர்களே 'பக்திப் பாடல்கள்' ஆகும். அப்பாடல்கள் முழுமுதற்பொருளைக் காண்பதற்கு மக்களினம் ஆர்வத்தோடு முயன்ற முயற்சிகளுள் தலைசிறந்த ஒன்றை

அழியாது போற்றிக் காத்து வருகின்றன[2] (திரு க. த. திருநாவுக்கரசு, தமிழ் நிலவு, ப. 53) என்பது ஒப்ப முடிந்த கருத்தாகும்.

பல்வேறு சமயங்களும் தொன்றுதொட்டு மக்களையும் சமுதாயங்களையும் ஆட்டி வந்திருக்கின்றன. ஆகவே சமயம் என்பதன் தோற்றத்தையும் அதன் வளர்ச்சியினையும் காணுதல் நலம் பயக்கும்.

எது சமயம்?

சமயம் அல்லது மதம் என்றதன் கருத்தை நாம் வரையறை செய்ய முயல்வது ஈண்டுத் தேவையற்றது. ஆயினும் வரையறை செய்வதானால் பழங்காலந்தொட்டு இன்றுவரை எல்லா நாட்டிலுமுள்ள எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாயிருக்கும் அடிப்படையான கருத்துகளைத் தொகுத்து வைக்க வேண்டியதாகும். "ஒருவரது கல்வியின் திறத்தையும் ஆராய்ச்சி வன்மையையும் மட்டுமே அவ்வகை இலக்கணமானது புலப்படுத்தும். முடிவில் ஏட்டுச் சுரைக்காயாகத் தான் அதனைக் கொள்ளுதல் வேண்டும். நமது சமூகங்களுக்கு அதனால் பலன் யாதும் விளையும் என்று சொல்ல முடியாது" என்பார் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள்.[3] (தமிழர் பண்பாடு, ப. 150). ஆக்வே, எவ்வகையான குறிக்கோள்களை மேற்கொண்டு இச் சமயங்கள் வழங்கி வந்தன என்பதை நோக்குதல் சாலும்.

வரலாற்று முறையிலேயே இந்தக் குறிக்கோள்களை நாம் அறிதல் வேண்டும். குறிக்கோள்களை இனம் காண்பதற்கு ஈண்டுப் பண்பாட்டு அடிப்படையில் சமயம் வளர்ந்த நிலையைத் தெளிதல் வேண்டும். விலங்கினத்திலிருந்து வேறுபடுத்தி மனிதனை மனிதனாக வாழ வைப்பது பண்பாடு. தம்மொடு தொடர்பு அற்றார்மேல் இயல்பாகச் செல்லும் உள்ள நெகிழ்ச்சியே அன்பாகவும் பண்பாட்டிற்கு அடிப்படையாகவும் கொள்ளப் பெறுகின்றது. அந்த அன்புள்ளமே ஆண்டவன் தங்கும் உள்ளமாகும். "அன்பால் நினைவாரது உள்ளத்தே விரைந்து சேரலின் 'ஏகினான்' என இறந்தகாலத்தால் கூறினார்" என்று கடவுள் வாழ்த்துக் குறட்பாவுக்குப் பரிமேலழகர் உரை காண்பது உன்னத்தக்கது. ஆகவே, தன்முனைப்பு அற்று எல்லாரும்

இன்புற்றிருக்க நினைக்கும் நல்ல உள்ளம் மனிதனுக்கு என்று தோன்றியதோ அன்றே அவன் பண்பட்டவன் ஆனான்.

சமயம், பண்பாட்டு மாளிகையில் வாயிற்படி என்பது ஏற்றுக்கொள்ளக் கூடிய கருத்தாகும்.

கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைக ளாலும் இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையின் ஒன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போல் பரந்த தன்றே

—கம்பராமாயணம், பாலகாண்டம், ஆற்றுப்படலம் 19.

என்று கம்ப நாட்டாழ்வார் கூறுகின்றார்[4].

ஆதலால் சமயங்களின் உண்மைநிலையை நோக்கும்போது அவை ஒன்றற்கொன்று முரண்பட்டன அல்ல என்பது தெளிவாகும். எல்லா ஆறுகளும் கடலை நோக்கியே செல்லுகின்றன. அதுபோலவே, எல்லாச் சமயங்களும் இறைவனை நோக்கியே செல்லுகின்றன. ஒரே பொருளின் வெவ்வேறு பகுதிகளை மட்டும் கண்டு அதுதான் முழுப்பொருள் என்று கருதிப் பெயரிடுகின்றோம்; ஒரே பொருளுக்கு வெவ்வேறு மொழிகளில் வெவ்வேறு பெயர்கள் இருக்கின்றன; இவை போலத்தான் உலகத்திலே பற்பல சமயங்களும் உள்ளன. இதனை மேலும் தெளிவுற உணர்தற்கு,

பேரை யொருபொருட்கே பல்வகையாற் பேர்த்தெண்ணும்
தாரை நிலையை தமியை பிறரில்லை[5]

— கம்பராமாயணம் இரணியன் வதைப்படலம், 159

தோள்கண்டார் தோளே கண்டார்; தொடுகழற் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்; தடக்கை கண்டாரும் அஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கொண்ட சமயத் தன்னான் உருவுகண் டாரை யொத்தார்[6]

— கம்பராமாயணம், உலாவியற்படலம், 19.

என்னும் மொழிகள் அரண்களாக அமைகின்றன.

உலகில் கடவுள்நெறி பல்லோரால் போற்றப்படுகின்றது. வழிபடுமுறையும், வாழ்த்தும் நெறியும் எத்தனையோ வகையில்

மாறுபடுகின்றன. என்றாலும், முடிவில் அனைத்தும் ஒன்றாகவே முடியும் என்பது சமய நெறியீட்டாளர் கருத்து என்பது பெறப்படும். இதனால் பல்வேறு சமயங்களை ஆறுகளாகவும், கடவுள் அவையெலாம் இறுதியில் சென்றுசேரும் கடலாகவும் காட்டப் பெறுவது தெளிவு. ஆகவே, வழிபாட்டுமுறை மாறுபாட்டாலும், கடவுள் உணர்வு பலரிடம் குடி கொண்டுள்ளது என்பதை அறிவோம்.

விலங்கினத்தினின்றும் வேறுபட்டிருந்த முதல் மனிதன் விலங்குணர்ச்சியோடு வாழ்ந்திருந்தான்; அன்று அவனுக்குக் கடவுளைப் பற்றி எண்ணத் தெரியாது. தன்னை உணர்ந்து, சுற்றுச் சூழலை மதித்து, மனிதத் தன்மையோடு வாழத் தொடங்கிய பிந்திய நாளிலேதான் கடவுள் உணர்வு மனிதனுக்கு அரும்பியது. அந்த நிலையில் தன்னிலும் மேலான, தன் ஆற்றலையும் விஞ்சிச் செயலாற்ற வல்ல ஒரு பொருள் இருக்கிறது என்று அவன் உணர்ந்தான். அந்த உணர்வே சமயத்தை உண்டாக்கிற்று.

சமயம் என்பது இறைவன் தொடர்புடையது என்று கூறலாம். கடவுளை வழிபடுகின்ற நெறியே சமயம் என்றும் நவிலலாம். சமய அடிப்படை மனித வாழ்வோடு பொருந்தியது எனலாம். தமிழ் மொழியின் தோற்றம் முதல் அதன் இலக்கியம் மேருமலைபோல் வளர்ச்சியடைந்தது வரை அதன் வரலாற்றை நோக்கினால் யாவும் சமயச் சார்பாகவே இருப்பதை அறியலாம். மொழியிலுள்ள இலக்கிய வளர்ச்சி சமயத்தொடர்பாகவே உள்ளது. சங்ககாலம் முதல் இன்றுவரை தோன்றியுள்ள இலக்கியங்களைக் கூர்ந்து நோக்கினால் இவ்வுண்மை விளங்கும். சங்க காலத்தில் சமயத் தொடர்புகொண்ட இலக்கியங்கள் அதிகம் தோன்றாது போயினும் அதற்குப் பிறகு தோன்றித் தமிழ்மொழியை வளப் படுத்திய இலக்கியங்கள் பெரும்பாலும் சமயச் சார்பாகவே உள்ளன என்பது ஒரு கருத்தாகும்[7]. (டாக்டர் ந. சுப்புரெட்டியார், அறிவுக்கு விருந்து, ப. 108) சங்ககாலத்தில் சமயம் ஒரு தனித்தலையாகக் கருதப் பெறவில்லை. அப்போது சமயம் உணர்வு நிலையில்தான் இருந்தது.

சங்ககாலத்து இறை வழிபாடு

ஆலமுங் கடம்பும் நல்யாற்று நடுவும்
நால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்!
எவ்வயி னோயு நீயே![8]

— பரிபாடல், 4:67—70

ஈண்டு, "ஆலும் கடம்பும் யாற்றிடைக் குறையும் குன்றும் பிறவுமாகிய அவ்விடங்களைப் பொருந்திய பல தெய்வங்களாக வகுத்துச் சொல்லப்படும் பெயரையுடையோய்!" என்றமையின் சங்ககாலத்துத் தமிழ்மக்கள் கடவுள் ஒருவனே யென்னும் உண்மையை நன்குணர்ந்தனர் என்பது வெளிப்படை.

மதிலும் மண்டபமுமாகி யமைந்த கோயில்கள் இயைவதன் முன்னர்ப் பழந்தமிழர் ஆலமர நீழலிலும் கடம்பமர நீழலிலும் யாற்றிடைக் குறையிடத்தும் குன்றத்தின் மிசையும் பிறவிடத்தும் சிலையுரு நிறுத்தியும் அஃதின்றியும் இறைவனை வழிபட்டு வந்தனர்.

காடுங் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையிலும்

— திருமுருகாற்றுப்படை

எனும் திருமுருகாற்றுப்படை அடிகளால் இயற்கை வனப்பு எவ்வெவ்விடத்துளதோ அவ்வவ்விடத்திலெல்லாம் தமிழ் மக்கள் இறையை முன்னிட்டு வழிபாடியற்றினரென்பது அறியக் கிடக்கின்றது என்பர்.[9] (ந. சி. கந்தையா பிள்ளை, அறிவுரைக் கோவை, ப. 55)

இவ்வாறு வழிபட்ட மக்கள் சிறிது சிறிதாகப் பண்பட்டு, பதப்பட்டுச் சமயவழிபாட்டில் சில வளர்நிலைகளைக் கண்டனர். 'சமயம்' என்ற சொல்லுக்கே சமைந்தது - நன்கு பக்குவப்படுத்தப் பட்டது-பதப்படுத்தப்பட்டது என்னும் பொருள்களைக் கொள்ள லாம். படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலுக்கும்

பிரமன், திருமால், சிவன் என்னும் மூன்று கடவுளரைத் தலைமையாகக் கொண்டனர்.

### சைவமும் வைணவமும்

தமிழ்நாட்டிலே பக்திமணம் கமழச் செய்த பெரியோர்களில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் சிறந்து விளங்குகின்றனர். இவர்கள் பாடுவதையே பணியாகக்கொண்டு இறைவன் மீது அன்பு பூண்டொழுகியவர்கள். தமிழ்நாட்டில் சைவமும் வைணவமும் செழித்தன. அந்தக் காலத்தில் பக்திமணங்கமழும் கடவுட் பாடல்கள் தமிழ் இலக்கியச் செல்வத்தைப் பெருக்கின. சைவ சமயக் குரவர்களாகிய அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலானோர் மிகுதியான இறைநெறிப் பாடல்களைப் பாடிப் பரவியுள்ளனர். ஆழ்வார்களும் மிகுதியான பாடல்கள் பாடியுள்ளனர். தமிழ்க் கவிதையில் உள்ளத்தை உருக்கக்கூடிய ஒரு தனிச் சிறப்பு ஆழ்வார் பாசுரங்களில் உண்டு. தமிழ்நாட்டில் 'இறைநெறி' (பக்தி மார்க்கம்) பரவுவதற்கு ஈடும் எடுப்பும் அற்ற இனிமைத்தமிழ் ஒரு சிறந்த கருவியாக இருந்து வந்திருக்கின்றது. தமிழ்நாட்டின் அறமும் பிறவும் இவர்கள் பாடல்களால் நன்கு விளங்கும்.

பின்னர், சமண சமயமும் பௌத்த சமயமும் ஈண்டுக் காலூன்றி, சைவ சமயத்தோடும், வைணவ சமயத்தோடும் ஒரு மனப்பட்டுத் தமிழை வளர்த்த நிலையுண்டு. இடைக்காலத்தில் இணக்கமின்றிப் பிணக்கம் தலைக் காட்டிற்று. சமண சமயத்திற்கும் இந்து சமயத்திற்கும் பகைமை முதிர்ந்தது. இந்தச் சமயத்தில் தமிழ்நாட்டு அரசர்களிற் சிலர் சமண சமயத்தைச் சார்ந்து நின்றனர்; சிலர் இந்து சமயத்திலே இணங்கி இருந்தனர். ஆகவே, எங்கும் குழப்பமும் பிணக்கமும் நிறைந்திருந்தன. இந்நிலையில் இந்து சமயத்தை ஆதரித்து நிலைநிறுத்துதற்கு ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றினர் என்பது குறிப்பிடத் தக்கது. வைணவமும் சைவமும் இவர்களால் வீறு பெற்றன.

"சைவ சமயத் தலைவர்களாகிய நாயன்மார்களும், வைணவ சமயத் தலைவர்களாகிய ஆழ்வார்களும் மக்கள் உள்ளத்தைப் பக்தி மார்க்கத்தில் செலுத்த முயன்றார்கள்;

எல்லாம் வல்ல இறைவனையே பாட வேண்டும் என்று பணித்தார்கள்; பக்தி ரசம் நிறைந்த பாடல்களைப் பாடினார்கள்; ஊர் ஊராகச் சென்று உருக்கமான பாட்டிசைத்தார்கள்; கோவில் கண்ட இடமெல்லாம் குழைந்து குழைந்து பாடித் தொழுதார்கள். பக்திச் சுவை சொட்டும் பாடல்களால் உள்ளக் கிளர்ச்சி உண்டாயிற்று. எங்கும் சமய உணர்ச்சியே பொங்கித் ததும்பிப் பூரணமாய் நின்றது'' என்று வருணிக்கின்றார் சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்.[10] (தமிழ் விருந்து, பக். 145-146)

வைணவம்

வைதிக மதத்தின் ஒரு பிரிவு வைணவம். அச்சமயக் கடவுள் திருமால். திருமாலின் வழிபாடு வேதகாலத்திற்கு முந்தியது. இந்திய நாடு முழுவதும் பரவி, அருந்தத்துவங்களை உள்ளடக்கி நம் ஆன்மீக, சமூக வளர்ச்சிக்கு இச்சமயம் சிறந்த தொண்டு புரிந்துள்ளது. வேதகால விஷ்ணுவும் தொல்காப்பியம் காட்டும் திருமாலும் ஒரே கடவுளராவர்.

> திருமால் அல்லது மகாவிஷ்ணு நான்கு மறைகளிலும் கூறப்பெற்ற வேதகாலக் கடவுளே. அவனைச் சூரியனாகவும் மூவுலகையும் ஈரடியால் அளந்தவன் என்றும் நூல்கள் பகரும். சதபதப்ராம்மணத்தில் அவன் பன்னிரண்டு ஆதித்தர்களில் ஒருவனாகக் கூறப்பட்டுள்ளான். மகாபாரதமும் பதினொரு ஆதித்தனைக் கூறிப் பன்னிரண்டாவதாக விஷ்ணுவைக் குறிக்கின்றது. இதனால் ஆதித்தனே விஷ்ணுவாக மாறியிருத்தல் கூடும் என்று ஊகிக்க இடமுண்டு. இதே விஷ்ணு யக்ஞ ஸ்வரூபம் என்றே மறைகளாற் புகழப்பட்டு, அம்முறையில் யக்ஞ நாராயணன் வடிவில் வணங்கப்பட்டு வருகின்றான். இதிகாச புராணங்களில் விஷ்ணுவே பரதேவதையாகவும், திருமூர்த்திகளில் ஒருவனாகவும் காணப்படுகின்றான்.

என்று டி. ஏ. கோபிநாதராவ் கூறியிருக்கின்றார்.[11] (இந்திய விக்ரகம்)

''மேற்கூறியவற்றால் விஷ்ணு ஆரியக்கடவுள் எனத் தெரிகின்றது. அவ்வாறிருந்தும் அவன் திருநாமங்களும்,

திருவிளையாடல்களும், தொல்காப்பியர் காலத்திலேயே பெரிதும் தமிழ்நாட்டிற் பயின்றனவாக அறிகின்றோம். அவரைக் குறித்தாற்றும் வழிபாடு முதலியன ஆரிய முறைப்படியேதான் இன்றும் நடைபெறுகின்றன'' என்றுகூறும் இலக்கிய வரலாற்றாசிரியர் கருத்துச் சிந்திக்கத் தக்கது.[12] (ஈ. எஸ். வரதராச ஐயர், தமிழ் இலக்கிய வரலாறு, கி. பி. 1 முதல் 11 வரை. ப. 210).

வழிவழிவந்தவன்

திருமால் வழிபாடு தமிழ்நாட்டில் மிகப் பழமையானதாகும். தமிழகம் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று நானிலமாகப் பெயர் வழங்கிய காலத்திலிருந்தே இவ்வழிபாடு தோன்றிவிட்டது.

மாயோன் மேய காடுறை யுலகமும்[13]

— தொல்காப்பியம், அகத்திணையியல், 5.

என்று தொடங்கும் நூற்பா மாயோனைப் பற்றிய குறிப்பினைத் தருகின்றது. தெய்வமும் ஒருநிலக் கருப்பொருள் என்றும், முல்லை நிலத் தெய்வம் மாயோன் என்றும் இதனால் உணருகின்றோம். இனி யடுத்தும்,

மேவிய சிறப்பி னேனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையால்
பிழைத்தல் பிழையா தாக வேண்டியும்[14] — ௸, 28

என்றும் கூறுவர் தொல்காப்பியனார். மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய கடவுளர்க்குக் கோயிலும், அவற்றில் அவர்களது திருமேனிப்படிமங்களும் வைத்து வணங்கப்பட்டு வந்தனவென்றும் அறிகின்றோம். மேற்காணும் நூற்பாவால், அப்படிப் படிமைகள் அமைந்த கோயில்களைக் காத்தற்கு அரசர் முதலானோர் தம் மனையைப் பிரிந்து செல்வர் என்பது தெரிய வருகின்றது. மேலும் மன்பெருஞ் சிறப்பினையும், தாவா விழுப்புகழ் புகழினையும் திருமாலாம் மாயோற்கு ஏற்றிச் சிறப்பித்துக் கூறுதல் அத்திருமாலின் கடவுள் பண்பினைத் தோற்றுவிக்கவேயாம் என்பது திண்ணம்.[15] (தொல். புறத். 60)

'தென்னவன் தொல்லிசை நட்டகுடியொடு தோன்றிய நல்லினத்துஆயர்' வணங்கி வந்த முல்லைநிலக் கடவுள் பின்னர்த் திணை கடந்த கடவுள் ஆயினான்.

பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப்படையில் பாட்டுடைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையன் ஆவான். அவன் திருமால் மரபில் தோன்றிய சோழர்வழி வந்தவன் என்பதனை,

இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முன்னீர் வண்ணன் பிறங்கடை யந்நீர்த்
திரைதரு மரபி னுரவோ னும்பல்[16]
— பெரும்பாணாற்றுப்படை : 29—31

என்ற அடிகள் எடுத்துக்காட்டுகின்றன. இளந்திரையனது நகர வருணனையில் திருமாலினது திருவுந்திக் கமலத்தைப் போன்று பழமையும் சிறப்பும் வாய்ந்தது என்று கூறுவதை நோக்கலாம்.[17] (பெரும்பாணாற்றுப்படை: 403–405). இன்னும் விரிவாகவே அந் நகரெல்லையில் உள்ள திருவெஃகா என்னும் தலத்தில் திருமால் பாம்பணையிற் பள்ளிகொண்டருளியுள்ள திருக்கோலம் விளக்கப் படுகின்றது.

நாடுபல கழிந்த பின்றை நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கண்[18]
— பெரும்பாணாற்றுப்படை : 371—373

என்னும் காட்சியால் அப்பழங்காலத்தில் திருமாலுக்கு ஆலயம் அமைந்துள்ளமை தெளிவாகின்றது.

இவை போன்றே கடலிடத்துள்ள நீரைப் பருகி எழுந்த கார்முகிலுக்கு மாவலி ஊற்றிய நீரை வாங்கி வானளாவ வளர்ந்த கரிய திருமாலை உவமை கூறுதலை முல்லைப்பாட்டில் காண் கின்றோம்.[19] (முல்லைப்பாட்டு 1—3). ஈண்டு நூலின் தொடக்கமே முல்லைநிலக்கடவுளை உவமை காட்டித் தொடங்குகின்றதென்பது குறிப்பிடத்தக்கது.

மதுரைக்காஞ்சியும் 'மாயோன் மேய வோண நன்னாள்' என்று சுட்டுகின்றது. மாயோன் வாமனனாகத் தோன்றிய ஓண நாள் மதுரையில் சிறப்பாக ஏழு நாட்கள் கொண்டாடப்பட்டு வந்தது என்று காண்கின்றோம்.

தொல்காப்பியத்திலும், மதுரைக்காஞ்சியிலும் குறிக்கப் பெறும் 'மேய' என்ற சொல் கவனிக்கத்தக்கது. 'மேய' என்பதற்கு

விரும்பிய, தங்கிய என்பன பொருள். "இதனால், முல்லைத் திணையில் திருமாலுக்குப் பிரீதி உண்டென்றும் அதனால் அங்கே அவர் விரும்பித் தங்கியுள்ளார் என்றும் அறிய வேண்டும்" என்பர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்.[20] (சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், ப. 69)

இனி, பதிற்றுப்பத்தில், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய நான்காவது பத்துள் திருவனந்தபுரத்துக் கோயில்கொண்டுள்ள திருமாலின் வழிபாட்டுச் சிறப்புக் கூறப்பட்டுள்ளது. மற்றும் நற்றிணைக் கடவுள் வாழ்த்துச் செய்யுளில் திருமால் மறைகளால் போற்றப் படும் நிலை சுட்டப்பட்டுள்ளது; அவர் எங்கும் பரந்து நிற்கும் நிலையும், எள்ளுக்குள் எண்ணெய் இருப்பதுபோல் இந்த உலகத்து எவ்வுயிர்மாட்டும் நிற்கும் நிலையும் கூறப்பட்டுள்ளன; அவர் ஆழிதாங்கி நிற்பதுவும், பிறவும் சொல்லப்பட்டிருக்கின்றன.

துழாய் அலங்கல் செல்வன் சேவடி பரவுதல் பதிற்றுப்பத்து நூலுள் சிறப்பித்துச் சொல்லப்படுகின்றது. கடலை ஆடையாக உடுத்த இந்நிலத்து மாந்தர் கைகளைத் தலைமேல் ஏந்தித் தம் குறையை எடுத்துக்கூறி வேண்டிக் கொள்ளும் ஆரவாரம் திசைகளில் ஒருபுறம் ஒலித்தது; தெளிந்த ஓசையையுடைய, மணியையடிப்பவர் கல்லென்னும் ஓசை பட ஆரவாரித்தனர்; திருமால் கோயிலில் வரம் வேண்டி உண்ணாது கிடந்த நோன்பினர் ஒருபுறமாகக் குளிர்ச்சியுள்ள நீர்த்துறையில் நீராடிக் கொண் டிருந்தனர். இக்காட்சியைப் புலவர்,

குன்றுதலை மணந்து குழூஉக் கடலுடுத்த
மண்கெழு ஞாலத்து மாந்த ரொராங்குக்
கைசுமந் தலறும் பூசன் மாதிரத்து
நால்வேறு நனந்தலை யொருங்கெழுந் தொலிப்பத்
தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென
உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி
வண்டூது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்
கண்பொரு திகிரி கமழ்குரற் றுழாஅய்
அலங்கல் செல்வன் சேவடி பரவி[21] — பதிற்றுப்பத்து

என்னும் அடிகளில் காட்டுகின்றார். இதைப் படிக்குந்தோறும் நீர்த்துறை படிந்த பின்னர் அப்பெரியவர்கள் திருமகள் பரவிய மார்பும், கண்களை வெறியோடச் செய்யும் சக்கரப் படையும், நறுமணம் வீசும் பூங்கொத்துக்களையுடைய துளவ மாலையு மணிந்த திருமாலினது திருவடிகளைப் பணிந்து நின்ற காட்சி கண்களைப் பனிப்பச் செய்கின்றது. இங்கே செல்வன் என்றது திருவனந்தபுரத்துத் திருமாலையென்பர்.

இவ்வாறு பாகவதர்கள் வழிபடுவதைக் தமது கண்ணால் கண்டதாகப் புலவர் கூறுவது இவ்வழிபாட்டின் தொன்மையைக் குறிக்கும்.

செல்வக் கடுங்கோ வாழியாதன் என்று பதிற்றுப்பத்து கூறும் மற்றொரு சேர அரசனைக் கபிலர் போற்றும்போது, மாய வண்ணனை மனனுறப் பெற்றவனாகப் போற்றுகின்றார். அவ்வரசன் திருமால்பால் கொண்டிருந்த பேரன்பின் காரணமாக ஓகந்தூர் என்னும் ஊரைத் தேவதானமாகக் கொடுத்தானென்றும் இப்புலவர் கூற்றால் அறிகின்றோம்.

இல்வாற்றால் சங்ககாலத்திலிருந்தே சேரநாட்டில் திருமால் வழிபாடு மிக்கிருந்தது என்று உணரக் கிடக்கின்றது.

புறநானூற்றில் அழகிய நீல மணிபோலும் திருமேனியையும், வானுற வோங்கிய கருடக் கொடியையுமுடைய வென்றியை விரும்புவோனாகிய கண்ணன்,

> மண்ணுறு திருமணி புரையு மேனி
> விண்ணுயர் புட்கொடி விறல் வெய்யோன்
>
> — புறநானூறு, 55 : 5—6

என்ற அடிகளால் குறிக்கப்படுகின்றான்.[22] புகழின் எல்லைக்கு மாயோன் உவமானமாகப் பழம்புலவர்களால் கருதப்பட்டமை, காவிரிபூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்,

> வல்லாராயினும் வல்லுநராயினும்
> புகழ்தலுற் றோர்க்கு மாயோ னன்ன
> உரைசால் சிறப்பிற் புகழை
>
> — புறநானூறு, 57: 1—3

என்று எடுத்தோதுவதால் விளக்கமுறும்.[23]

இவை போன்று புறநானூற்றுப் பல பாடல்களில் திருமாலின் திருவிளையாடலும், திருமால் ஆலிலையில் பொருந்திய வரலாறு போன்றவையும் குறிக்கப்படுகின்றன. (காண்க. பாடல்கள் புறம். 174: 1—5, 198—9, 199—1, 378: 18—24).

புறநானூற்றிலும், அகநானூற்றிலும் இராமாயணக் கதை களையொட்டிய செய்திகள் சொல்லப்படுகின்றன.[24] பாகவத புராண வரலாறொன்றும் அகநானூற்றில் காணப்படுகிறது. நீர்வளம் அறாத யமுனையாற்றில் நெடிய மணலையுடைய அகன்ற துறையில் நீராடிய ஆயர்மகளிர் தண்ணிய தழையை உடுத்திக் கொள்ளக் குருந்தமரம் வளைந்திட மிதித்துத் தந்த கண்ணன்போல என்று உவமை சொல்லும் முகத்தான்,

வண்புனல் தொழுநை வார்மணல் அகன்றுறை
அண்ட மகளிர் தண்டழை உடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல
— அகநானூறு, 59: 4—6

என்று மதுரை மருதனிள நாகனார் கூறுகின்றார்.[25] இதே போன்று பின்னும் சிலவிடங்கள் இந்நூலுள் காணக்கிடக்கின்றன.[26] (அகநானூறு; 175: 15—16; அகநானூறு; 360).

இனி, கற்றறிந்தாரேத்தும் கலித்தொகை தேன் செறிந்த மொழிகளானும் தெள்ளிய உருவகங்களாலுமியன்று கற்றோர் கருத்தைக் கவர்கின்றது. இந்நூலில் கண்ணனது பிள்ளைமை வரலாற்றுச் செயல்கள் கூறப்படுகின்றன.[27] (முல்லைக்கலி; 18-20; நெய்தற்கலி; 214: 1, 134: 1-3).

மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்ப் பகுத்திட்டுப் புடைத்த ஞான்றின் னன்கொன்
மாயோ னென்று[28]
— முல்லைக்கலி; 103: 5-53

என்னும் ஒரு சான்றினைக் காட்டி, விரிவஞ்சி விடுத்துச் செல்லு கின்றேன்.

இவ்வாறே 'ஓங்கு பரிபாடல்' என்று ஆன்றோர் குறிக்கின்ற நூல், பேரின்பமும் சிற்றின்பமும் ஆக இருவகைப் பகுதிகளையும்

கூறிச் சிறப்புறுகின்றது. அதில் 'திருமாற்கு இருநான்கு' என்று கூறப்படுகின்றது; இப்பொழுது ஏழு பாடல்கள் அச்சில் வந்துள்ளன. எட்டுத்தொகை நூல்களுள் விரிவாக உய்த்துணரும் வண்ணம் இந்நூலில் தான் மாலவன் குன்றங்களும், செயல்களும் விளக்கம் பெறுகின்றன.

உலகில் மலைகள் பல உள. அவற்றுள் மக்களுக்குப் பயன் அளிக்குங் குன்றுகள் மிகச் சிலவே. அவற்றுள்ளும் கடவுளர் விரும்பியுறையுங் குன்றுகள் இன்னும் மிகச்சில்வே. அக்குலவரைகள் சிலவற்றுள்ளும் கல்லென அறையுங் கடலும் கானலும் போல வேறுவேறாகிய நிறத்தினையும் பிரிவில்லாத சொல்லும் பொருளும் போல வேறுபடாத எழிலினையுமுடைய மாயோனையும் தம் முன்னோனையுந் தாங்கும் நீண்ட நிலைமையினையுமுடைய புகழான் உயர்ந்த இருங்குன்றம் சிறந்தது. அஃது அரிதிற் பெருந்துறக்கத்தை எளிதிற்பெறச் செய்வது; அதனான் திருமாலிருஞ் சோலையை வழிபடுவோம் என்று புலவர் இதில் கூறுகின்றார்.[29]

இவ்வாறு சொல்லுமிடத்துப் பலதேவரோடு பீதாம்பரத்தை அணிந்த திருமால் நிற்கும் நிலையும், உள்ளன்போடு அவ்விருவரையும் தொழும் முறையும் கூறப்படுகின்றன.[30] இதனால் இதைப் பாடும் இளம்பெருவழுதியார் காலத்தில் பலதேவரோடு கண்ணன் திருமாலிருஞ்சோலையில் கோயில் கொண்டிருந்தனர் என அறிகிறோம். ஆனால் ஆழ்வார்கள் காலத்தில் திருமால் தனியே கோயில் கொண்டிருந்ததாகத் தான் கூறப்படுகிறது. "இப்பாண்டிய குலத் தோன்றல் ஆழவார்களளவு ஆர்வத்தோடு குழைந்து பாடுவது படித்தின்புறத்தக்கது. பரிபாடல் காலத்திலேயே வைதிகமுறைக்கேற்பவும், வைணவ ஆகம முறைக்கேற்பவும் திருமால் கோயில்களில் வழிபாடுகள் நடந்து வந்தன" என்னும் கூற்று சிந்தித்தற்குரியதாம்.[31] (எம். ராதாகிருஷ்ணபிள்ளை, தமிழும் வைணவமும், பக். 18—19)

மாஅ யோயே மாஅ யோயே
மறுபிறப்பு அறுக்கு மாசில்சேவடி
மணிதிகழ் உருபின் மாஅயோயே

என்னும் அடிகளால், நீலமணியின் நிறத்தையொத்த திருமேனி யைக் கொண்டு விளங்கும் மாயோனுடைய திருவடிகளைச் சேர்ந் தவர்கள் 'பிறவிப் பெருங்கடல் நீந்தி' மறுபிறப்பு என்பதே இல்லாமல் – வீடுபேற்று இன்பத்தை அடைவர் என்பது தெரிய வருகின்றது.

இனி, திருக்குறளிலும் 'அடியளந்தான் தாஅயது எல்லாம்' என்றும், 'தாமரைக்கண்ணான் உலகு' என்றும் கூறப்படுகின்றன.[32] "இவற்றினின்றும், லீலாவிபூதி, நித்திய விபூதி என்ற இருவகைப் பெருஞ் செல்வங்கட்கும் அதிபதி திருமாலே என்ற வைணவக் கொள்கை திருவள்ளுவர் திருவுள்ளத்திற்கு உவப்பாயிருந்தது என்பது புலப்படும்" என்பர்.[33] (ஜி. எத்திராஜுலு நாயுடு, பக்திப் பூங்கா, ப. 4). ஆகவே திருவள்ளுவரை வைணவப் பற்றுடை யோர் என்று சொல்ல வைப்பதற்கும், இன்னும் ஒரு படிமேலே போய், திருவள்ளுவரை அச்சமயத்தைச் சார்ந்தவரென்று எண்ண வைப்பதற்கும் திருமால் பற்றிய கருத்துகள் குறட்பாக் களில் கிடந்து மயக்கந் தருகின்றன எனலாம்.

சமண மதக் கொள்கைகளை வலியுறுத்த எழுந்த சிலப்பதிகாரத்தில் திருமால் வழிபாடு போற்றப்படுகின்றது. ஆய்ச்சியர் குரவை இதனை அழகுறக் காட்டுகின்றது. மேலும் இந்நூலில் திருவேங்கடத்தில் திருமால் நின்று கொண்டு காட்சி யளிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

வீங்குநீ ரருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசைப்
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோ னின்ற வண்ணமும் — சிலப்பதிகாரம்

என்னும் அடிகள் நெடியோனின் கோலத்தை நவில்கின்றன.

பௌத்த சமயக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட 'மணிமேகலை'யிலும் 'நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றிய கதை' விவரிக்கப்படுகின்றது.

இந்நூலுள் சமயக் கணக்கர் தந்திறங்கேட்ட காதையுள் வைணவ வாதம் கூறப்படுதலாலும், வைணவ சமயத்தின் முதன்மை அறியப்படும்.

இவ்வாறெல்லாம் கடவுள் வழிபாடு தோன்றிய காலமுதல், திருமால் வழிபாடு வழிவழிப் போற்றப்பட்டு வருவதை இலக்கியங்கள் ஏற்றமுற எடுத்துக் காட்டுகின்றன.

சங்ககாலத்திற்குப் பின்னர், வடநாட்டிலிருந்து தெற்கே பரவிய சைன பௌத்த சமயங்களால் வைணவ சமயம் நலிவு அடையத் தொடங்கியது. சைன பௌத்த சமயத்தார் பின்பற்றி வந்த கடுநோன்புகளும் மத்திர தந்திரங்களும் அக்காலத்து மன்னர்களின் பேராதரவைப் பெற்றன. இதனால் வேள்வி முதலிய சடங்குகளில் பற்றுக் கொண்டொழுகிய வைதிக மதம் தளர்வடைய நேர்ந்த தென்பர்.[34] (ஜி. எத்திராஜுலு நாயுடு, பக்திப் பூங்கா, ப. 8)

பல்லவ மன்னர்கள் புறச் சமயங்களை விட்டு, அகச்சமயங்களாகிய சைவ, வைணவ சமயங்களைத் தழுவினர். மகேந்திர வர்மனும், மாமல்லனும் இச்சமயங்களுக்குப் புத்தாக்கம் செய்யும் பெருமன்னர்கள் ஆயினர். கைலாசநாதர் கோயிலும், வைகுண்டப் பெருமாள் கோயிலும் காஞ்சிபுரத்தில் இருசமயப் பற்றுடனும் எழுந்த இரு விண்ணகரங்களாகும்.

இக்காலத்தில்தான் அத்வைத சமயத் தோற்றுவிப்பாளரான ஆதிசங்கராசாரியார் தோன்றி ஞான மார்க்கத்தை நயமுடன் அறிவுறுத்தி நாடெங்கும் பரப்பி வந்தார்.

## மறுமலர்ச்சி

அன்புநெறியே உய்யு வைக்கும் உயர்ந்த நெறி; முக்திக்குக் குறுக்குவழி பகவத் பக்தியே என்று கருத்துப் பரப்பல் செய்ய முன்வந்த ஆழ்வார்கள், நாயன்மார்கள் தோன்றிய காலமும் இதுதான். இவர்களது பாடல்கள் உறங்கிக் கிடந்த கடவுள் உணர்ச்சியை உலுப்பிவிட்டன; பக்திச்சுவை, கவிச்சுவை, இசைச் சுவை ஆகிய முத்திறமும் சேர்ந்து மக்கள் உள்ளத்தில் ஓர் எழுச்சியை உண்டாக்கி மறுமலர்ச்சியை மலர்வித்தன. சங்ககாலம் ஒரு தங்க நிகர் காலமென்றால் இந்தப் பக்தி இயக்கம் மற்றுமொரு பொற்காலத்தை உருவாக்கியது என்று துணியலாம்.

## ஆழ்வார்கள்

வைணவ சம்பிரதாயத்தின்படி வைணவ சமயத்தைச் சிறப்பித்தவராகக் கருதப்படும் பெரியோர்கள் 'ஆழ்வார்கள்'

என்றும் 'ஆசார்யர்கள்' என்றும் இருவகைப்படுவர். வைணவம் எப்படிப் பரவியது என்பதை ஒரு கூற்று சிறப்பாக விளக்குகின்றது.

> ஸ்ரீமந் நாராயணன் ஒரு கருங்கடல். சுவாதந்திரியம் என்ற உப்பு கலந்தது. நம்மாழ்வார் என்ற மேகம் கிரகித்து அதன் சம்மந்தத்தால் உப்பு அகன்று காருண்யமாகிய நீரை நாதமுனி என்ற மலையில் பெய்விக்க உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி என்கிற இரு அருவிகள் மூலம் அந்த நீர் ஆளவந்தார் என்ற நதியில் கலக்கிறது. அதிலிருந்து இராமானுசர் என்ற ஏரிக்கு வந்து அவரால் ஏற்படுத்தப்பட்ட 74 சிம்மாசனாதிபதிகள் ஆகிற மதகுகள் மூலம் சேதனப் பயிருக்கு வைணவம் என்ற நீர் பாய்ச்சப்படுகிறது.[35]
>
> (காழியூர் சேஷாத்திரி மணவாளன், இராமாநுசர், ப. 119)

திருமாலை வழிபட்டு வைணவ சமயத்திற்குப் புத்துணர்ச்சி அளித்த இறைநெறியாளர் 'ஆழ்வார்கள்' எனப்படுபவர். 'ஆழ்வார்கள்' என்ற சொல்லுக்கே "இறைவன் குணங்களில் ஆழ்ந்து ஈடுபட்டவர்" என்பது பொருள் என்பர். ஆம்! இவர்கள் பெருமானாகிய திருமாலது மங்கள குணங்களாகிய அமுத வெள்ளத்தில் ஈடுபட்டு ஆழ்ந்து இருந்தவர்களாதலால் ஆழ்வார்கள் எனப் பெயர் பெற்றனர். இறையன்பில் ஆழங்கால் பட்டவர்கள் இவர்கள் என்பது பொருந்தும். "ஒப்புயர்வற்ற இவ் வாழ்வார்கள் உயர்வற வுயர்நல முடையவனும், அயர்வறு மமரர்கள் அதிபதியு மான சர்வேஸ்வரனால் பக்தியும் ஞானமும் அருளப்பெற்று உல குய்ய வந்த உத்தமர்கள் என்பது வைணவ சமயப் பெரியோர்களின் சித்தாந்தம்" என்பது நோக்கத்தக்கது.[36] (காழியூர் சேஷாத்திரி மணவாளன், இராமாநுசர், ப. 119).

இவர்கள் 'ஊன் வாட உண்ணாது உயிர் காவலிட்டு உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து தாம் வாட வாடத் தவம் செய்ய வேண்டாம்' என்ற கொள்கையினை யுடையவர்கள். ஆகவே மக்களை இவர்களுடைய இந்தக் கொள்கை ஆட்கொண்டது. மக்களுக்கு இவர்களால் அமைதியான உலக வாழ்க்கைக்குத் தெய்வ அருள் இன்றியமையாதது என்ற உணர்ச்சி உண்டாயிற்று.

நாவுண்டு, நீயுண்டு, நாமம் தரித்தோதப்
பாவுண்டு; நெஞ்சே! பயமுண்டோ? - பூவுண்டு
வண்டுறங்கும் சோலை மதிளரங்கத்தே உலகை
உண்டுறங்குவான் ஒருவன் உண்டு

என்ற மெய்ம்மையை மக்கள் இடையில் இவர்கள் எடுத்துப் பாடிய போது, துன்புற்ற மக்களின் தீராத இடுக்கண் - மனப்போராட்டம் ஆகியவை தீர வழி கிடைத்தது என்ற நம்பிக்கை அவர்களுக்கு ஏற்பட வழி வகுத்தனர்.

மனமாசற்ற நிலையில் மெய்யன்புடன் திருமாலைச் சரண் அடைந்தால் முக்தி பெறலாம் என்பது ஆழ்வார்களின் கொள்கை. இவர்கள் தாம் கண்டுணர்ந்த கொள்கைகளையும், பகவத் கீதையின் எடுத்துரைகளையும் (உபதேசம்) தங்களின் அனுபவங்களையும் திவ்வியப் பிரபந்தப் பாடல்களாக அருளிச் செய்தனர்.

ஆழ்வார்களின் வைணவ சமய மறுமலர்ச்சி இயக்கம் 'சான்றோருடைத்தான' தொண்டை நாட்டில் தொடங்கித் தென் பாண்டி நாடு வரை பரவியது. பின்னர் வடநாடுகளிலும் சென்று சேர்ந்தது. இவர்களின் தொண்டு காரணமாக வைணவர்கள் இவர்களை 'அவதார புருடர்கள்' எனக் கருதி வழிபடுவர். இவர்களுடைய வரலாறு கூறும் வரலாற்று நூற்கள் பல. அவற்றுள் இராமாநுசர் காலத்திருந்த கருடவாகன பண்டிதர் செய்யுள் வடிவிலியற்றிய 'திவ்யசூரி சரிதை'யும் நம்பிள்ளை காலத் தவரான பின்பழகிய பெருமாள் சீயர் மணிப்பிரவாள நடையில் எழுதிய ஆறாயிரப்படி குருபரம்பரையும் காலத்தால் முற்பட்டவை எனலாம்.

ஆழ்வார்கள் பன்னிருவர். இப்பன்னிருவரையும் வரிசைப் படுத்துமிடத்துப் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் முதலாழ்வார்களென முன்னிற்கின்றனர். ஆகவே, முதலாழ்வார்கள், திருமழிசையார், குலசேகராழ்வார், பெரியாழ் வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடிகள், திருப்பாணாழ்வார், திருமங்கை மன்னன், நம்மாழ்வார், மதுரகவி என்பதே கால வரையறை பற்றிய முறை எனக்கொள்ளலாம் என்பர்.[37] (ஈ. எஸ் வரதராச ஐயர், தமிழ் இலக்கிய வரலாறு (கி. பி. 1 முதல் 1100) ப. 305).

இவர்களுள் பொய்கையாழ்வாரை வைணவ சமயத்தின் விடிவெள்ளி என்பர். ஏனெனில் ஸ்ரீ பாஷ்யம் செய்த இராமாநுசர் பொய்கையார் ஏற்றிய ஞான தீபத்தைத் தமக்கு வழிகாட்டியாகக் கொண்டார் என்கிறார் அமுதனார். முதலாழ்வார்கள் மூவரையும் வைணவ சமயத்தின் ஆதி கவிகள் என்றும் கூறலாம் என்பது பொருந்தும்.[38] (எம். ராதாகிருஷ்ண பிள்ளை, பிற்கால வைணவம், ப. 14).

ஐந்து வகை ஞானத்தைப் பற்றி (அர்த்த பஞ்சக ஞானம்) வைணவ பூருவர் கூறுவர். அவை ஸ்வஸ்வரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம் என்பனவாம்.

அர்த்தபஞ்சகம் என்றால் அறிய வேண்டிய ஐந்து பொருள் கள் என்பது பொருள். அவற்றை,

ஜீவாத்ம ஸ்வரூபம் – உயிர் நிலை
பரமாத்மஸ்வரூபம் – இறை நிலை
உபாயஸ்வரூபம் – நெறி
விரோதிஸ்வரூபம் – தடை
புருஷார்த்தஸ்வரூபம் – வாழ்வினை

என்று வேறொரு வகையில் விளக்கலாம்.

இவற்றுள் உயிர்நிலையாளர் நித்யர், முக்தர், பக்தர், கேவலர், முமுக்ஷு என ஐவகைப்படுவர். திருமகள் கேள்வனாம் நாராயணன் ஞான உருவமும் ஞானத்தைக் குணமாக உடையவனு மாவான். ஆகவே அவ் இறைவனுக்கே தொண்டனாகவும் (சேஷபூதனும்), பிறருக்கு வசப்பட்டவனாகவும் (பரதந்திரனுமா யுள்ளவனும்) உள்ளவன் ஆத்மா. அவனே 'ஆத்ம ஸ்வரூபம்' (உயிர் நிலை) எனப்படுவான்.

பரஸ்வரூபம் இறைநிலையாகும். இறை நிலை பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என ஐந்து வகைப்படும்.

பரத்துவம் – இறைவன் வைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை
வியூகம் – பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் நிலை

விபவம் – இராம, கிருஷ்ணாதி அவதாரங்கள்

அந்தர்யாமி – அவன் நமக்கு உள்ளும் புறம்புமாக எழுந்தருளி யிருக்கும் நிலை

அர்ச்சை – திவ்ய தேசங்களில் காட்சியளிக்கும் மூர்த்திகள்

''ஆவரண ஜலம்போலப் பரத்வம்; பாற்கடல் போலே வியூஹம்; பெறுக்காறு போலே விபவங்கள்; அதிலே தேங்கின மடு அர்ச்சாவதாரம்'' என்கிறார் ஸ்ரீவசன பூஷண ஆசிரியர்.

இறைநிலை ஐவகை நிலைகளையும் குறிப்பனவாக இருந்தாலும் 'அர்ச்சையே' (இவ்வுலகத்தில் கோயில் கொண்ட நிலை) சிறந்தது என ஆழ்வார்கள் பாடல்கள் வற்புறுத்துகின்றன. இதற்குக் காரணங்களை ஸ்ரீமணவாள மாமுனிகள் நன்கு விளக்குகின்றார். அப்போதே நீர் பருக வேண்டுமென்ற தாகவிடாய் உடையவனுக்குக் கொட்டும் குந்தாலியும் கொண்டும் கல்லினால் அல்லது குடிக்கக் கிடையாதபடி பூமிக்குள் பதிந்து கிடக்கும் நீர் பயனற்றது அல்லவா? அவ்வாறுதான் 'அந்தர்யாமித்வம்'. பூமிக்கு வெளியே பெருகிக் கிடக்கிற ஆவரண நீர் போன்றது 'பரத்வம்', அந்த நீரும் குடிக்க உடனே கிடைக்காது. பூமியில் இருந்தாலும் பாற்கடல் நீர் கிட்டாத தொன்று அது போன்றது 'வியூக' நிலை.

'அவதாரங்கள் பெருக்காறுகளான பெருமழை போன்றவை. அந்தந்தக் காலத்தில் அவ்வப்போது பொழிந்து பயன் அளித்தவை. அவதாரத்தைப் பெருமழையாகக் கொண்டால் அந்த மழைநீரைத் தேங்கச் செய்து பின்னாளிலும் மக்களுக்குப் பயன்படுத்திக் கொண்டிருந்த நீர்நிலையாகக் கோயில்களையும், கோவில்களில் உள்ள உருவங்களையும் கருத வேண்டும். அதுவே கண்ணுக் கிலக்காக நின்று பயன் தருவது என்பது கருத்து.

ஈண்டுத் தோன்றிய ஆழ்வார்கள் மரணமிலாப் பெருவாழ்வு படைத்தோர்; (நித்ய சூரிகளின் அமிசம்). இவர்கள் இறைவனாம் திருமாலால் மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்கள்; திருமாமகள் கேள்வனைத் தமது நெஞ்சமென்னும் உள்ளக் கண்ணால் கண்டு மகிழ்ந்தவர்கள்; அந்த அனுபவம் உள்ளத்தே அடங்கப் பெறாமல் பெருக்கெடுத்துப் புறம்பே வழியச் சொல்லால், பாமாலைகளால் பெருமானுக்குச் சூட்டிப் பரவசப்பட்டவர்கள். இவர்களின் பாடல்கள் 'அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடினான்' என்று

கூறும் வண்ணம் இறையருளால் இசைக்கப் பெற்றவை. ஊனக் கண்ணால் இறை வீற்றிருக்கும் மூர்த்தங்களைக் கண்டு, ஞானக் கண்கொண்டு அவற்றை இறைவலிமையாலே இன்பமயமாக்கி, இறுதியில் இறைவனுக்கே இன்பக் களிப்பூட்டும் வண்ணம் அமைந்தவை. இத்தகு பக்திப் பூங்காவாக ஆழ்வார்களைக் கொள்ளலாம்.

ஆண்டாள்

அந்தப் பக்திப் பூங்காவில் மலர்ந்து நல்ல மணம் வீசி வையம் புகழ வாழ்ந்த பெண்கொடியே ஆண்டாள் ஆவார். இவர் பெரியாழ்வாரின் பெண் கொடியெனத் திகழ்ந்தவர். இவள் கமலமுடன் வில்லிபுத்தூர் விளங்கவந்த விளக்காவாள்; காரார் நற்றுழாய்க் கானத் தவதரித்தவள்; விமலமாந் திரு ஆடிப்பூரத்தாள்; விட்டுணுசித்தர் வளர்த்தெடுத்த விளங்கிழையாள்; அமலை திருப்பாவை ஐயாறளித்தருளியவள்; ஆகநூற் றெண்ணைந்து மூன்றுரைத்தவள்; அமுதனாம் அரங்கனுக்கே மாலையிட்டவள்.

ஆண்டாளுடைய பெருமை அளவு கடந்தது. இறைவனுக்கே பணிபூண்ட ஆழ்வார்களில் ஒருவராயும், இறைவனுடைய தேவிமார்களில் ஒருத்தியாயும் இருக்கும் இருப்பு இவளுக்கே உரியது.

ஆழ்வாராய்க் கொண்டு பாமாலை சூட்டியும், தேவியாய்க் கொண்டு பூமாலை சூடியும் அநுபவித்த தனி அனுபவம் ஆண்டாள் ஒருத்தி உடையதே என்பது உண்மை[39] (திருப்பாவை மாலை). பூமாலையைத் தாம் அணிந்து பெருமாளுக்கு அணிவித்த ஆழ்வாரும் இல்லை; பாமாலை சூட்டிய தேவியும் இல்லை. ஆதலால்தான் இருடிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் எத்தனை வாசியோ அத்தனை வாசி ஆழ்வார்களுக்கும் ஆண்டாளுக்கும் என்று பூர்வாசாரியர்கள் வியந்து போற்றினர்.

> பெரியாழ்வார் பெண்பிள்ளையாய் ஆண்டாள் பிறந்த
> திருவாடிப் பூரத்தின் சீர்மை — ஒருநாளைக்
> குண்டோ மனமே யுணர்ந்துபார் ஆண்டாளுக்
> குண்டாகி லொப்பிதற்கு முண்டு[40]
>
> — உபதேசரத்தினமாலை, 23.

என்று உபதேசரத்தினமாலை (23) உணர்ந்து உரைக்கின்றது.

ஆண்டாள் பிறப்பு:

செந்தமிழ் தழைத்தோங்கிய நாடு பாண்டியநாடு. முச்சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த திருநாடு அது. புலமையும் செல்வமும் வாய்ந்த பலரையும் வளர்த்த செவிலித்தாய்த் திருநாடு அது; புலமைச் செல்வியர் பலரையும் பெற்று இன்புறும் பெரும்பேற்றைப் பெற்ற இனிய நாடு பாண்டிய நாடு. அந் நாட்டின்கண் இறைத் தன்மை இயற்கையிலேயே பெற்ற ஊர் ஸ்ரீவில்லிபுத்தூர். இவ்வூர் வைணவ சம்பிரதாயத்திற்கே அணியென மிளிர்ந்தது. மின்னனைய நுண்ணிடையார் கூந்தலில் நுழைந்த வண்டு இசை பாடும் வில்லிபுத்தூர் என்று பெரியாழ்வாரால் புகழப்பெறும் ஊர்;[41] அழகிய நடையுள்ள அன்னங்கள் எங்கும் சூழ்ந்து விளையாடும் வில்லிபுத்தூர் என்று பின்னாளில் ஆண்டாளால் சிறப்பித்துக் கூறப்பெற்ற ஊர் ஆகும்.[42] தென்பாண்டி நன்னாட்டுத் திருப்பதிகள் பதினெட்டனுள் எட்டாவது இது, மல்லிநாடு எனப் பெயர் பெற்றது. வேடுவன் வில்லி என்பான் அதைப் புதிதாகக் கண்டமையின் வில்லிபுத்தூர் என்று பெயர் அமைந்தது.

பொருப்பன்ன மாடம் பொலிந்து தோன்றும் புதுவை[43]
— நாச்சியார் திருமொழி, 1:10

பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த புதுவை[44]
– ஷை, 3:10

வேதவாய்த் தொழிலார்கள் வாழ்வில்லி புத்தூர்[45]
— ஷை, 2:10

என்றெல்லாம் எடுத்தியம்பும் பேறுபெற்ற தலம் அது. சுருங்கக் கூறின்,

கோதை பிறந்தஊர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந் தோன்றுமூர் — நீதியால்,
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைக ளோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்

என்று சொல்லிவிடலாம். அத்தகைய வில்லிபுத்தூர் நகரத்தை விளங்கவைத்தவர் ஆண்டாள்.

விட்டுணுசித்தர் என்னும் பெரியாழ்வார் அந்த ஊரில் பெருமானுக்குத் திருத்துழாய்ப் பணி இயற்றுவதை வழக்கமாகக்

கொண்டிருந்தார். அவர் ஒருநாள் மலர்வனத்தில் மண்ணைக் கிளறும்பொருட்டுப் பணிசெய்து கொண்டிருந்தபோது, அந்த மலர்வனத்தில் ஒருபுறம் பச்சைப் பசேலென்று செழித்து அடர்ந்து வளர்ந்திருந்த திருத்துழாய் அடியில் மிக்க ஒளியுடன் கூடிய ஒரு பெண்மகவு இருத்தலைக் கண்டார். பெரியாழ்வார் அம் மகவினை மகிழ்ந்தெடுத்து அதனைத் தம் மகளாகவே கருதிக் 'கோதை' என்று பெயரிட்டு வளர்த்து வருவாராயினார்.

'ஆடிப்பூரம் மேன்மேலும் மிக விளங்க விட்டுசித்தன் தூய திருமகளாய் வந்து'[46] (தேசிகமாலை, பிரபந்தசாரம், 10). 'திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள்'[47] (ஸ்ரீஆண்டாள் சந்திரகலா மாலை-2) 'அர்ச்சாவதாரத்தை ஆதரித்து ஏத்து திரு வாடித் திருப்பூர நாள் ... ... புதுவையில் ... ... வந்து அவதரித்து'[48] (ஷை) போன்ற கூற்றுகள் ஆண்டாள் ஆடித் திங்கள் பூரநட்சத்திரம் கூடிய செவ்வாய்க்கிழமையில் தோற்றம் கொண்டார் என்று விளங்க வைக்கின்றன.

குருபரம்பரைகளில் ஆண்டாள் தோன்றிய திங்களும், நட்சத்திரமும் காணப்படுகின்றனவே அன்றி, ஆண்டு காணப் பட்டிலது. எனவே ஆராய்ச்சியாளர்களுக்கிடையே இவரது காலம் பற்றிக் கருத்து வேறுபாடு நிலவுகின்றது.

> பிள்ளைகளெல்லாம் பாவைக்களம் புக்கார்
> வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று
> புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்[49]
>
> — திருப்பாவை 13:3—5

என்னும் அடிகளில் 'வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று' என்ற ஒரு குறிப்புக் கிடைக்கின்றது. இந்தக் குறிப்பினை ஆராய்ந்து மு. இராகவய்யங்கார் "கி.பி. 716ஆம் ஆண்டு திருவாடிப்பூரத்தில் ஆண்டாள் அவதரித்தாள் என்றும், கி.பி. 713இல் அதாவது தமது பதினைந்தாவது வயதில் திருப்பாவையை இயற்றினார்" என்றும் கூறுகின்றார்.[50] (மு. இராகவையங்கார், ஆழ்வார்கள் காலநிலை, ப. 81) இந்தக் கருத்தினையே 'இலக்கிய சாசன வழக்காறுகள் மீண்டும் வலியுறுத்துகின்றன.[51] (மு. இராகவையங்கார், இலக்கண சாஸன வழக்காறுகள், ப. 125).

இவருடைய கருத்தினையே ஈ. எஸ். வரதராஜ அய்யர்[52] (தமிழ் இலக்கிய வரலாறு, பக். 283—284), இ. தேனையா,[53] (ஸ்ரீவில்லிபுத்தூர் தல வரலாறு, பக். 48—49), பண்டித பு. ரா. புருஷோத்தம நாயுடு,[54] (கலைக்களஞ்சியம் தொகுதி 1, ப. 362) ஆகியோர் ஏற்றுக் கொண்டனர்.

டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஆண்டாள் வாழ்ந்த காலம் கி.பி. 850ஐச் சுற்றிய ஆண்டுகளாகக் கொள்வர்.[55]

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தை வெளியிட்ட மயிலை மாதவதாசன் "வெள்ளியெழுந்து வியாழ முறங்கிய" நான்கு காலங்களைக் கணக்கிட்டுத் திருப்பாவை பாடிய காலம் கி.பி. 885ஆம் ஆண்டென வரையறுத்துக் கூறுகின்றார்.[56] (நாலாயிரதிவ்ய பிரபந்தம், ப. 45). பாலூர் கண்ணப்ப முதலியார் பெரியாழ்வார் வாழ்ந்த காலம் மதுரையில் ஆட்சி புரிந்த வல்லப தேவன் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டு என்று கூறி இதனை நிலைநாட்டுகின்றார்.[57] (திருவெம்பாவை திருப்பாவை, திருப்பள்ளி யெழுச்சி மூலமும் விளக்க உரையும், ப. 3) இதற்கும் முன்னர் ஆராய்ந்தவர் கா. சுப்பிரமணிய பிள்ளை ஆவார்.

"திருவல்லவ தேவனென்னும் பாண்டியன் அக்காலத்தில் மதுரையில் ஆட்சி செய்ததாகத் தெரிகின்றது. அவ்வரசன் கி.பி. 830 முதல் 862 வரை அரசு புரிந்தான். ஆதலால், ஆண்டாள் காலத்தைக் கலியுகம் 98ஆவது ஆண்டு என்று குறிக்கும் வைணவ சம்பிரதாயம் சரித்திரத்திற்குப் பொருந்துவதில்லை"[58] (கா. சு. பிள்ளை, நூல், ப. 1) என்று கூறும் கருத்து ஈண்டுச் சிந்திக்கற்பாலது. ஆண்டாள் எட்டாம் நூற்றாண்டில் அவதரித்தார் எனுங் கொள்கை நேரிதாகும்.

## பெயர்

திருத்துழாய் அடியில் கிடந்தபோது அம்மகவின்மேல் உதிர்ந்த மலர்களில் வண்டுகள் மொய்த்தலும், இசைபாடி எழுதலுமாயிருந்தமையின் அதற்குச் 'சுரும்பார் குழற்கோதை' எனப் பிள்ளைப் பெயர் வைத்தார்.

தான் சூடிக் களைந்த மாலையினை இறைவனுக்குச் சூட்டியதால், 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார்' எனப்பட்டார்.

'சூடிக்கொடுத்த நாச்சியார்' 'சூடிக்கொடுத்த பொற்கிளி' என்ற பெயர்களும் உண்டு. எல்லா உயிர்களையும் தன் அடிக்கீழ்ப் படுத்தி ஆள்பவன் ஆண்டவன். அவனையே தனக்குரிமைப் படுத்தி ஆண்டாள் ஆதலின் "ஆண்டாள்" என்றும் வழங்கப் பட்டார்.

" 'ஆண்டாள்' என்ற பெயர் அவளுக்கு எப்போது ஏற்பட்ட தென்பது விளங்கவில்லை." ஆண்டவன் தேவியாதல் பற்றி ஆண்டாள் என்ற பெயர் வந்திருத்தல் கூடும்" என்பார் கா. சுப்பிரமணிய பிள்ளை.[59] (ஆண்டாள் வரலாறும் நூலாராய்ச்சி யும், ப. 2)

இன்னும் திருப்பாவைச் செல்வியார், பெரியாழ்வார் திருமகள், விஷ்ணுசித்தன்மகள் என்னும் பெயர்களும் காரண காரியப் பெயர்களாகக் காணக் கிடைக்கின்றன.

## பிள்ளை விளையாட்டு

'கோதை' சின்னஞ்சிறுமியாக, சிற்றாடை கட்டும் பருவத்தினளாய், மழலை மாறாமல் விளையாட்டிலும், கேளிக்கையிலும் பொழுதுபோக்கினாள். சிற்றில் செய்து மண்ணால் செய்த பாண்டங்களைக் கொண்டு, மரப்பாச்சி பதுமை வைத்து, மண்சோறு சமைத்து யாவருக்கும் பகிர்ந்து கூட்டாஞ் சோறு சமைக்கும் பருவத்தினள். இப்பருவத்தில் கோதையின் செயல்கள் யாவும் அருமையாக இருத்தலின் கேள்விக்குறியாகவும், வியப்புக்குறியாகவும், பார்ப்போருக்கு அமைந்தன. சிற்றில் கட்டி விளையாடும்போதும், அரங்கனுக்குத் தனி அறை அமைகின்றது; அங்குப் பெருமான் அமர்கின்றான்: அவனுடைய சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில் ஆகிய கருவிகள் வரையப்பட்டுள்ளன. இக் காட்சியைப் பெரியாழ்வார் நோக்குகின்றார். அவருடைய இந்த வியப்பு இவர்தம் பாடல்களில் ஒலிக்கின்றன.

செய்ய நூலின் சிற்றாடை
செப்ப னுடுக்கவும் வல்ல ளல்லள்[60]

— பெரியாழ்வார் திருமொழி 3:7:1

பொங்கு வெண்மணற் கொண்டு
சிற்றிலும் முற்றத்து இழைக்கலுறில்
சங்க சக்கரம் தண்டுவாள்
வில்லு மல்லது இழைக்கலுறாள்[61]
— பெரியாழ்வார் திருமொழி, 3:7:3

என்று பாடி இறும்பூது எய்துகின்றார். இவ்வாறு கோதை யாருக்கு நன்னெறியும், ஒழுக்கமும், ஓங்கியுலகளந்தான்பால் உயர்ந்த சிந்தனையும் இயல்பாகவே அமைகின்றன.

பேதை நீங்கிப் பெதும்பை

குழவிப் பருவம் மாறிக் குமரிப் பருவம் அடைகின்றாள். வைகறையில் துயிலெழும் பழக்கம் வாய்க்கின்றது. தந்தையுடன் மலர்வனம் புகுந்து, நீர் பாய்ச்சுதல், மலர் பறித்தல், மாலை தொடுத்தல் ஆகிய பணி செய்து காலம் பயனுடையதாகின்றது. இந்நேரத்திலெல்லாம் உள்ளக்கிழியில் மாயவன் உருவம் தீட்டப் பெறுகின்றது. ஆயர்பாடியில் வெண்ணெயை அள்ளியுண்ட கண்ணனின் கோலம் கருத்தில் உதிக்கின்றது. அவனை அடைதற் கேற்ற வழிகளை மனம் ஆராய்கின்றது. விரைந்து அடைய மனம் உந்துகின்றது; அவ்விரைந்த மனம் கோதைக்குப் பேருக்கத்தை அளிக்கின்றது.

எனவேதான் இறைவனுக்கு இடப்பெறும் பொருள்களைக் கண்ணுறும்போது அவை தனக்கும் உரிமையுடையன என்ற உரிமைச் சிந்தனை — எண்ண உறுதி ஏற்படுகின்றது. அந்த முறையில்தான் தந்தை, வடபத்திர சாயிக்கெனக் கட்டி வைத்த மாலைகளில் கோதையின் கருத்துச் சேர்கின்றது. உரிமை யெண்ணம் முந்துறுத்த, அதைத் தான் அணிந்துகொள்ளும் துணிவு பிறக்கின்றது; எண்ணம் செயலாகின்றது.

திருமாலையே கணவனாகப் பெற வேண்டுமேயல்லாமல் மனிதர் ஒருவரையும் மணப்பதில்லை என்ற உறுதியான கொள்கை வலுப்பெறுகின்றது. ஆகவே திருமாலவனுக்கே தன்னை மனைவியாகப் பாவித்துத் தன் தந்தையார் கோயிலுக்குத் தொடுத்து வைத்திருக்கும் மாலையைத் தான் அணிந்து ஆடியில் பார்த்து, 'அவனுக்கு நேர் ஒவ்வா திருப்பேனோ; ஒத்திருப்பேனோ'

என்று ஆய்ந்து ஆராய்ந்து அழகுபார்த்து விட்டு மாலையைத் தன் தோளினின்றும் சுருட்டி வைத்துவிடுவது வழக்கமாயிற்று. தந்தையின் வரவினைக் கடிதென உணர்ந்து, மாலைகளைக் களைந்து, குடலையில் இட்டு எப்போதும்போல் இருந்துவிடுவார். ஆதலின், இந்த அன்புச் செயலைப் பலநாட்கள் பெரியாழ்வார் அறிதற்கே வாய்ப்பில்லாமற் போயிற்று.

இங்ஙனம் நாடோறும் நடைபெற்றது. இவர் கோதை யாகவே, கோதை சூட்டித் தரத் தொடங்கிய நாள்தொட்டு மலர்மாலை பின்னும் புதிய மணம் வீசி, மலர் வாடினும் இயற்கையோடு இயைந்த மணம் குறைதல் இல்லை. இது வழிபடுவாருக்கு வியப்பை அளித்தது; ஆயினும் பெரியாழ்வாரின் பக்தியின் மேன்மை அது என்று எண்ணி அவர்பால் அர்ச்சகருக்கு அளவில்லா மதிப்பு உண்டாயிற்று.

ஒருநாள் கோதை தன் ஆடை அணிகளை யணிந்து, மாலைகளையும் சூட்டி, மாலவனோடு ஒப்புமை கருதி 'உவந்து ஏற்பானோ' என்றெண்ணிச் சிந்தித்திருந்தார். தன்னை மறந்து, தன் சூழலை மறந்து, தந்தை வந்து விடுவாரே என்பதையும் மறந்து, நங்கை தலைவன் தாளையும், தோளையும் எண்ணி யிருக்கின்றார். பெரியாழ்வார் வந்து இவருடைய கோலத்தைக் காணுகின்றார். கண்டு நடுங்கினார். தம் மகளாரைச் சினந்தார்; சிறிதே சினந்தார். கோதை கவலையை முகத்தில் தேக்கி வாய்பேசாது வாளாவிருந்த நிலை அவரை வாட்டுகின்றது. "இத்தகைய செயலை இனிச் செய்யாதே! அருட்கடலாகிய பெருமான் நீ அறியாது செய்த பிழையைப் பொறுப்பானாக!" என்று தம் மகளைத் தேற்றுகின்றார்.

கோதையாரும் தம் குற்றம் உணர்ந்தார். ஆழ்வார், சூடிய மாலைகளை இறைவனுக்குச் சூட்ட விரும்பினாரல்லர்; புதிய மலர்களைக் கொண்டு வந்து கட்டிக் கொண்டிருக்கும்போது, ஆடியில் கண்ட சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் அழகுவாய்ந்த திருவுருவம் மனக்கண்ணில் தோன்றுகின்றது. அவரை மருட்சியும், தெருட்சியும் ஒருங்கே அலைக்கழிக்கின்றன. பொழுதோடு மாலை யைக் கோயிலுக்குக் கொண்டு செல்லுகின்றார். மாலைகள்

அர்ச்சகரால் அன்பின் மாறுபாடு தோன்றாமல் சூட்டப்பட்டன. ஆயினும் மலர் மாலையில் வேறுபாடு தோன்றியது. ஆழ்வாரின் மனம் தம் மகள் இழைத்த பிழையை எண்ணி மனக்கலக்கம் கொள்ளுகின்றது.

அன்றிரவு உறக்கம் கொள்ளவில்லை; பெரும்பொழுதை உறங்காமல் கழித்ததனால் சிறிது நேரம் கண்ணயர்ந்தார். இறைவனுடைய தோற்றம் இவருக்குத் தெரிகின்றது. "ஆழ்வாரே, இன்று ஏன் எனக்கு மணமற்ற மாலைகளை இட்டீர்" என இறைவன் வினவுகின்றான். ஆழ்வார் பதிலேதும் கூறாது பிழை பொறுத்தருளக் கண்ணாலும், வாய்பேசாது அமைதி காத்தும், வேண்டுகின்றார். ஆண்டவன் பெரியாழ்வாருக்குக் கோதையின் அருமை பெருமைகளை எடுத்துரைத்து, "இனி அவள் சூட்டிய மாலைகளையே எமக்கு அணிவிக்க வேண்டும்" என்கின்றான்.

இந்நிகழ்ச்சியில் இருவகைப்பட்ட கருத்துக்கள் உள. புதிய மாலையைக் கட்டி இறைவனுக்கு அணியச் செய்தார் ஆழ்வார் என்பதொரு செய்தி; சினங்கொண்ட அவர் கோதை சூட்டிய மாலையைப் பெருமானுக்குச் சூட்டாமல் இருந்துவிட்டார். அன்றிரவில் அவருடைய கனவில் பெருமாள் எழுந்தருளி விட்டுணு சித்திரை நோக்கித் தமக்கு மாலை சாத்தாத காரணமென்ன வென்று வினவ, அவர் கோதை அதனைத் தன் குழலிலே முடித்த செய்தியைக் கூறவும், பெருமாள் அவள் முடித்த மாலை தான் மணமிக்கதாய், விரும்பத்தக்கதாய் இருக்கிறதென்றார்[62] (கா. சு. பிள்ளை, ஆண்டாள் வரலாறும், நூலாராய்ச்சியும், ப. 3) என்பது மற்றொரு செய்தி.

எது எங்ஙனமாயினும் இறைவன் பெரியாழ்வார் கனவில் தோன்றியதும், சூட்டிய மாலை கேட்டதும் யாராலும் மறுக்கப் படாத செய்திகளாகும்.

### சூடிக்கொடுத்த நாச்சியார்

இறைவன் பணித்த வண்ணமே கோதை சூடிய மாலை அன்றிலிருந்து அவனுக்குச் சூட்டப்பட்டது. தம் மகளார் கோதை திருமாலின் தேவியாரோவென்று பெரியாழ்வார் ஐயுற்றார்.

தாம் வளர்த்த பொற்கொடியின் பொற்பினை உன்னி உன்னி உள்ளம் உருகினார். தாம் பிறந்ததன் பயனை அன்றே அடைந்ததாய் ஆனந்தம் அடைந்தார். "என்னை ஆண்டாள் இவளே" எனத் தம் மகளிடம் இயம்பி, உச்சி மோந்தார். நடந்த நிகழ்ச்சிதனை மகளார்க்கு விவரித்தார். அப்போது கோதையாரும் பரமன் தம்மாட்டுக்கொண்டுள்ள ஆர்வத்தை அறிந்தார்; அருளை உணர்ந்தார்; உணர்ந்ததன் பயனாய் உவகை கொண்டார்.

ஊரெல்லாம் இச்செய்தி காற்றினும் கடுகிப் பரவியது. ஊரிலுள்ளோர் யாவரும் வடபத்திரசாயிப் பெருமானை வாழ்த்தி வணங்கினர். இறைவனைப் பரவும் ஒலியே எங்கும் நிறைந்தது. இச்செயல்கள் ஆண்டாளுக்கு மகிழ்ச்சியையும், அதே நேரத்து ஆற்றாமையையும் வளர்த்தன. சான்றோர் இவரைச் 'சூடிக் கொடுத்த நாச்சியார்' 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார்' எனப் போற்றினர். அதிலிருந்து அப்பெயர் நின்று நிலவுகின்றது அந் நீள் பெயர் வழங்குகின்றது.

## வாழ்வின் மாற்றம்

பெரியாழ்வார் 'பெருமைமிகும் ஆண்டாளைப் பெற்ற பிரான்' ஆனார். 'தொடைசூடிக் கொடுத்தாளைத் தொழுமப்பன்' எனப்பட்டார். அதனால் ஆழ்வார் நாள்தோறும் அருமை மகளாரைப் பெருமையோடு ஆடை அணிகளால் ஒப்பனை செய்து, மாலைகளையும் சூட்டி அழகு பார்த்தார். அவ்வாறு அழகு பார்க்கும் போதெல்லாம் ஆண்டாளை ஆண்டவனோடு ஒக்க வைத்து நோக்கும் உணர்வு அவரை ஆட்டிப் படைத்தது. "இவள் செப்பமுடைமை நோக்கும் போதெல்லாம் எம்பெருமானை யும் சேர்த்துக் காண வேண்டுமென்னும் அவா என்னைப் பிடித்து உந்துகிறதே! இவள் அழகுக்கும் அமைப்பிற்கும் அவனன்றிப் பொருத்தமுடையார் வேறு யார்? இக்கொடியைத் தக்க கொம்புடன் யான் சேர்க்க வேண்டுமே, இல்லையெனில் எம் இருவர் வாழ்க்கையும் பயனற்றதாகுமே! இம்மாணிக்கக் கொடிக்கு அம்மரகதக் கொம்பன்றோ ஏற்றது? இவ்விரண்டையும் ஒன்று படுத்த யான் யாது புரிய வேண்டும்?" என ஆழ்வார் ஆழ

எண்ணுகின்றார்.[63] (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார், வில்லி புத்தூர் விளக்கு, ப. 32).

இறுதியில் ஆண்டவனின் கருணையை எண்ணி, 'களை வாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றில்லேன்' என அவனையே சரணடைந்தார்.

ஆண்டாள் ஆற்றாமை

காறை பூணும் கண்ணாடி காணும்தன்
கையில் வளைகுலுக்கும்
கூறை யுடுக்கும் அயர்க்கும்தன்
கொவ்வைச் செவ் வாய்திருத்தும்[64]

— பெரியாழ்வார் திருமொழி 3;7—8

எனப் பெரியாழ்வார் தம் திருமொர்ழியில் மொழிவன நமக்கு ஆண்டாளின் ஆற்றாமையை எடுத்துரைக்கும் சான்றாகின்றது. இந்நிலையில் இருவருமே இறைவனுடைய வருகையை எதிர் நோக்குகின்றனர். திருமாலைச் சென்றடைந்து அவனோடு இருப்பு கொள்ளவே ஆண்டாள் அப்போதும் எப்போதும் விருப்புற்றார்.

பெருமானைக் காணவும், அவனோடு இருந்து உறவாடவும் உள்ளம் விழைகின்றது; உடலும் அதற்கேற்பக் குழைகின்றது. அவ்வெண்ணமும், செயலும் ஈடேறும் நன்னாளினை எதிர் நோக்குகின்றார். இடைநேரத்திலே கண்ணன் ஆயர்பாடியில் தோன்றியபோது ஆயமங்கையரோடு ஆடிய ஆட்டங்களை வரிசைப்படுத்தி, முறைப்படுத்தி எண்ணிப் பார்க்கின்றார்.

இறைவனையடைய விழைவோர் - அவனைக் கூட வேண்டு மென்னும் கொள்கையுடையோர் - அவன் அவதாரச் செயல் களையும், தன்மையியல்புகளையும், சிறுபெருங் குறும்புகளையும் எண்ணிப் பாடினால் அவனின் இன்னருள் இன்னே வாய்க்கும் என்பதை மன்பதையோர் கூறக் கேட்டவர் கோதையார். இதைச் செவியேற்ற, சூடிக்கொடுத்தார் தாமும் அவ்வாறே செயலாற்றும் பொழுது நல்ல வண்ணம் இறை சிந்தனையில் போக்கக் கருத்து கொண்டார். அந்நிலையில்,

நீர்க்கரை நின்ற கடம்பை ஏறிக்
காளியன் உச்சி நட்டம் பாய்ந்து
போர்க்கள மாக நிருத்தஞ் செய்த

— நாச்சியார் திருமொழி 12;5.

காட்சி இவர் கண்ணுக்குப் புலனாகி, காட்சிவழித் தோன்றிச் சொல்லோவியமாய் மிளிர்ந்தது.[65] இதன் காரணத்தான் நாச்சியார் திருமொழி நூற்று நாற்பத்து மூன்று பாடல்களாக வடிவங்கொண்டது.

பின்பு இவருடைய சிந்தனை ஆயர்மகளிரிடம் திரும்பியது. அவர்கள் நோற்ற மார்கழி நோன்பினை நினைத்தார். அதன் பயனைக் கருதினார். அந்நோன்பினை நோற்றுக் கண்ணனை யடைய வழிகண்டார். அவ் ஆயர் மங்கையர் செய்கையால் செய்த மார்கழி நோன்பை இவர் பாவனையால் இயற்றிப் பயன் பெற்றார். இதனால்,

அன்ன வயல் புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம் — இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற் பாமாலை[66]

என்னும் பெயர் பெற்றார். திருப்பாவை இந்தப் பாவையின் வாயால் மலர்ந்ததைத் தெரிகின்றோம்.

பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்
வேதம் அனைத்திற்கும் வித்தாகும் – கோதைதமிழ்
ஐயைந்து ஐந்தும் அறியாத மானுடரை
வையம் சுமப்பதும் வம்பு[67]

— திருப்பாவைத் தனியன்.

என்ற வெண்பா இதன் சிறப்பினை எடுத்துக்காட்டும். இன்றைய சொற்பொழிவில் முன்னுரையில் விளக்கம் பெற்ற அர்த்த பஞ்சகஞானம் திருப்பாவையில் நன்கு எடுத்துக்காட்டப்படுகின்றது. ஆன்மாவின் இயல்பு, இறைவியல்பு, ஆன்மா அடையும் பயன், அப்பயனை அடைவதற்கு நெறி, அப்பயனை அடைவதற்குப் பகையாய் உள்ளவை ஆகியவற்றை முறையாகத் திருப்பாவையில் விளக்கம் பெறுவதை நோக்கலாம்.[68] இதன் விரிந்த விளக்கம் நாளையும் மறுநாளும் விரிவடையும்.

## ஆண்டாள் நாயகனைச் சேர்தல்

மகளுடைய அன்றாடத் தவிப்பினை உணர்ந்து பெரியாழ்வார் இவரையணுகிக் கேட்டார். மனத்திலுள்ளதை மறைக்காமல் கூறும்படி வேண்டினார். ஆண்டாளும் முதலில் தயங்கிப் பின்னர், தேர்ந்து தெளிந்து, 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று சொல்லி, திருவரங்கனையே மணக்கத் தாம் உறுதிபூண்டிருப்பதைத் தம் தந்தையாருக்குத் தெரிவித்தார். தாம் மணக்க விரும்பிய தலைவன் — நாயகன் — அழகை மனக் கண்முன் கண்டு களித்தார். 'என் அரங்கத்து இன் அமுதர், குழல் அழகர், வாய் அழகர், கண் அழகர், கொப்பூழில் எழு கமலப் பூ அழகர்' என்று உருவகப்படுத்தி மகிழ்ச்சி கொண்டார். "பொங்கு ஓதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதும் சோராமே ஆள்கின்ற எம் பெருமான், செங்கோலுடை திருவரங்கச் செல்வனார்' என்று உடல் பூரித்தார்.

அப்போது மதுசூதனன் தம்மைக் கைத்தலம் பற்றிக் கடிமணம் புரியக் கனவு காண்கின்றார். ஆயிரம் யானைகள் புடைசூழ அழகான மணப்பந்தருக்குள் கோவிந்தன் வருகின்றான். இந்திரன் முதலான தேவர்கள் வந்து புடைசூழ நிற்கின்றார்கள், மத்தளஓசையும், சங்கொலியும் முழங்குகின்றன. ஆண்டாள் பட்டுடுத்திப் பாங்காக மணமேடைக்கு வருகின்றார். திருமணச் சடங்குகள் நடைபெறுகின்றன.

திருவரங்கன் இவரின் மலர்க்கரம் பற்ற இருவரும் தீயை வலம் வருகிறார்கள். அரங்கனே இவர் காலைத்தொட்டுத் தூக்கி வைத்து அம்மி மிதிக்கச் செய்கின்றான். அடுத்து,

> அரிமுகன் அச்சுதன் கைம்மேலென் கைவைத்துப்
> பொரிமுகந் தட்டக் கனாக் கண்டேன் தோழீ! நான்.
> அங்கவ னோடும் உடன்சென்றங் கானைமேல்
> மஞ்சன மாட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான்[69]
>
> – நாச்சியார் திருமொழி.

என்று தோழியர் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு செய்தியைச் சொல்லிக் களிக்கின்றார்.

"பெரும்பெருத்த கண்ணாலங்கள் செய்து
பேணி நம் இல்லத்துள்ளே
இருத்துவான் எண்ணி நாமிருக்க
இவளும்ஒன் றெண்ணுகின்றாள்.

— பெரியாழ்வார் திருமொழி; 3:7:10

பெரியாழ்வார் ஆண்டாளை நோக்கி, "தாயன்பு முதலிய ஆறு குணங்களும் முற்றும் விளங்க அர்ச்சாவதார மூர்த்தியாய் நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் எழுந்தருளியிருக்கும் பெருமாள் களுள் நீ விழையும் நாயகன் யார்?" என்று வினவினார். இறை வனின் இனிய இயல்புகளை விரித்துரைக்குமாறு ஆண்டாள் தம் தந்தையாரைக் கேட்டார். அப்பொழுது, திருவேங்கடமுடையான், திருமாலிருஞ்சோலை ஆகிய தலங்களில் உறையும் திருமால் மார்பனை எடுத்தியம்பும் பொழுதே இவர் நெஞ்சம் உருகிற்று. கண்களில் நீர் சொரிந்தது. இறை செயல்களும், பீடும் இவர் முன் நின்றன. திருமாலிருஞ்சோலை மாயவனின் நிறத்தைக் காட்டியது. இவர் கூடலிழைத்தார்.[70] கூடலிழைக்கும்போது மாலிருஞ்சோலை மாலவனே இவர் முன் தோன்றினார். பின்னர்த் திருவேங்கடமுடையானின் உயர்ந்த குணங்கள் இவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. மேகத்தைத் தூதாக விடுத்தார். இந் நிலையில் இவருக்குப் பல உணர்ச்சிகள் உந்தித் தள்ளின.

இறுதியில் ஆழ்வார் திருவரங்கேசனின் இன்னியல்புகளை எடுத்துரைத்தார். இவன் பல சீர்மைகளைப் பெற்றவன். இவனுறையும் இத்தலம் நூற்றெட்டுத் திருப்பதிகளுள்ளும் உயர் வுற்றது; பழமையானது; இத்தலைவன் பெரிய பெருமாள், நம் பெருமாள், திருவரங்கன் என்னும் பெயர்கள்கொண்டவன். இந்த இவனுடைய வரலாற்றினைச் சொல்லக் கேட்ட ஆண்டாளின் வாய் துடித்தது; கண்கள் சுழன்றன; ஆர்வம் பெருகிற்று. 'அவ்வெம்பெருமானைச் சென்றடைவேன்' எனத் தாம் திரு-வரங்கனையே அடையக் கருதுவதை வாய்விட்டு வெளியிட்டார்.

ஆகப் பெரியாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதி நாயகர்களைப் பற்றிக் கூறித் தம் மகளுக்கு ஒரு 'சுயம்வரமே' நடத்திவிட்டார். பல பதிகளைப் பகர்ந்தாலும், அவருள் திருவேங்கடத்தான்,

திருமாலிருஞ்சோலை அழகன், திருவரங்கன் ஆகிய மூவரே இவருக்குச் சிறந்தவராய்த் தோன்றினர். இம்மூவருள்ளும் ஆண்டாள் அரங்கனையே நாடினார்; அவனையே அடைய உறுதி கொண்டார்.

தமிழ்நாட்டிற் பிறந்து வளர்ந்து, வண்டு தமிழ்ப்பாட்டிசைக்கும் மலர்களையே சூடி, தமிழ்ப் பாக்களினாலேயே இறைவனை வழுத்தி, தமிழ்நாட்டு எம்பெருமானையே சேரக் கருதிய கோதையாரின் மணம், தமிழ் வாழ்க்கையையே முற்றும் பொருந்திய காதல் மணத்தைச் சார்ந்தது எனக் கூறுதல் பொருந்தும்.

திருமொழியில் காணுமாறு இறைவனை அடைதற்குப் பற்பலவாறு முயன்று கொண்டிருந்த ஆண்டாளை அரங்கநாதன் ஏற்றுக்கொள்ளத் திருவுள்ளம் கொண்டான். பெரியாழ்வாருக்கும், கோயில் அர்ச்சகருக்கும் கோதையாரைத் திருவரங்கத்துக்குக் கொண்டுவந்தால் தான் ஏற்றுக்கொள்வதாகப் பணித்தார். பணிவதே கடனாகக்கொண்ட ஆழ்வார் அவ்வாறே அழைத்துச் சென்றார். ஆண்டாள் அரங்கன் வீற்றிருக்கும் மூலத்தானத்திற்குச் சென்றார்; எம்பெருமானோடு கலந்து மறைந்தார் என்பர்.

குருபரம்பரைப் பிரபாவம் என்னும் நூலில் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாளின் வரலாறு சுவைபடச் சொல்லப் பட்டுள்ளதனை ஈண்டு அவ்வாறே காணுதல் பொருத்தமாகும்.

ஆழ்வாரும் திருமகளாரும் அதிப்ரீதியுடன் அங்கிருந்தும் புறப்பட்டு, திருவரங்கன் திருப்பதியுள் எழுந்தருளினவாறே, ‘சூடிக்கொடுத்தாள் வந்தாள்! சுரும்பார் குழற்கோதை வந்தாள்! ஆண்டாள் வந்தாள்! ஆழ்வார் திருமகளார் வந்தார்! திருப்பாவை பாடியசெல்வி வந்தாள்! தென்னரங்கம் தொழுந்தேவி வந்தாள்!’ என்று பல சின்னங்கள் பரிமாற எழுந்தருள்வித்துக் கொண்டு, அழகிய மணவாளன் திருமண்டபத்துள் சென்று நின்று திருப் பல்லக்கின் பட்டுத்திரையை வாங்க, அப்போதே நாச்சியார் அகிலம் காணும்படி, உதறி உடுத்த பட்டுச் சேலையும் பருத்த செங்கழுநீர் மாலையும் திருநுதல் கஸ்தூரி நாமமும் கயல்போல் மிளிர்ந்து காதளவோடிய கடைக்கண் விழியும் ப்ரகாசிக்க,

சிலம்பார்ப்ப, சீரார்வளை ஒலிப்ப, அன்ன மென்னடை கொண்டு அணி அரங்கத்தான் திருமுன்பே சென்று கண்களாரக் கண்டு களித்து, கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள் என்னும் பேர் பெற்று உள்ளே புகுந்து, நாகபர்யங்கத்தை மிதித்தேறி, திருவரங்கச் செல்வனைச் சேர்ந்து, அவன் திருவடிகளிலே அந்தர்ப்பவித்தருளினார்''.

இது மணியும் முத்தும் சேர்த்துக் கோத்தாற்பெறும் பொலிவோடு மணிப்பிரவாள நடையில் தமிழும் வடமொழியும் கலந்து எழுதப் பெற்றிருப்பினும், இதில் காணப்படும் கற்பனைவளனும், உணர்ச்சியும் மிகுந்த சொல்லோவியம் ஆண்டாள் அரங்கனோடு கலந்த கலப்பினைக் கண்முன் வைத்துக் காட்சிப் படமாகக் காணக் காட்டுகின்றது.

பெற்ற பாசத்தினும் பேணி வளர்த்த பாசம் கொடிதன்றோ? மகளாரின் பிரிவினால் பெரியாழ்வார் மனமாழ்கினார்.

ஒருமகள் தன்னை யுடையேன்
 உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்
 செங்கண்மால் தான்கொண்டு போனான்;
பெருமக ளாய்க்குடி வாழ்ந்து
 பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமக ளைக்கண் டுகந்து
 மணாட்டுப் புறஞ்செய்யுங் கொல்லோ!

— பெரியாழ்வார் திருமொழி.

என்னும் மொழியின்வழி அவருடைய பிரிவுத்துயரத்தை உணர வைக்கின்றார். அவருடைய இந்தப் பிரிவொலி பெண்பிள்ளை பெற்றெடுத்துப் புகும்வீடு அனுப்பி வைக்கும் பெற்றவர்களின் சார்பொலியாகவே ஒலித்துக் கொண்டிருக்கும் எனலாம்.

ஆகவே, இதுவரை கண்ட செய்திகளிலிருந்து கண்ணனிடமே காதல் கொண்டு பிள்ளைப் பருவத்திலிருந்து அவனையே அடைய வழி தேடிக் கொண்டிருந்தார் ஆண்டாள்; அவர் பின்னர் சான்றோரால், வழிபடுவோரால் கண்ணனாகக் கருதப்படும்

அரங்கநாதனிடம் சென்று சேர்ந்து மரணமிலாப் பெருவாழ்வு பெற்று உய்ந்தார்; தம் பாக்களால் இவ்வுலகோரை உய்ய வைத்தார் என்றுணரலாம்.

### கோதை தமிழ்

நாயன்மார்களும் ஆழ்வார்களும் தமிழால் இசை பாடி இறைவனை வழுத்தினார்கள். இவர்களுள் ஆண்டாளும் ஒருவ ராவர். ஆனால், ஏனையோரைக் காட்டிலும் இவர் உயர்ந்தவர். ஏனெனில் அவர்கள் எல்லோரும் 'தம் பாக்களைத் தமிழில் பாடியதாகக் கருதினார்களே அல்லாமல் 'இவரைப் போன்று தமிழே தம் பாடல்கள் எனச் செப்பினார் அல்லர். தமிழும் தம் பாடல்களும் ஒன்றே என்பது இவர் கருத்து.

> கோதை வாய்த் தமிழ் வல்லவர்
> தூய தமிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்
> கோதை தமிழ் ஈரைந்தும்
> செந்தமிழ் பத்தும் வல்லார்
> புதுவையர் கோன் கோதை தமிழ்

என இவர் மொழியும் மொழிகளே இதற்குத் தக்க சான்றுகளாகும். இவ்வகையில் இவரது பாக்கள் உயர்வும், அழகும், சீர்மையும், இனிமையும் வாய்ந்து நுட்பப் பொருளைப் பொதிந்து கொண் டிருப்பன என்று கூறலாம்.

ஆண்டாள் இறைவன்பால் கொண்ட ஆழ்ந்த அன்பையும் தேர்ந்த அறிவுத் திறத்தையும் திருப்பாவை எடுத்துரைக்கின்றது. இவ்வுலகில் அறியாமையால் மூழ்கிக் கிடக்கும் ஆன்மாக்களை இதன்மூலம் தட்டி எழுப்புகிறார் ஆண்டாள். ஸ்ரீ இராமாநுசர் இத்திருப்பாவையில் மிகுந்த ஈடுபாடுடையவர். வ. வெ. சு. ஐயர் அவர்கள் "நாச்சியார் திருமொழி நாயகி பாவத்தின் உச்சி எல்லையை எட்டிப் பிடிக்கிறது" என்பர்.

ஏனைய ஆழ்வார்கள் நாயகி பாவத்தை ஏறிட்டுக் கொண்டு பாடினர். அது மேட்டு மடையையொக்கும். ஆனால் ஆண்டாளோ பெண்ணாய்ப் பிறந்து அவன் அன்பை நாடினாள். இவர்

காதல் பள்ள மடையமாகும். எனவே, 'ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சும் தன்மையள்' என்று இவரை உணர்ந்தோர் ஏத்திப் போற்றினர்.

### ஆண்டாள் பெரியாழ்வாரின் கற்பனைப் பாத்திரமா ?

மூடப்பட்ட பல்லக்கில் கோதையை அமர்த்தித் தொண்டர் களும் அர்ச்சகர்களும், பெரியாழ்வாரும் தொடர, பங்குனி உத்திரத்தன்று அழகிய மணவாளன் அரங்கனின் திருமண்ட பத்தை அடைந்தனர். கோதை பல்லக்கிலிருந்து இறங்கித் தமியளாய்த் திருவரங்கப் பெருமாளின் திருவடிகளின் அருகே அமர்ந்து சிறிது நேரத்தில் காணாராயினர். பெரியாழ்வார் மகளைக் காணாது உள்ளம் கரைந்துருக இறைவன் தாம் கோதையுடன் ஸ்ரீவில்லிபுத்தூரில் காட்சியளிப்பதாகக் கூறினார். பெரியாழ்வாரும் ஆங்குச் சென்று தம் பணியைத் தொடர்ந்து நடத்தி வந்தார் என்பது வரலாறு.

இன்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் திருக்கோயிலில் மணமகன் போன்று வீற்றிருக்கும் அரங்க மன்னரின் கம்பீரமும், மனத்திற் கிசைந்த மணமகனை வாய்க்கப்பெற்ற புதுப் பெண் போன்று அளப்பரிய மகிழ்ச்சி வெள்ளம் முகத்தில் தவழ எழுந்தருளி இருக்கும் ஆண்டாளின் எழிலும் கண்கொள்ளாக் காட்சிகளாகும்.

இங்ஙனம் இருவரும் வீற்றிருக்கும் இருக்கையிலேயே பெரிய திருவடியும் (கருடாழ்வார்) அமர்ந்துள்ளார். இவ்வமைவு, எல்லாத் தத்துவங்களையும் தன்னுள் பொதிந்து கொண்டிருக்கும் பிரணவத்தையே குறிக்கின்றது [71] (எஸ். கிருஷ்ணவேணி அம்மை யார், வில்லிபுத்தூர் விளக்கு ப. 3) என்பர். பிரணவத்தில் உருத் தோன்றாது மறைந்துறையும் அகர உகர மகரங்களின் பொருளா கும் மூவரையும் (இறைவன், பிராட்டி, சேதனன்) ஒரே இடத்தில் நிறுத்தி யாவருக்கும் கட்புலனாகுமாறு காட்சி அளிக்கும் பெருமை சிறப்புடையதாகும்.

இன்றும் நாச்சியாரும் பெரியாழ்வாரும் வடபெருங்கோயிலு டையானும் கலந்து வாழும் வில்லிபுத்தூர் பொன்னும், முத்தும், மாணிக்கமும் பதித்துச் செய்த அணிக்கு நிகராய் ஒளிர்கின்றது என்று உணர்வோர் உளர்.

குறித்தொருவர் கொண்டாடும் கொள்கைத்தோ கோதை
நிறுத்தவூர் விண்டுசித்தர் நீடுர் — பிறப்பிலியூர்
தாழ்வில்லி புத்தூர்என் றைவர்க்குத் தானிரந்தான்
வாழவில்லி புத்தூர் வளம்

என்று பிள்ளைப் பெருமாளையங்கார் கூறும் கூற்று இதை நிலை நிறுத்தும்.[72] (நூற்றெட்டுத்திருப்பதி அந்தாதி, ப. 108).

இதுவரை கண்டவற்றால் கோதையார் பெரியாழ்வாரின் வளர்ப்புச் செல்வியார் என்பது உலகம் ஒப்ப முடிந்த ஒன்று என்பது தெளிவாகும். இங்ஙனமிருக்க, ஆண்டாள் பெரியாழ் வாரின் கற்பனைச் செல்வியென்றும், அவரியற்றியதாகக் கூறப் பெறும் திருமொழிகள் பெரியாழ்வாரால் இயற்றப்பட்டதே என்றும் கூறுவோர் சிலர் உளர் [73] (பி. ஸ்ரீ. ஆசார்யா பெரியாழ்வார், ப. 94)

காதலின் படுவேகத்தைக் குறிக்கும் பெரியாழ்வார் திரு மொழிப் பகுதியே நாச்சியார் திருமொழி என்று வழங்கப்பெற்று நாளடைவில் கோதை நாச்சியார் ஓர் உண்மையான பெண் மணி யாகவும், வேறொரு பக்த மணியாகவும் கருதப் பெற்றிருக்க வேண்டும்[74] (பி. ஸ்ரீ. ஆசார்யா பெரியாழ்வார், ப. 95)

என்று கருத்துடையவர் இராஜாஜி அவர்கள்.

இவ்விருவரும் பாடிய பாடல்களில் சிலவிடங்கள் சொற் றொடரால், கருத்தால் ஒன்றுபோல இருப்பது உண்மை.

மற்றொருவற் கென்னைப் பேசவொட்டேன்
மாலிருஞ்சோலை யெம்மாற் கல்லால்

என்பர் பெரியாழ்வார்.[75] (பெரியாழ்வார்திருமொழி 3:4:5:23.

மானிடவர்க் கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே

என்பர் ஆண்டாள் [76] (நாச்சியார் திருமொழி 1:5:3:4.) இவ்வாறு இன்னும் ஒன்றிரண்டு கூற்றுகள் ஒத்து வருகின்றன.[77] (பெரியாழ் வார் திருமொழி 3:4; 6:3; நாச்சியார் திருமொழி : 11:4; 3:4).

இவற்றைக் கொண்டு ஒரு கருத்தினை நிலை நிறுத்துதற் கில்லை. காரணம் என்னவெனில் பெரு மனங்கள் உலக சிந்தனையிலும், இறை நினைப்பிலும் ஒன்றுபோல நினைக்கும்

வாய்ப்புப் பெற்றவை. 'Great minds think alike' என்றபடி இதைக் கொள்ளலாம்.

இன்னும், தூய நெறிநின்ற பெரியாழ்வார் வளர்த்தெடுத்த பெண்கொடி என்பது பலவிடங்களில் பரக்கக் காணப்படுகின்றன. 'தீயின்றிப் புகையில்லை' யெனவே வளர்த்தெடுத்த மாண்பினா லேயே 'விட்டுசித்தன் உடைய கோதை' என்னும் பொருளில் 'விட்டு சித்தன் தன் கோதை' எனத் தொகையாகக் குறிக்கப் படுகின்றது. மேலும் ஆண்டாள் பெரியாழ்வாரைக் குறிக்குமிடத் தெல்லாம் படர்க்கையிலேயே வைத்துப் பேசுவதை நோக்கலாம்.

> வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை
> வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே
>
> — நாச்சியார் திருமொழி; 10:10; 3—4

> செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த
> மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்
>
> — ஷை, 11:10; 1—4

எனவரும் இடங்களை நோக்குக[78] இதனால் பெரியாழ்வாரே இவற்றைப் பாடியிருப்பின் இவ்வாறு படைக்க வேண்டியதில்லை என்று துணியலாம்.

மேலும் பெரியாழ்வார் திருமொழியின் 'பாவனை' நிலைக்கும் ஆண்டாள் பாடல்களின் 'பாவனை' நிலைக்கும் இடையே ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள மனவேறுபாடுகள் தெற்றெனத் தெளியப்படுகின்றன. பெரியாழ்வாரின் இறையன்பு பாடுபட்டுத் தேடியது. ஆண்டாளின் இறை காதலோ புதைய லெடுத்த பெருநிதியம் என்னும் பொருள் பொதிந்ததாகும்.[79] (பி. ஸ்ரீ. ஆசார்யா, கோதை அல்லது காதல் வெள்ளம். ப. 104).

ஆகவே, கருத்து வெளிப்பாடு, பாவித்துப் பேசுதல், உணர்வு வெளியீடு, இருவேறு நிலைகளில் இருந்து அவரவரின் இயல்புக் கேற்ப (ஆண், பெண்) பாக்கள் இயற்றல், உணர்த்தும் திறன் ஆகியவற்றைத் தெளிந்து பார்க்கும் போது, பெரியாழ்வாரின் கற்பனைப் பாத்திரமல்ல; ஆண்டாள் தனியொருஒப்பற்றவோர் உன்னத தனிநிலை ஆழ்வாரே என்று உறுதி செய்யலாம்.

முடிவுரை

இதுவரை கண்ட கருத்துகளின் அடிப்படையில் தெளியலாகும் செய்திகள்:

1. பழம் பெருமை வாய்ந்த இந்த நாட்டிலே தொன்று தொட்டு நிலைபெற்று வருகிற சமயங்கள் பலவற்றுள் திருமால் சமயமாகிய வைணவம் ஒன்று என்பதற்கு வேத வேதாங்கங்களும் புராண இதிகாசங்களும் ஏற்ற சான்றுகளாய் இலங்குகின்றன.

2. 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்தில் வைணவம் மிகப் பழமையான ஒன்று என்பதற்குத் தொல்காப்பியம் சிறந்த துணைசெய்கின்றது. அதைக் கொண்டு இறை வழிபாடுகள் தொல்காப்பியனார் காலத்திற்கு மிகவும் முற்பட்ட காலத்திலே தமிழ் மக்களால் கைக்கொள்ளப்பட்டவை என்பது விளக்கமுறும்.

3. வழிவழி வந்தவன் திருமால். இதைப் பத்துப் பாட்டும், எட்டுத்தொகையும் துலங்க வைக்கின்றன.

பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி ஆகிய நூல்கள் மாயோனின் வரலாறு காட்டு கின்றன.

எட்டுத்தொகையில் நற்றிணை, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்கள் திரு மாலின் ஐவகை இருப்பு நிலைகளைச் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன.

4. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் தலைசிறந்ததான முப்பாலுள் திருமாலுலகம் எடுத்தியம்பப் பெறுகின்றது. இவை போன்றே நான்மணிக்கடிகை, கார்நாற்பது, திரிகடுகம், ஆகிய வற்றில் காயாம்பூ வண்ணனான திருவடிகள் பூமியை அளந்தது, பூங்குருந்தத்தைச் சாய்த்தது, மாயச்சகடம் உரைத்தது என்று திருவடிமேல் ஏற்றிப் புகழ்வதைக் காணலாம்.

5. நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் அஞ்சனவண்ணன் ஆடிய ஆட்டத்தைக் காட்டுகின்றது. திருமாலுக்குத் தனிக்கோயிலும் பலராமனுக்குத் தனிக்கோயிலும் இருந்ததைக் காட்டுகின்றது. மணிமேகலையில் நெடியோன் கதை விரிக்கப்படுகின்றது.

6. ஆழ்வார்கள் காலத்தில் வைணவ சமயம் உரம் பெற்ற நிலை சுட்டப்படுகின்றது. வைணவ சமயத்திற்கு ஆழ்வார்கள் அளித்த புத்துணர்ச்சி, மறுமலர்ச்சி, சமயப் பரப்பல் ஆகியவை பேசப்படுகின்றன.

7. ஐவகை ஞானம் - திருப்பாவையில் கூறப்படுவதைச் சுருக்க அறிமுகமாக எடுத்துரைக்கப்படுகின்றது.

8. அர்ச்சை நிலையின் சிறப்பு - அதுவே ஆண்டாளின் வாழ்வுக்கு வளம் சேர்த்தது.

9. ஆண்டாள் வில்லிபுத்தூர் விளக்கு - அணிவிளக்கு - சுற்றும் எரியும் விளக்கு - பெரியாழ்வாரின் குலவிளக்கு - குத்துவிளக்கு - இறுதியில் குன்றின்மேலிட்ட விளக்காக விளங்கியமை. வேயர் பயந்த விளக்காகிய ஆண்டாள், ஆயர் குலத்தில் தோன்றிய கண்ணனாகிய அணிவிளக்கின் வனப்பு, வீரம், உயர்வு முதலிய வற்றால் ஈர்க்கப்பட்டு அவனை அணுகி அணுகி இறுதியில் அன்னவனோடு கலந்தமை.

10. கோதை தமிழ் - கோதுஇல் தமிழ் - இன்தமிழ் வண்தமிழ், பிற ஆழ்வார்களை விஞ்சும் தமிழ். இவருடைய காதல் பள்ள மடையாகும்.

11. ஆண்டாள் பெரியாழ்வாரின் படைப்புப் பாத்திரமல்ல; பெரியாழ்வாரே ஆண்டாள் பாசுரங்களைப் பாடியவர் அல்லர் - சான்றுகள் கொண்டு காணின் இருவரும் அவரவர் நிலையில் தனித்தனி நின்று சிறப்புறுதலைக் காணலாம்.

திருவாடிப் பூரத்தில் செகத்துதித்தாள் வாழியே!
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே!
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே!
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே!
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே!
உயரரங்கர்க் கேகண்ணி உகந்தளித்தாள் வாழியே!
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே!
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே!

---

## குறிப்புகள்.

1. அ. மு. பரமசிவானந்தம், வையைத்தமிழ், பக். 101.
2. க. த. திருநாவுக்கரசு, தமிழ் நிலவு, ப. 53.
3. எஸ். வையாபுரிப்பிள்ளை, தமிழர் பண்பாடு (எட்டாம் பதிப்பு), ப. 150.
4. கம்பராமாயணம், பாலகாண்டம். ஆற்று. 19.
5. " இரண்யன், 159.
6. " உலாவியல், 19.
7. ந. சுப்பு ரெட்டியார், அறிவுக்கு விருந்து, ப. 108.
8. பரிபாடல் 4—67—70.
9. ந. சி. கந்தையா பிள்ளை, அறிவுரைக்கோவை, ப. 55.
10. ரா. பி. சேதுப்பிள்ளை, தமிழ் விருந்து, பக். 145—146.
11. திருமால் என்னும் விஷ்ணுவைக் குறித்துக் காலஞ்சென்ற டி. ஏ. கோபிநாதராவ், தமது "இந்திய விக்ரகம்" என்ற நூலில் இவ்வாறு எழுதியுள்ளார்.
12. இ. எஸ். வரதராஜ அய்யர், தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 1 முதல் 1110) அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1957, ப. 210.
13. தொல். அகத். 5.
14. மேற்படி, 28.
15. "மாயோன் மேஎய மன் பெருஞ்சிறப்பிற்<br>தாவா விழுப்புகழ் பூவை நிலையும்" — தொல். புறத். 60.
16. பெரும்பாணாற்றுப்படை, 29—31.
17. "நீணிற வுருவி னெடியோன் கொப்பூழ்<br>நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த்<br>தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்<br>சுடுமணோங்கிய நெடுநகர்" — பெரும். 403—405.
18. மேற்படி, 371—373.
19. "நனந்தலை யுலகம் வளைஇ நமியொரு<br>வலம்புரி பொறித்தமா தாங்கு தடக்கை<br>நீர்செல நிமிர்ந்த மா அல்" — முல்லைப்பாட்டு 1—3.
20. உ. வே. சாமிநாதையர், சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும், (மறுபதிப்பு, 1962), ப. 69.
21. பதிற்றுப்பத்து.
22. புறம். 55:5—6.

23. புறம். 57:1—3.
24. ''கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
நிலம்சேர் மதர்அணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை'' — புறநானூறு
''வென்வேல் கவுரியர் தொன்முது கோடி
முழங்கு இரும்பௌவம் இரங்கும் முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம்'' — அகநானூறு
25. அகம். 59:4—6.
26. அகம் 175:15—16; அகம். 360.
27. முல்லைக்கலி 1—18—20; நெய்தற்கலி 214:1, 134; 1—3.
28. முல்லைக்கலி 103:50—53.
29. அலங்கு மருவி யார்த்திமிழ் பிழியச்
சிலம்பாறணிந் தசீர் கெழு திருவிற்
சோலை யொடு தொடர் மொழி மாலிருங் குன்றம்.
30. பொன்புனை யுடுக்கை யோன் புணர்ந்தமர் நிலையே
நினைமின் மாந்தீர் கேண் மின்.
நலம்புரீ இயஞ்சீர் நாம வாய்மொழி
இதுவென வுரைத்தனெ முள்ளமர்ந் திசைத்திறை
இருங் குன்றத்தடியுரை யியை கெனப்
பெரும் பெயரிருவரைப் பரவுதுந் தொழுதே.
31. எம். ராதாகிருஷ்ண பிள்ளை, தமிழும் வைணவமும், பக். 18-19.
32. ''மடி இலா மன்னவன் எய்தும் அடி யளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு''
''தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு''
33. ஜி. எதிராஜீலு நாயுடு, பக்திப் பூங்கா, ப. 4.
34. மேற்படி, ப. 8.
35. காழியூர் சேஷாத்ரி மணவாளன், இராமாநுசர், ப. 119.
36. மேற்படி., ப. 9.
37. இ. எஸ். வரதராஜ அய்யர், தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 1 முதல் 1110) ப. 305.
38. எம். ராதாகிருஷ்ணபிள்ளை, பிற்கால வைணவம், ப. 14.
39. ரெ. திருமலை அய்யங்கார் (பதிப்பாசிரியர்) திருப்பாவை மாலை, திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்க வெளியீடு, 15.9.1957.

40. உபதேச ரத்தினமாலை, 23.
41. "மின்னலைய நுண்ணிடையார் விரிகுழல்மேல்
 நுழைந்த வண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்"
 — பெரியாழ்வார் திருமொழி, 2:2—5.
42. "மென்னடை அன்னம் பரந்து விளையாடும்
 வில்லி புத்தூர்" — நாச்சியார் திருமொழி, 5:5.
43. நாச்சியார் திருமொழி, 1:10.
44. மேற்படி, 3:10.
45. மேற்படி, 2:10.
46. தேசிகமாலை, பிரபந்தகாரம், 10.
47. ஸ்ரீ ஆண்டாள் சந்திரகலா மாலை, 2.
48. மேற்படி.
49. திருப்பாவை, பாடல் 13, 3—5
50. மு. இராகவய்யங்கார், ஆழ்வார்கள் காலநிலை, ப. 81.
51. "இனி, அவ்வாழ்வார் திருமகளாரான் ஆண்டாள், திருப்பாவையில்,
 "வெள்ளியெழுந்து வியாழ முறங்கிற்று" என்று கூறியது கொண்டு, முன்னும் பின்னும் நிகழ்ந்த காலங்களைக் கணிப்பித்து, 731ஆம் ஆண்டே அத்திருப்பாவை பாடிய காலமாகுமென்றும் அவ்வாண்டையடுத்தே அவர் திருவரங் கமுடையான் திருவடியில் ஐக்கியமானவராக வேண்டு மென்றும், அந்நிகழ்ச்சிக்குப் பின், நெடுஞ்சடையன் ஆட்சி வரை அவ்வாழ்வார் பிரபத்தி நிஷ்டையில் விளங்கியவரே என்றும் ஆழ்வார்கள் காலநிலையுள் விளக்கியுளேனாதலால் அவற்றை இங்கு விரிக்க வேண்டுவதன்று"
 — மு. இராகவய்யங்கார், இலக்கிய சாஸன வழக் காறுகள், தமிழ்நாடு அரசு, 1973, ப 125.
52. ஈ.எஸ். வரதராஜ அய்யர், தமிழ் இலக்கிய வரலாறு, ப.283-284.
53. பெ.சு. சண்முகநாதன், ஸ்ரீவில்லிபுத்தூர் தலவரலாறு, ப. 48-49.
54. பு. ரா. புருடோத்தம நாயுடு, "ஆண்டாள்", கலைக் களஞ் சியம், தொகுதி எண். 1, ப. 362.
55. N. Subbu Reddiar, Religion and Philosophy of Nalayiram with special reference to Nammalvar.
56. மயிலை மாதவதாஸன், நாலாயிர திவ்யபிரபந்தம், ப. 45.

57. பாலூர் கண்ணப்ப முதலியார், திருவெம்பாவை - திருப்பாவை, திருப்பள்ளி எழுச்சி, மூலமும் விளக்க உரையும், ப. 3.
58. கா. சுப்பிரமணிய பிள்ளை, "ஆண்டாள் வரலாறும் நூலாராய்ச்சியும்" (இலக்கிய மாலை வெளியீடு 2), ப. 1.
59. மேற்படி, ப. 2.
60. பெரியாழ்வார் திருமொழி, 3:7:1.
61. மேற்படி, 3:7:3.
62. கா. சு. பிள்ளை, மேற்கூறிய நூல், ப. 3.
63. எஸ். கிருஷ்ணவேணியம்மையார், வில்லிபுத்தூர் விளக்கு, ப.32.
64. பெரியாழ்வார் திருமொழி 3:7:8.
65. நாச்சியார் திருமொழி, 12:5.
66. உய்யக்கொண்டார்.
67. திருப்பாவை, தனியன்.
68. திருப்பாவை 1—5 — இறைநிலை
    " 6—15 — உயிர்நிலை (அ) ஆன்ம நிலை
    " 16—20
69. நாச்சியார் திருமொழி 6:6:6:8; 6:9; 6:10.
70. கடல் இழைத்தலாவது, வட்டமாகக் கோடு கிழித்து, அதற்குள்ளே சுழிசுழியாகச் சுற்றும், சுழித்து, இரண்டிரண்டு சுழியாகக் கூட்டினால் இரட்டைப்பட்டால் கூடுகை என்றும், ஒற்றைப் பட்டால் கூடாமை என்றும் கொள்ளப்படும்.
    — நாச்சியார் திருமொழி 4.
71. எஸ். கிருஷ்ணவேணியம்மையார், வில்லிபுத்தூர் விளக்கு, ப. 3.
72. பிள்ளைப்பெருமாளையங்கார், நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, 108.
73. பி. ஸ்ரீ., 'பெரியாழ்வார்', ப. 94.
74. பி. ஸ்ரீ., மேற்படி, ப. 95.
75. பெரியாழ்வார் திருமொழி, 3-4-5, 2-3.
76. நாச்சியார் திருமொழி, 1-5, 3-4.
77. பெரியாழ்வார் திருமொழி 3-4, 6,3; நாச்சியார் திருமொழி 11-4, 3-4.
78. நாச்சியார் திருமொழி 10-10, 3-4.
    " 11-10, 1-4.
79. பி. ஸ்ரீ. ஆசார்யா கோதை அல்லது காதல் வெள்ளம், ப. 104.

———

## (2)

# பாவை பாடிய பாவை

பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்
வேதம னைத்துக்கும் வித்தாகும் - கோதைதமிழ்
ஐயைந்து மைந்து மறியாத மானிடரை
வையஞ் சுமப்பதும் வம்பு.

"மாதங்களில் நான் மார்கழியாக இருக்கிறேன்" என்று கண்ணபிரான் கீதையில் சொல்லியிருக்கிறார். எனவே மார்கழி மாதம் என்றவுடனேயே மாசற்ற கண்ணனின் நினைவு வருவது போலவே, அம்மாத முழுவதும் பாடக் கூடிய திருப்பாவைப் பாடல்களையளித்த திருப்பாவைச் செல்வியாக விளங்கும், பாடியருளிய பாவையாக விளங்கும் ஆண்டாளுடைய நினைவு வாராமற் போகாது. திருப்பாவை சமய உலகில் மட்டுமின்றி இலக்கிய உலகிலும் ஈடும் இணையுமற்றுத் திகழ்கின்றது. "வேதம் அனைத்திற்கும் வித்தாகும்" என்பது பெரியோர்களின் அனுபவ மொழி. இவ்வித்திலிருந்தே வேர், இலை, பூ, காய், கனி முதலியன கிடைத்தல் கூடும். ஐயைந்தும் ஐந்தாய் அதாவது முப்பது பாசுரங்களைக் கொண்டதாய்த் திகழும் திருப்பாவையை அறியாத மானிடர்களை இந்த உலகமானது தாங்கிக் கொண் டிருப்பது பெரும் குறை என்ற அளவில் பெரியோர்கள் கருதினர் என்றால் வைணவ இலக்கிய உலகில் திருப்பாவை பெறும் இடம் தெற்றெனப் புலனாகின்றது. இம்மண்ணிற் பிறந்தாரில் திருப் பெரும்புதூர்ப் பிரான் இராமாநுசர்தான் அறிவிற் சிறந்தவர் என்று என் ஆசிரியப் பெருந்தகை பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் பன்முறை கூறக் கேட்டுள்ளேன். அத்தகு அறிவுத்திறனும் சமயத்தெளிவும் பெற்றிருந்த எம் பெருமானார் இத்திருப்பாவையிலேயே மிகவும் ஊறியிருந்து 'திருப்பாவை ஜீயர்' என்றே பிறரால் அழைக்கப் பெற்றார் என்றால் திருப்பாவையின் பெருமைதான் என்னே! மேலும் திருப்பாவைக்கு மார்கழி மாதத்தில் மட்டுமன்று ஏற்றம்! திருக் கோயில்களிலும் திருமாளிகைகளிலும் நாடோறும் நடைபெறும்

திருவாராதனம் திருப்பாவை சேவையும் திருப்பாவை சாத்து முறையையுமே தலையாகக் கொண்டு எங்கும் சிறப்பாக விளங்குகின்றது. ஆழ்வார் ஆசாரியர்களின் திருநட்சத்திரக் கொண்டாட்டங்களிலும் திருப்பாவை சாத்துமுறையே முதன்மை பெற்றுத் திகழ்கின்றது. மேலும் திருப்பாவைக்கு ஆயிரப்படி, ஈராயிரப்படி, மூவாயிரப்படி, நாலாயிரப்படி, ஐயாயிரப்படி என்றிவ்வாறாகப் பல வியாக்கியானங்கள் விளங்கக் காண்கிறோம்.

திருப்பாவைக்கு எளிதாக விளங்கும் பொருள் ஒன்றுண்டு; சற்று ஆழ்ந்து நோக்கிக் காணும் உள்ளுறைப் பொருளும் உண்டு. மார்கழி நீராட்டத்தைச் சொல்கிறது; மழை மண்ணுலகிற்கு வேண்டும் எனச் சொல்லுகிறது; மனத்திற்கியைந்த மணாளனை அடைய வேண்டிப் பாடிச் சிறக்கிறது என்று மேற்போக்காகப் பாவையின் பாடுபொருளைப் பகர்ந்துவிடலாம். ஆயினும் ஓர் ஆழ்ந்த உட்பொருள் ஒன்று திருப்பாவைப் பாசுரங்களில் திகழ்வதாகக் கூறிப் பின்வருமாறு எழுதுகிறார் காஞ்சிபுரம் மகா வித்துவான் ஜகதாசார்ய சிம்மாசனாதிபதி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் அவர்கள்.

> ''சிலர், ஸ்வாபதேசார்த்தமென்று ஒன்று சொல்வது ஆண்டாள் திருவுள்ளத்திற்கு இணங்காததென்றும்,பாசுரங்களில் ஸ்பஷ்டமாகக் கிடைக்கிற பொருளுக்கு மேலே வேறு சில பொருள்களை வயங்க்யார்த்தமென்று உரைப்பது தவறென்றும், அது வீண்பணியென்றும் சொல்லுகிறார்கள். ஆண்டாள் மேலெழுந்த பொருளில் முழு நோக்கின்றிக்கே உள்ளுறை பொருளிலேயே உள்ளத்தை ஊன்றவைத்தவள் என்னுமிடத்தை ப்ராமாணிகர்கள் இசையும்படி மூதலிக்கிறோம் காண்மின். திருப்பாவை முதற்பாட்டில் ''நீராடப் போதுவீர் போதுமினோ'' என்று நீராட வருகிறவர்களெல்லீரும் வாருங்களென்று அழைத்து, நாலாம் பாட்டில் மேகத்தையும் விளித்து ''நாங்களும் மார்கழி நீராட வுலகினில் பெய்திடாய்'' என்று மழை பெய்ய நியமித்திருக்கிறாள். இவற்றைப் பார்க்கும் போது நீராடுவதற்கே ஆண்டாள் (அல்லது ஆய்ச்சிகள்) புறப்படுவதாகவும் நீராடுவதற்கே தோழிகளையும் அழைப்பதாகவும் நீராடுவதற்கு வேண்டிய தீர்த்தஸம்ருத்தி யுண்டாவ

தற்காகவே மழைபெய்ய மேக தேவதையை நியமிப்பதாகவும் தெரிய வருகிறது. இதுவே உண்மைப்பொருளாகில் இவர்க ளெல்லாருங்கூடி ஒரு பொய்கைக்கரைக்குச் சென்றிருக்க வேண்டும். நீராடுமிடம் பொய்கையன்றோ. இவர்கள் ஒரு பொய்கைக்கரையில் சென்று சேர்ந்ததாகத் திருப்பாவையில் ஒரு பாட்டிலுமில்லை. ஸ்ரீ நந்தகோபருடைய திருமாளிகைக்குச் சென்று அங்கு *நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பனை யுணர்த்தி நப்பின்னைப் பிராட்டியை யுணர்த்தி அவர்களைத் தோத்திரஞ் செய்து, சிற்றஞ்சிறு காலையெழுந்து இங்கு நாம் வந்தது எதற்காகவென்னில், *உன்றன்னோடுற் றோமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோமென்று விண்ணப்பம் செய்வதற்காகவேயென்று தலைக்கட்டியிருக் கிறார்கள். இப்படி திவ்ய தம்பதிகளிடம் சென்று ஸேவிப்பது தான் இவர்கள் தாம் கொண்ட மார்கழி நீராட்டமென்று நன்கு விளங்கிற்றாயிற்று. ஆகவே, *நீராடப்போதுவீர் *நாங்களும் மார்கழி நீராட *குள்ளக்குளிரக்குடைந்து நீராடாதே உக்கமுந் தட்டொளியும் தந்துன் மணாளனை இப்போதே யெம்மை நீராட்டு *மாலே மணிவண்ணா மார்கழி நீராடுவான்* என்கிற பாசுரங்களில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட நீராட்டமானது தண்ணீரில் தோய்வதன்று என்றும், பகவத் ஸம்ச்லேஷத்தையும், பகவத் ஸம்ச்லேஷத்தையும், ஆசார்ய குல அவகாஹனத்தையுமே நீராட்டமாகச் சொல்லிற்றென்றும் நிஷ்கர்ஷிக்கப் போதுமான ஔசித்யமுள்ளது.

இதை மூவாயிரப்படியில் பெரியவாச்சான்பிள்ளையும், ஆறாயிரப் படியில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் ஸ்பஷ்டமாக விளக்கியேயுள்ளார்கள். 'நீராடப் போதுவீர்' என்றவிடத்துப் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்தி வருமாறு- (நீராட) இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ண ஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாட லென்றார் கள். *ஏஷ ப்ரஹ்ம ப்ரஹ்விஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்* என்று பகவத்ஸம்ச்லேஷத்துக்கு க்ரீஷ்மகாலத்தில் குளிர்ந்த மடுவில் படிவதை த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற் றிறே'' என்று.

ஆறாயிரப்படி ஸ்ரீ ஸக்திவருமாறு — "(நீராட.) இவர்கள் தங்களுக்கு நீராடவென்று நோயாசையிறே. யமுநாஜலம் ஒருத்தியுடைய விரஹாக்நியாலே சுவறுமே. தமிழர் கலவியைச் சுனையாடலென்றாய்த்துச் சொல்லுவது. க்ருஷ்ணஸம்ச்லேஷத்தை யாய்த்து இவர்கள் நீராட வென்கிறது. *ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்* என்னுமா போலே". என்று. ஆகவிவற்றால், உள்ளே கொண்ட பொருள் வேறென்றும், வெளியே யிடுஞ்சொல் வேறென்றும் நிர்ணயிக்கப்படுகிறது

நீராட என்கிற ஒரு சொல் விஷயத்தில் மாத்திரமன்று இது. இது, பெரும்பாலும் எல்லாச் சொற்களும் அந்தரங்க மானவேறொரு பொருளைக் கொண்டே பிரயோகிக்கப் பட்டனவென்று தேறலாம். அலங்கார சாஸ்த்ரத்தில் ரூபகாதிசயோக்தியென்று ஓரலங்காரமுண்டு. "பச்ய நீலோத் பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி சிதாச் சரா:" என்று அதற்கு உதாஹரணம் காட்டப்படுகிறது. இரண்டு கருநெய்தற் பூக்களினின்று கூரிய அம்புகள் கிளம்புகின்றன காண்' என்று இதிற் சொல்லப்படுகிறது. இங்கு கருநெய்தற் பூவும் விவக்ஷிதமன்று அம்புகளும் விவக்ஷிதமன்று. நாயகியின் கண்களினின்று வெளி வருகின்ற கடாக்ஷபாதங்களைச் சொல்ல நினைத்தே இங்ஙனம் சொல்லப்பட்டது. இதனைத் தமிழர் உருவகவுயர்வு நவிற்சியணி யென்பார்கள். திருப்பாவை முழுவதும் இவ்வலங்கார வகையில் அமைந்ததென்று அடியே னுடைய அபிப்பிராயம்".

(திருப்பாவை, முன்னுரை, பக். 2, 3)

"இதில் ஏழாவது பாட்டில் "கலந்து பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப் பெண்ணே" என்று சொல்லப்படுகிறது. 'பேசினபேச்சு கேட்டிலையோ' என்றால் போதும். 'நான் சொல்லுகிற வார்த்தையைக்கேள்' என்றும், 'நான் சொல்லுகிற வார்த்தை உன் காதில் விழவில்லையா' என்றும் இப்படித் தானே உலக வழக்குள்ளது. இந்த ரீதியில் 'பேசினபேச்சு கேட்டிலையோ' என்ன ப்ராப்தமாயிருக்க 'பேச்சு அரவம் கேட்டிலையோ' என்றது விசேஷமான கருத்தையுடையது.

பேச்சுக் கேட்பதில் ரஸமில்லை; பேச்சிலிருந்து தோன்றுகிற (அரவம்) த்வனிப் பொருளைக் கேட்டுணர்வதுதான் சுவை மிக்கது என்று ஆண்டாளே காட்டியிருக்கின்றாள்''.

மார்கழித் திங்கள் குறித்துப் பின்வரும் கருத்துகள் வடமொழிச் சுலோகங்களாற் பெறப்படுகின்றன.

''தனுர் ராசியில் சூரியன் சஞ்சரிக்கும்போது விடியற்காலையில் எழுந்து குளித்துவிட்டு, காலைக்கடன்களை முடித்து எவனொருவன் நாராயணனைப் பூசிக்கின்றானோ, அவன் ஆயிரம் ஆண்டுகள் செய்த பூசையின் பயனை இந்தத் தனுர்மாத ஒரு நாள் பூசையிலேயே அடைகிறான்''.

''எல்லா வகையான யாகங்களைச் செய்வதிலும், எல்லா வகையான தீர்த்தங்களில் நீராடுவதிலும் உண்டாகும் புண்ணியம் இந்த மார்கழி மாதத்தில் ஒரு நாள் பூசையினால் பெறலாம். எட்டு மாதங்களில் செய்த பூசைகளைக் காட்டிலும் இந்த ஒருமாத பூசையினால் அதிகமான பலத்தை அடையலாம்''.

''இந்த மாதத்தில் (மார்கழியில்) விடியற்காலையில் எழுந்து எவனொருவன் நீராடி முறைப்படித் தன் கடமைகளைச் செய்கிறானோ அவனுக்கு என்னையே அர்ப்பணிப்பேன்''.

''பூலோகத்தில் நந்தகோபன் என்பவன் ஒருவன். அவனுடைய கோகுலத்தில் ஆயிரக்கணக்கான பெண்கள் என்னிடம் அன்பு கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு 'மார்கழி மாதத்தில் காலை வேளையில் நீராடுங்கள்' என்று உபதேசித்தேன். அவர்களும் அதேபோல் செய்தார்கள்''.

பாகவதத்தில் பத்தாவது ஸ்கந்தத்தில் 22ஆவது அத்தியா யத்தில் பின்வரும் செய்திகள் கூறப்படுகின்றன:

''ஹேமந்த ருது (மார்கழி — தை) வின் முதல் மாதமான மார்கழியில் காலையில் எழுந்து யமுனை நதியை அடைந்து, அதன் தண்ணீரில் நன்கு மூழ்கிக் குளித்தெழுந்து கரைக்கு வந்து அங்குள்ள மணலைக் கொண்டு அலங்கரித்து, தூப தீபங்கள் காட்டி ஹவிஸ்ஸை (அரிசியையும் பச்சைப்பருப்பையும் கலந்து

கஞ்சியை வடிக்காமல் ஆக்கப்பெற்ற பொங்கல்) நிவேதனம் செய்து உண்பார்கள்.''

''ஏ! காத்தியாயினி! மகா மாயையே! எவ்வுலகிற்கும் ஆதார-மானவளே! தேவி! பராசக்தியே! எங்களுக்கு நந்தகோபனுடைய மகனான கிருஷ்ணபிரானைக் கணவனாக அருள்வாயாக.''

இவற்றின் எதிரொலியாகப் பல கருத்துகளைத் திருப் பாவையிற் காணலாம்.

'மார்கழி நோன்பு' பற்றித் திருப்பாவை வியாக்கியானத்தின் தொடக்கத்தே வியாக்கியானச் சக்கரவர்த்தி என அழைக்கப் பெறும் ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை ''இந்நோன்புக்கு மூலம் என்னெனில், மீமாம்சையிலே ஹோலி திகரண நியாயத்தாலே சிஷ்டாசாரஸித்தம். 'மேலையார் செய்வனகள்' என்று ஸ்ரீ ஆண்டாள் தானும் அருளிச் செய்தாள்'' என்று எழுதியுள்ளார். இதனாற் பெறப்படுவது யாதெனில் மார்கழி நோன்புக்கு வேத விதியில்லை யென்பதும், ஆன்றோர் அனுஷ்டானமே அதற்கு மூலமென்பதும் பண்டையோர் கொள்கை என்பது பெற்றாம்.

பாகவதம் தசமஸ்கந்தம் 22ஆவது அத்தியாயத்தில், கண்ணன் கோபியர் துகில் கவர்ந்த சரிதம் கூறுந்தொடக்கத்தே மார்கழி நோன்பு பற்றிய முக்கியமான செய்திகள் கூறப்பட்டுள்ளதனைக் காணலாம். பேராசிரியர் மு. இராகவயைங்கார் அப்பாகவதப் பகுதிக்குப் பின் வருமாறு தமிழ் மொழிபெயர்ப்புத் தந்துள்ளார்.

''அரசனே! கோகுலத்துள்ள பெண்கள் ஏமந்த ருதுவின் முதல் மாதத்தில் (மார்கழியில்) காத்யாயனீ பூஜையாகிய விரதத்தைத் தொடங்கி ஹவிஸ்ஸைப் புஜித்துக்கொண்டு அதனை நடத்தி வந்தார்கள். அருணோதயத்தில் அவர் எழுந்திருந்து யமுனா நதியில் ஸ்நானம் பண்ணி ஈர நுண்மணலால் காத்யாயனீ தேவியின் உருவத்தைச் சமைத்து, சந்தனம் மலர் தூபம் தளிர் பழம் இவற்றாலும், சிறந்த நைவேத்யங்களாலும் அத் தேவியைப் பூஜித்தனர். ''காத்யாயனீ! ஏ மகாமாயே! மகாயோகினி! ஈசுவரி! உன்னை வணங்குகின்றோம்; எங்களுக்கு நந்தகோபர் மைந்தனாகிய கண்ணனை

நாயகனாக அருள்வீராக'' — என்ற இந்த மந்திரத்தை ஜபித்தவர்களாய் அவர்கள் கண்ணனைத் தியானித்துக் கொண்டு ஒரு மாச காலம் பூஜை செய்து விரதத்தை விடாமல் நடத்தி வந்தனர். அக்கோபிகன்னியர் ஒரு நாள், யமுனா நதியில் ஸ்நானஞ் செய்தற்காக அருணோதயத்தில் எழுந்திருந்த அவரவருடைய தோழிமார்களின் பெயரைச் சொல்லிக் கூம்பிட்டு ஒருவர்க்கொருவர் கையைக் கோத்துக் கொண்டும் கிருஷ்ணசரிதங்களைப் பாடிக்கொண்டும் நடந்து சென்றனர். அப்பெண்கள் யமுனாநதியின் ஒரு பக்கஞ் சேர்ந்து, அவ்விடத்தே, வழக்கப்படி தங்கள் ஆடைகளை அவிழ்த்து வைத்துவிட்டுக் கண்ணன் சரித்திரங்களைக் கானஞ் செய்து கொண்டு நீரில் விளையாடுவாராயினர். பரம யோகிகளுக்கும் யோகியும் ஸர்வஜ்னுமாகிய கண்ணபிரான் கோபிகன்னியர் அங்ஙனம் நீர் விளையாட்டு நிகழ்த்துவதறிந்து அப்பெண்களின் விரதபலத்தை ஆளிப்பதற்காகத் தம் நண்பர்கள் சூழ அவ்விடஞ்சென்றார்''

— ஆராய்ச்சித் தொகுதி, ப. 187, 188

கண்ணன கோபியர் துகில்களைக் கவர்ந்த செய்தி அகநானூற்றிலுங் கூறப்பெறும்.

> வண்புனல் தொழுநை வார்மணல் அகன்றுறை
> அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்
> மரஞ்செல மிதித்த மாஅல் போல
>
> — அகநானூறு, 59 : 4—6.

கோபியர் கண்ணனிடம் தங்கள் துகில்களைத் தருவான் வேண்ட, அவன் கோபியர்தம் அன்பைப் பல்லாற்றானும் சோதித்து முடிவில் அவரவர்தம் ஆடைகளை அளித்துச் ''சதிகளாகிய நீங்கள் எந்த நோக்கத்தைக் கொண்டு காத்யாயனீ விரதத்தை நடத்தினீர்களோ அந்த எண்ணம் இன்றிரவில் என்னோடு கூடி விளையாடுவதால் நிறைவேறும்; எல்லோரும் கோகுலம் செல்லுங்கள்'' என்று கட்டளையிட்டருளியதாகப் பழைய நூற்களிற் கூறப் பெறுகின்றன.

இச்செய்தியினையும், ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளையவர்களின் வியாக்கியான உரையையும் கண்ட காலையில், நாடு நல்வளம் குன்றியபோது நல்ல மழை பெய்யவும், கன்னியர் தம் வாழ்க்கைத் துணையாக உத்தம நாயகர்களைப் பெற்று இம்மைப் பயன் பெறவும் வேண்டிக் காத்தியாயனீ தேவியைக் குறித்து மார்கழித் திங்கள் முழுதும் நோன்பு நோற்பதும், அக்காரணத்தின் பொருட்டு அக்கன்னியர் அனைவரும் வைகறைப்போதில் எழுந்திருந்து, ஒருவரையொருவர் துயிலுணர்த்திச் சென்று, ஆற்றங்கரையினையடைந்து நீராடித் தேவியின் படிவம் ஒன்றனை அமைத்துத் தத்தம் எண்ணம் ஈடேறப் பூசனை புரிவதும் பண்டைய மரபென்பது விளக்கமுறுகின்றது. மேலும், திருப்பாவைப் பாசுரங்களின் இறுதியில் வரும் "எம் பாவாய்" என்ற தொடர் பாகவதத்திற் கண்டவாறு, ஈர நுண்மணலாற் சமைக்கப் பெற்ற தேவியின் உருவத்தைக் குறிப்பதாகக் கொள்ளுவதால் வரும் இழுக்கொன்றுமில்லை. 'பாவை' என்னுஞ்சொல் 'பெண் தெய்வத்தின் பிரதிமையைக் குறிப்பதாகும்' எனக் கொள்வர் ஆன்றோர். திருப்பாவையிலும்,

"நம் பாவைக்குச் செய்யுங் கிரிசைகள்"
— திருப்பாவை : 2

"நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்"
— திருப்பாவை : 3

"பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம் புக்கார்"
— திருப்பாவை : 13

என வரூஉந் தொடர்கள் கொண்டு ஒரு பிரதிமை படிவம் ஒன்று வைத்து வணங்குங் குறிப்புத் தோன்றுதல் வெளிப்படை. ஆனால் 'பாவை' எனத் திருப்பாவைச் சொல் வருமிடங்களிலெல்லாம் 'நோன்பு' என்றே வியாக்கியான கர்த்தர்கள் பொருள் கொண்டுள்ளார்கள். திருப்பாவையன்றிப் பிறவிடங்களிற் 'பாவை' என்ற சொல், நோன்பு என்ற பொருளைச் சுட்டுவதில்லை. எனவே 'நோன்பு' என்ற பொருளைச் சுட்டும் 'பாவை' என்ற சொல், வணங்கப் பெற்ற பிரதிமையடியாக வந்ததென்றே கொள்ளக் கிடக்கின்றது. ஆயினும் ஈண்டு ஓர் ஐயந்தோன்றும்.

திருமால் ஒருவரையே பத்தித் திறத்துடன் பற்றி நின்ற ஆண்டாள் தேவி விரதம் கூறும் ஒரு பிரபந்தத்தை - திருப்பாவையைப்- பாடியிருப்பாரா என்பதே ஆகும் அது. கண்ணனை அடைதற்குக் கோபியர்கள் காத்தியாயனீ தேவியைத் தொழுது நின்ற தகவு பாகவதத்தால் வெளிப்பட்டிருக்கும்போது, அக்கோபியரையே கண்ணனை அடையப் பின்பற்றிய ஆண்டாளும் அவர்கள் மேற் கொண்ட விரகினையே கையாண்டார் எனக் கொள்வதனால் வரும் இழுக்கொன்றுமில்லை. மேலும், திருமாலைத் தன் நாயகப் பிரானாக அடைய வேண்டி ஆண்டாள் நாச்சியார்திருமொழியில் காமனையும் அவன் தம்பி சாமனையும் வேண்டி நிற்கும் நிலையினைப் பின்வரும் பாடலிற் காணலாம்.

> தையொரு திங்களும் தரைவிளக்கித்
> தண்மண் டலமிட்டு மாசி முன்னாள்
> ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து
> அழகினுக் கலங்கரித் தனங்கதேவா
> உய்யவு மாங்கொலோவென்று சொல்லி
> உன்னையு மும்பியையும் தொழுதேன்
> வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
> வேங்கட வற்கென்னை விதிக் கிற்றியே
>
> — நாச்சியார் திருமொழி 1:1.

" 'சத்தியை வியந்தது' என்ற திருவெம்பாவைத் தலைக் குறிப்பு, காத்தியாயனீ அல்லது சத்தியின் விரதத்தையே புலப்படுத்தக் கூடியதென்ற என் கொள்கையை மழை வேண்டிக் கூறிய 'முன்னிக்கடல்' என்ற திருவெம்பாவைப் பாட்டிற் பராசத்தியே உவமை கூறப்பட்டிருத்தலும்,

> பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
> பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய்
>
> — திருவெம்பாவை:14

என அந்தச் சத்தியே சிறப்பாக வணங்கப்பட்டிருத்தலும் நன்கு வலியுறுத்தலுங் காண்க" எனப் பேராசிரியர் மு. இராகவையங்கார் கூறியுள்ள கருத்தும் ஈண்டு மனங்கொளத்தக்கது.

மேலும் திருப்பாவை, திருவெம்பாவை போலவே முற் காலத்தே சில நூற்கள் வழக்காற்றிலிருந்து மறைந்து போயிருக்க வேண்டும் என்பது தெரிய வருகிறது.

> கோழியுங் கூவின குக்கி லழைத்தன
> தாழி யுணீலத் தடங்கணீர் போதுமினோ
> ஆழிசூழ் வையத் தறிவ னடியேத்திக்
> கூழை நனையக் குடைந்து குளிர்புனல்
> ஊழியுண் மன்னுவோ மென்றேலோ ரெம்பாவாய்

யாப்பருங்கல விருத்தி இறுதி நூற்பாவுரையுள் மேற்கண்ட பாட்டொன்று 'திருப்பாவை' போன்ற பிரபந்தங்கள் 'பாவைப் பாட்டு' என முன்னோரால் வழங்கப்பட்டன (தொல்காப்பியம்: பொருளதிகாரம் : 461; உரை யாப்பருங்கல விருத்தி — பக். 394) என்ற குறிப்பின் கீழ்க் காணப்படுகின்றது. 'அறிவனடியேத்தி' என்ற தொடரால் இப்பாட்டு அருகக் கடவுளையோ, புத்த பகவானையோ பற்றியதாதல் வேண்டும். மார்கழி நோன்பைக் கொண்டாடுவதற்குச் சமணர் பாராயணம் செய்யும் 'திருவெம் பாவை' எனப்பழைய பிரபந்தம் ஒன்று வழக்கில் இருந்ததாகவும், அஃது அச்சிடப் பட்டுள்ளது என்றும் அறிஞர் அறைகுவர்.

தங்கத் தமிழ் இலக்கியங்களில் தொன்மைத் தமிழ் இலக்கியங் களாய்த் தோன்றும் சங்க இலக்கியங்களில் 'மார்கழி நீராட்டம்' பற்றிய குறிப்பு இல்லையெனினும் 'தைந்நீராடல்' பற்றிய குறிப் புகள் இலங்கக் காணலாம்.

எட்டுத்தொகை நூற்களுள் முதலாவதாக அமைந்திருக்கும் நற்றிணை நானூறில் இடம் பெற்றுள்ள பாடல் ஒன்று வருமாறு;

> "கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை
> முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி
> கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி
> அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்
> திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி
> வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்
> தையூ னிருக்கையில் தோன்று நாடன்

வந்தனன் வாழி தோழி யுலகங்
கயங்கண் அற்ற பைதறு காலைப்
பீளோடு திரங்கிய நெல்லிற்கு
நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே;

— நற்றிணை: 22

இப்பாட்டிற்கு நற்றிணை பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் வரைந்த உரையின் ஒரு பகுதி வருமாறு:

"நோன்புடையார் தைத் திங்கட் பிறப்பில்
நீராடி நோன்பு முற்றியிருந்து உண்ணுதல்போல"

மேலும் அவர் "தையூணிருக்கை — தைத்திங்கட் பிறப்பில் நீராடி அன்று ஆக்கப்படுமாட்சிமைப்பட்ட உணவுண்ண விடுத்தல். நோன்பியர் – ஆடி முதலாக மார்கழியீறாகக் கிடந்த ஆறு திங்களும் தேவர்க்கு இராப் பொழுதெனப் புராணங் கூறுத லுண்மையின், இரவு பிற்றையாமங் கொண்ட சில பொழுதுண்ணா திருக்கு நோன்பியர்" என்று விளக்கவுரையும் பகர்ந்துள்ளார்.

இதனால் 'தைந்நீராடல்' என்ற வழக்குண்மை விளங்கும். மேலும் ஐங்குறுநூற்றுள் மருதத்திணைக்கண் வந்துள்ள பாட லொன்று வருமாறு:

"செவியிற் கேட்பினுஞ் சொல்லிறந்து வெகுள்வோள்
கண்ணிற் காணி னென்னா குவள்கொல்
நறுவீ யைம்பான் மகளி ராடும்
தைஇத் தண்கயம் போலப்
பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே"

— ஐங்குறுநூறு:84

இப்பாட்டின் கீழ்க்காணலாகும் பழைய வுரையில், "பண்டைக் காலத்தில் தைத் திங்களின் நாட்காலையில் மகளிர் நோன்பு கருதி நீராடி வந்தனர்" என்ற குறிப்பு இடம் பெற்றுள்ளது.

அடுத்து, கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகையில் இரு பாடல்களில் தை நீராடல் பற்றிய குறிப்பினைக் காணலாம்.

மருவியான் மருளுற இவனுற்ற தெவனென்னும்
அருளிலை இவட்கென அயலார்நிற் பழிக்குங்கால்
வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
தையில்நீ ராடிய தவந்தலைப் படுவாயோ

— குறிஞ்சிக்கலி 23:10—13

இப்பகுதிக்கு 'உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர்' உரை வருமாறு:

''யான் மயக்கமுறுகையினாலே அதுகண்டு தானும் மருண்டு இவனுற்ற நோய் யாதுதானென்று கேட்கும் அருள் இவட்கு இல்லையென்று யான் கூற, அது கேட்டு அயலார் நின்னைப் பழிக்குமளவிற் கூரிய எயிற்றினையுடைய இளைய மகளிர்க்கு நடுவே வகுப்புடைய கோலத்தாலே பொலிவுபெற்று நீ தைத் திங்களில் நீராடிய நோன்பின் பயனைப் பெறுவையோ? பெற்றாய்காண்!''

''ஒன்றொழி பொதுச் சொல்'' (நன்னூல். 269)

''இருதிணை யாண்பெணு ளொன்றனை யொழிக்கும்
பெயரும் வினையுங் குறிப்பி னானே'' (நன்னூல். 352)

என்னும் நன்னூல் நூற்பாக்களின் உரையில், மயிலைநாதர், உயர்திணை வினைச்சொல் ஆணொழித்து நின்றமைக்கு – மருவூரார் தைந்நீராடினார்', 'இன்று இவ்வூராரெல்லாந் தைந் நீராடுப' என்ற தொடர்களை உதாரணம் காட்டலால், தைந் நீராடல் மகளிர்க்கு உரியதேயன்றி ஆண்பாலார்க்குரியதன் றென்பது பெற்றாம்.

பரிபாடலில் வையையாற்றின் வனப்பினை வகையுறப் புனைந்து காட்டா நிற்கும் ஆசிரியர் நல்லந்துவனார் இத்தைந் நீராடல் பற்றிய குறிப்பை வழங்கும் அவர் பாடியுள்ள பரிபாடலின் ஒரு பகுதி மட்டும் கீழே காட்டப்படுகின்றது.

"கனைக்கு மதிர்குரல் கார்வான நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கண் மறுநிறை யாதிரை

விரிநூ லந்தணர் விழவு தொடங்கப்
புரிநூ லந்தணர் பொலங்கல மேற்ப
வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா வாடலி னாய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்பலர் பாடிப் பருமண லருவியின்
ஊதை யூர்தர வுறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்
றையன் மகளி ரீரணி புலர்த்தர
வையை நினக்கு மடைவாய்த் தன்று
மையாட லாடன் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பி னவரவர்
தீயெரிப் பாலுஞ் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுதல் நோக்கினாள்.''

— பரிபாடல்: 74—92



தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் இப்பகுதிக்குத் தரும் எளிய விளக்கம் வருமாறு:

''கார் வானம் அதிர்குரல் நீங்கப் பனி மிகுதலாற் குளிரால் நடுங்குதலையுடைய முன்பனிப் பருவத்தில் மார்கழி மாதத்தில் திருவாதிரை நட்சத்திரத்தில் ஆகமங்களை யுணர்ந்த பூசகர் அத் திருவாதிரைக்குத் தெய்வமாகிய சிவபெருமானுக்குரிய விழாவைச் செய்யத் தொடங்கினர்; அந்தணர் பொற்கலத்தை யேந்தினர்; உலகம் மழையாற் குளிர்வதாக வென்று அம்பா வாடலைச் செய்யும் கன்னியர், முதிய அந்தண மகளிர் நோன்பு செய்யும் முறைமையைக் காட்டப் பனியையுடைய விடியற்காலத்தே நீராடினர்; அங்ஙனம் ஆடிய பின்னர், குளிர்வாடை வீசுவதால் அம்மகளிர் கரையில் அந்தணர் வேத மந்திரங்களால் வளர்த்த அக்கினியினருகிற் சென்று தம் ஈர ஆடைகளை உலர்த்தினர். அவ்வந்தணர் அந்த அக்கினியினிடம் கொடுக்கும் அவியானது, வையையே நினக்கு வாய்த்ததாக இருந்தது.

மையோலை பிடித்த இளைய பிள்ளைகளின் விளையாட்டிற்கு மாறாக எழுந்து காமக் குறிப்பில்லாத விளையாட்டைச் செய்கின்ற

ஆயத்தினையுடைய அக்கன்னி மகளிர் தம் புலன்களையடக்கித் தவத்தைப் பலகாற் செய்தோ, தம் தாய்மார்க்கருகில் நின்று தைந்நீராடலாகிய தவத்தை நின்பாற் செய்யப் பெற்றனர்? சொல்வாயாக.''

இப்பகுதிக்கு உரை வரைந்த பரிமேலழகர் ''கார்வானம் அதிர்குரல் நீங்கப் பனிமிகுதலாற் குளிரால் நடுங்குதலையுடைய முன்பனிப் பருவத்து ஞாயிறு தெறாத கடை மாரியையுடைய மார்கழி மாதத்துத் திங்கள் மறுவொடு நிறைந்த திருவாதிரை நாளின்கண்'' என்றும், ''திருவாதிரை நிறைமதி நாளாங்கால் ஆதித்தன் பூத்தடத்தின்கண் (பி—ம். பூராடத்தின்கண்) நிற்கு மாதலின் அதனுடைய மார்கழி மாதம் குளமெனப் பட்டது'' என்றும், ''ஆகமங்களையுணர்ந்த பூசகர் அத்திருவாதிரைக்குத்தெய்வ மாகிய இறைவனுக்கு விழாவைத் தொடங்க'' என்றும், ''அம்பா வாடலையுடைய கன்னியர், சடங்கறிந்த முதுபார்ப்பனிமார் நோற்கு முறைமை காட்டப் பனியையுடைய புலர்தற்கண் ஆடிப் பரு மணலையுடைய ஒழுகுகின்ற நீரின் கண்ணே குளிர்வாடை வீசுதலான் நின் கரைக்கண் உறையும் அந்தணரது வேதநெறி யால் வளர்ந்த தழங்கழலைப் பேணிய சிறப்புடனே அவ்வொப்பனை யையுடைய மகளிர் சென்று, அதன்கண் தன் ஈரவணியைப் புலர்த்தாநிற்க, அவ்வந்தணர் அவ்வழற்கட் கொடுக்கும் மடை, வையாய், நினக்கு வாய்ப்புடைத்தாயிருந்தது'' என்றும், ''அம்பாவாடலென்று தைந்நீராடற்குப் பெயராயிற்று, தாயோ டாடப்படுதலின்'' என்றும், ''இம்மையின்பங் குறித்துக் கன்னியர் தைந்நீராடலும், மறுமையின்பங் குறித்து ... இவை நினக் கன்றி ஏனையா ... வென்றது'' என்றும் வரைந்துள்ள உரைகளை நோக்கிப் பின் பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்களின் கருத்துரையினை நோக்குதல் நலம் படைத்ததாகும்.

''இனி, இந்நோன்பை 'அம்பாவாடல்' என்ற பெயரால் ஆசிரியர் நல்லந்துவனார் கூறுகின்றார். தாயோடு ஆடப்படுதலின் இப்பெயர் பெற்றதென்பர். உரையாளரா்கிய பரிமேலழகர் 'தாயருகாநின்று தவத்தைந்நீராடுதல்' என்று இறுதியில் வரும் தொடரைக் கொண்டு அவ்வுரையாளர் இப்பொருள் கருதினாராகத் தெரிகின்றது. விரதம் நடத்துவோர் சிறுமியரேயாதலின் அவர்

நீராடும்போது அவர் தாயரும் பக்கத்தில் நிற்பது இயல்பாதல் பற்றித் 'தாயருகாநின்று' என்று கூறப்பட்டதாகக் கொள்ளத் தக்கதேயன்றி, அங்ஙனம் தாயார் நிற்பதை ஒரு பெரிய விசேட மாக்கி, அதுபற்றி 'அம்பாவாடல்' என்று மார்கழி நீராட்டத்துக்கே பெயர் வழங்கலாயிற்று என்று கொள்வது ஏற்புடையதாமோ — என்பது அறிஞர் ஆராய்தற்குரியது. அதனால் முன் குறித்த பாகவத வரலாற்றுக்கியைய, அம்பாவாடல் என்பதற்குத் 'தேவியின் பொருட்டு நிகழ்த்தப்படும் நீராட்டு' என்று பொருள் காணுதலே மிகவும் பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. அம்பா என்பது தேவியைக் குறித்தல் வெளிப்படை. மார்கழி நோன்பைத் திருவா திரைக்குரிய இறைவனது விழாவாகப் பரிமேலழகர் கருதினரேனும், அச்செய்தியொன்றும் மூலத்தாற் புலப்படாமையும் காண்க'' (ஆராய்ச்சித் தொகுதி, பக். 194—195)

''பரிபாடல் கூறுமாறு, மார்கழிப் பௌர்ணமியிற் றொடங்குவ தாகிய நீராட்டத்தைத் தைந்நீராடலென இங்ஙனம் முன்னோர் கூறியதன் காரணம் என்னெனிற் கூறுவேன். பௌர்ணமியும் திருவாதிரையும் மார்கழிமாதம் 15ஆம் தேதியிலேனும் அதன் பின்பேனும் ஒன்றுசேர்வது இயல்பு. அமாவாசையோடும் பௌர்ணமியோடும் மாதங்கள் முடிவுபெறுதலால் முறையே அமாந்தம், பூர்ணிமாந்தம் என்னும் பெயர்கொண்ட இருவகை மாதமுறைகள் வழங்கி வருவனவற்றுள், பூர்ணிமாந்தம் என்ற முறைப்படி, மார்கழியிடையிற் பௌர்ணமிக்குப் பின்வரும் மாதம் - மார்கழியின் பிற்பகுதியும் தையின் முற்பகுதியுமாமென்றும், அதனால் மார்கழி நீராட்டம் தைந்நீராட்டம் என்று இருவகை யாகவும் அந்நீராடலைக் கூறுவது கூடுமென்றும் கூறுவர். அதனால், மார்கழியில் நிகழ்த்தப்படுவதாகத் தெளிவாய் அறியப் பட்டதைத் தைந்நீராடல் என்று பரிபாடல் முதலியவை வழங்குவ தற்கு இதுவே காரணம் என்க. எனவே, மார்கழிநோன்பு முற் காலத்தே பூர்ணிமாந்த முறைப்படி அனுஷ்டிக்கப்பட்டதாதல் வேண்டுமென்பதும், ஆயினும், ஸௌரமானப்படி தைம்மாதமும் அதனுடன் கலந்து வருதலால் 'தைந்நீராடல்' என்று அதற்குப் பெயர் வழங்கியிருத்தல் வேண்டுமென்பதும் பெறப்படுகின்றன''

— ஆராய்ச்சித்தொகுதி, பக். 195, 196.

இப்பதினோராவது பரிபாடலின் அடியிற் கண்டுள்ள கொளு வருமாறு:

''வரைவுமலிந்த தோழி கன்னிப் பருவத்துத் தைந்நீராடத் தவம் தலைப்பட்டேமென வையையை நோக்கித் தலைவன் கேட்பச் சொல்லியது'' என்பதாகும்.

தலைமகள் கன்னிப்பருவத்தில் தைந்நீராடி நோற்ற சிறப்பாலேயே தன் நெஞ்சுகக்கும் உத்தமத் தலைமகனைப் பெற்று இன்புற்றாள் என்பது பெறப்படுகின்றது. திருவெம்பாவை நல்ல சிவனடியாரை விரும்பி வேண்டும் கன்னி மகளிரைக் குறிப்பிடத் திருப்பாவை கண்ணனையே கணவனாக வேண்டி நையும் ஆயர் மகளிர் திறம் கூறுகின்றது.

பிங்கலந்தை நிகண்டும் பெண்பாற் பிள்ளைப்பாட்டின் திறம் கூறும் பொழுது பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

''பேணுஞ் சிறப்பிற் பெண்மக வாயின்
மூன்றா மாண்டிற் குழமண மொழிதலும்
ஐந்தின் முதலா வொன்பதின் காறும்
ஐங்கணைக் கிழவனை யார்வமொடு நோற்றலும்
பனிநீர் தோய்தலும் பாவை யாடலும்''

— பிங்கலந்தை: 1369

என்ற குறிப்பு தைந்நீராடல் பற்றிய விளக்கம் தருகின்றது.

தமிழ்நாட்டின் பழைய பழக்கங்கள் பலவும் இன்றும் வழக்கிற் கொண்டுள்ள இன்றைய மலையாள நாட்டில், இம்மார்கழி நோன்பு சிற்சில மாறுதல்கள் நேர்ந்து பின்வருமாறு கொண்டாடப் படுவதாகத் திரு. கோபால பணிக்கர் ''மலையாளமும் அதில் வாழும் மக்களும்'' (Malabar and its folk) என்னும் தம் ஆங்கில நூலிற் குறிப்பிட்டுள்ளார்.

'' ''மலையாளத்தில் நடைபெறும் மூன்று முக்கிய உற்சவங் களிலே திருவாதிரை என்பதொன்றாம். அஃது அங்கே தனுர் மாஸத்தில் திருவாதிரை நாளிலே முறைப்படி நிகழும். இவ் வுற்சவம் பெண்களால் மட்டும் மிகுதியாகக் கொண்டாடப்

படுகின்றது. உத்தேசம் ஒருநாள்தான் அது விசேடமாக நடை பெறும். இவ்விழா, புராணத்துக் கூறப்பட்டபடி, காமனுடைய அழிவுக் காலத்தைக் காட்டுகிறதென்பது ஜனங்களின் அபிப் பிராயம் ... (காமனுடைய) துக்ககரமான கதையானது ஞாபகத்தில் வைக்கப்பட்டு முக்கியமாக ஸ்திரீகளால் வருஷத்துக்கொருமுறை விசேஷ உற்சவமாகக் கொண்டாடப்படுகிறது. குறித்த நாளுக்கு ஒரு வாரத்துக்கு முன்பாகவே இவ்வுற்சவம் தொடங்கப் பெறும். காலை நாலுமணிக்கே பெண்களெல்லாம் படுக்கைவிட்டெழுந்து ஆசார முறைப்படி தடாகங்களில் ஸ்நானம் செய்வார்கள். அவருள்ளும், பாலப் பருவமுள்ள பெண்களே கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து நீராடுதல் அதிகம். அக்காலங்களில் எல்லோரும் தண்ணீருக்குள் மூழ்கி உற்சாகமாகப் பாடுவர். அப்பாட்டு, யாரேனும் ஒருபெண்ணால் சுருதியை அநுசரித்து மன்மதனைக் குறித்து ஆரம்பிக்கப்படும். இந்தப் பாட்டு, பெண்கள் தம் கைகளால் தண்ணீரைத் தட்டுவதனால் உண்டாகும் ஒரு விசேஷ சப்தத்தை அநுசரித்து நிற்கும். அவர்கள் இடக்கையை மூடித் தண்ணீர் மட்டத்திற்குக் கீழே ஜலத்தில் அமிழ்த்துக் கொண்டு வலது உள்ளங்கையைச் சாய்ப்பாக அடித்து இந்தத் தாளத்தை உண்டாக்குகின்றனர். இப்பெண்கள் பாடுங்கால முழுதும் இவ்வாறு சத்தம் செய்யப்படும். இத்தகைய தாளத்துடன் ஒரு பாட்டு முடிந்ததும் மற்றவரும் அதனைப் பின்தொடர்ந்து பாடியும் சிறிதுநேரம் இளைப்பாறி மறுபடியும் அதனைத் தொடங்கியும் இவ்வாறு முறை வைத்துக் குதூகலிப்பது வழக்கம். இவ்விதமாக அருணோதய காலம்வரை பெண்களெல்லாம் காலத்தைப் போக்கி உடம்பை நன்றாகத் துடைத்துக் கொண்டு சுத்தமும் மிக்க அலங்காரமுமுள்ள ஆடைகளை உடுத்தும், கண் களுக்கு அஞ்சனந் தீட்டியும் நெற்றிக்குறி தரித்துக் கொண்டும், தாம்பூலதாரணஞ் செய்தும் விளங்குவார்கள். பிறகு எல்லாப் பெண்களும் உற்சவத்தில் முக்கியமாக நடைபெறும் ஊஞ்ச லாட்டத்தைத் தொடங்குவார்கள்.

இவ்வாறு ஸ்நானம் செய்வதும் பாடுவதும் ஊஞ்சலாடுவதும் உற்சவக் கடைசி நாளோடு முடிவு பெறும். ஆனால், இக் கொண்டாட்டமானது இறுதி நாளிற்றான் விசேடமாக நடை

பெறுவதாம். உற்சவ முடிவில் காலையிலே எல்லாப் பெண்களும் ஸ்நானஞ் செய்தபிறகு கொஞ்சம் வெள்ளம் குடித்துவிட்டுப் பகலில் ஒரு பெரிய விருந்து நடத்துவார்கள். அவ்விருந்தில் உயர்ந்த மலைப்பழங்களும் சர்க்கரை கலந்த சீந்திற்பாயஸமும் உண்ணப் படும். அஸ்தமனம் வரையிற் கொண்டாட்டமும் ஆடல்பாடல்களும் நடைபெறும். விஷு, ஓணம் என்ற திருவிழாக்களிற் புருஷர்கள் எவ்வாறு மாலையில் வந்திருப்பது அவசியமோ, அவ்வாறு இத் திருவாதிரைத் திருவிழாவிலும் வந்திருத்தல் அவசியம். அப்படிச் செய்யத் தவறிய புருஷர் செயலை, தங்கள் ஸ்திரீகளை விட்டுப் பிரிந்து போவதற்கு அடையாளமாகக் கருதுவார்கள். மார்கழி மாதத்துப் பனியுறைப்பும் கீழ்க்காற்றின் குளிர்மிகுதியும் பெண் களின் மெல்லிய மேனிகட்கு மிக்க துன்பத்தைக் கொடுக்கக் கூடியதாயிருந்தும், இம்மகோற்சவத்தில், காலையில் நீராடுவதிலும் அந்நீராட்டத்தில், ஆடல் பாடல் நிகத்துவதிலும் அதிக ஆனந்தத்தை அன்னோர் அடைகின்றனர். பனியின் உறைப்பால் காற்றில் இலை நடுங்குவதுபோலச் சரம் படபடத்துக் கொண் டிருந்தும் நீராடுகின்ற இக்கொண்டாட்டம் அவர்கட்கு அதிக மனோற்சாகத்தை அளிக்கின்றது. மலையாள நாட்டில் நடக்கும் இக்கொண்டாட்டத்தைப் போல வேறு எவ்விடத்துங் காண்பதரிது'' எனக் கண்டு கொள்க''. (ஆராய்ச்சித்தொகுதி, பக். 201, 202).

மலையாள நாட்டில் இன்றும் மார்கழி நீராடும்பொழுது தண்ணீர்த் தடாகத்தில் தண்ணீரிற் பேரொலி எழுப்பிக் கொண்டு சேரநாட்டுச் செவ்வியர் மூழ்கும் நிலையினையே தம் பாட்டிற் கிளத்திக் கூறுவார் போன்று மணிவாசகப் பெருந்தகையாரும்,

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி

— திருவெம்பாவை: 11

என்றும்,

பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புன லாடேலோர் எம்பாவாய்

— திருவெம்பாவை: 13

என்றும் கூறியிருக்கக் காணலாம். மேலும், இவ்விழாவின் இறுதியில் மலையகத்து மகளிர் தம்மை ஆடை அணிகலன்களால் நன்கு ஒப்பனை செய்து கொண்டு, உற்றாரும் உறவினருமாக எல்லோரும் கூடியிருந்து விருந்துண்பதும், அவ்விருந்தில் பாயசம் விசேட உணவாகக் கொள்ளப்படுவதும் இன்றும் காணக்கிடைக்கும் காட்சிகளாகும். இக்காட்சியினையே விண்டுரைப்பார் போலத் திருப்பாவைச் செல்வியாரும்,

கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறும் சன்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாம்அணிவோம்
ஆடை உடுப்போம் அதன்பின்னே பால்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடி இருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்.

— திருப்பாவை: 27

என்று குறிப்பிட்டிருப்பது கொண்டு அறியலாம்.

"மார்கழித் திருவாதிரையன்று 'அக்காரடலை' நிவேதனம் செய்வதற்கு என்று முதல் இராஜராஜ சோழன் கோயிற்கு நிலங்கள் விட்டுள்ள செய்தி சாஸனத்தால் அறியப்படுகின்றது. Ep. Rep. 68 of 1914) இதனால் அக்காரடலை (சர்க்கரைப் பொங்கல்) அவ்வுற்சவத்திற்கு முக்கியமானதென்பது உணரப்படும். வைஷ்ணவர்க்குள் அது சிறப்பாக இன்றும் வழங்கப்படுகின்றது. திருவாதிரைக்களி எனச் சைவர்க்குள் வழங்குதலும் இத்தகைய தேயாம்" (பேராசிரியர் மு. இராகவையங்கார்; ஆராய்ச்சித் தொகுதி இரண்டாம் பதிப்பு, மார்ச்சு 1964, பக். 203).

### தனியன்கள்

#### பராசர பட்டர் அருளிச் செய்தது

நீளாதுங்க ஸ்தனகிரிதடீ ஸீப்த முத்போதிய கிருஷ்ணம்
பாரார்த்யம் ஸ்வம் ச்ருதிசதசிரஸ் ஸித்தமத்யா பயந்தீ!
ஸர்வோச் சிஷ்டாயாம் ஸ்ரஜிநிகளிதம் யாபலாத் கிருதிய புங்க்தே
கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய.

இதன் பொழிப்புரை வருமாறு:

"நீளைப் பிராட்டியில் அம்சமான நப்பிள்ளைப் பிராட்டியின் மார்பகத் தாழ்வரையிலே சுகநித்திரை செய்பவனும், தான் சூடிக் களைந்த மாலையால் கட்டப்பட்டுள்ளவனுமான ஸ்ரீகிருஷ்ண னாகிற சிங்கத்தை எழுப்பிப் பல வேதங்களின் உண்மைகளையும் உணர்த்தி, தனது பாரதந்திரியத்தால் எந்த ஆண்டாள் அவனை வலிய அனுபவிக்கிறாளோ, அந்த ஆண்டாளுக்கு என் வணக்கங் கள் காலமுள்ளளவும் இருக்கட்டும்." (சாண்டில்யன் விளக்கவுரை)

### உய்யக் கொண்டவர் அருளியவை

1. அன்னவயற் புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம் — இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

2. சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய் — நாடிநீ
வேங்கடவற் கென்னை விதியென்ற இம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு.

நாயகன் நாயகி பாவம் எனப்படுவது பக்தி நூற்களிற் பலகாலும் காணப்படும் காட்சியாகும். உலகில் உள்ள எப் பொருள்களையும் ஆண்டவன் இயக்குகின்ற காரணத்தால், ஆண்டவனை நாயகனாகவும், தங்களை நாயகியாகவும் பாவித்துப் பெரியோர் பலர் பாடல்கள் புனைந்து அந்த உறவின் வழியே பேரின்பம் துய்த்தனர். இரகுவம்சத்தில் மகாகவி காளிதாசன் ஹரி ஒருவனே புருஷோத்தமன் எனப் புகலப்படுகின்றான் என்பர். திருமால் நாயகன் என்ற நிலையில் மற்றவை அனைத்தும் நாயகி நிலையைப் பெறுகின்றன. எனவே ரிஷிகள் தங்களை நாயகிகளாகக் கற்பனை செய்து கொண்டு, புருஷலட்சணத்துடன் விளங்கும் திருமாலை நாயகனாக எண்ணிப் பாடினார்கள். எனவேதான் நாயன்மார்களும் ஆழ்வார்களும் தங்களை நாயகி களாகப் பாவித்துக் கொண்டு தங்கள் தங்கள் கடவுளரை நாயகனாகக் கொண்டு கவிதைகள் பல இயற்றினர். இவர்கள்

பெரும்பாலும் ஆண்களேயாதலின் தங்களைப் பெண்களாகப் பாவித்துக் கொண்டு பாடல்கள் புனைந்தனர். ஆண்டாளுக்கோ வெனில் அத்தகைய நிலைமை வேண்டுவதன்று. ஆண் பெண் வேடம் போடுவதைக் காட்டிலும், பெண்ணே பெண் வேடம் புனைந்து நிற்றல் இயற்கையாய் இலங்கும். எனவே நாயகி களாகத் தங்களைப் பாவித்துப் பாடல்கள் புனைந்த ஆழ்வார் களைவிட, பெண்ணாகவே பூமிதனிற் பிறந்த ஆண்டாள், ஆண்டவ னை, கண்ணனைக் கணவனாக எண்ணி உள்ளங் கலந்து உறவாடி மகிழ்ந்தது பாராட்டத்தக்க பண்பு படைத்ததன்றோ! இதனாற்றான் பிற ஆழ்வார்கள் திருமால்மாட்டுக் கொண்ட ஆரா அன்பினை 'மேட்டு மடை' என்றும், ஆண்டாள் அணியரங்கன்பாற் செலுத்தின அன்பினைப் 'பள்ளமடை' என்றும் பெரியோர் பகர்வாராயினர்.

''தேக நலத்தில் சிரத்தையுடைய சாதாரண மனிதர்களைவிட ஆத்ம சொரூபம் அறிந்த ரிஷிகள் பல மடங்கு உயர்ந்தவர்கள். ரிஷிகளை விட ஆழ்வார்கள் பன்மடங்கு உயர்ந்தவர்கள். மற்றைய ஆழ்வார்களைவிடப் பெரியாழ்வார் எத்தனையோ மடங்கு உயர்ந்தவர். அந்தப் பெரியாழ்வாரைவிட அவர் வளர்ப்பு மகளாம் ஆண்டாள் அநேக மடங்கு உயர்ந்தவள்'' என்று வியாக்கியானச் சக்கரவர்த்தி ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை விளம்புகின்றார். எத்தனை மடங்கு ஆண்டாள், ஆழ்வார்களிலும் உயர்ந்தவள் என்பதனை அவர் குறிக்குமிடத்து,

''பர்வதப் பரமாணு வோட்டை வாசிபோரும்''

என்கிறார். அதாவது ஆண்டாள் மலை; மற்றவர் அவள் முன் தூசி'' என்று சிறப்பித்துச் சொல்கிறார். இவ்வாறு மற்ற ஆழ்வார்களிலும் ஆண்டாளுக்கு ஏற்றமும் போற்றுதலும் தந்தமைக்குக் காரணம் உண்டு. 'எம்பெருமானுக்கு யாரால் எப்பொழுது என்ன தீங்கு நேருமோ!' என அஞ்சி, எப்போதும் நிலைக்கும் வண்ணம் அவனுக்குப்,

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயி ரத்தாண்டு
பல்கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
செவ்வடி செவ்விதிருக் காப்பு

என்று பல்லாண்டு பாடும் ஆழ்வார்க்கு இவர் ஒரே மகளார் அல்லவா? மேலும் ஆழ்வார் குடி அனைத்திற்குமே இவள் ஒருத்தியே ஒரு தனிமகளாய்த் துலங்குகின்றார். அவ்வகையில் நோக்கும்போது ஆழ்வார் பதின்மர்க்கும் ஒரே மகளாராய்த் தோன்றிய இவருக்கும் ஆழ்வார் அனைவரின் ஞான பக்தி வைராக்கியங்கள் வந்து சேர்ந்ததோடு, அவர்கள் பக்தி வேறு, தாங்கள் வேறு என்று நின்றது போலல்லாமல், பக்தியையும் ஆண்டாளையும் பிரித்தற்கு இயலா நிலையில் பக்தி மயமாகவே நிலை நின்றவர் ஆண்டாள் எனில் அஃது உண்மையேயன்றோ!''

அஞ்சுகுடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய்

என்று உபதேச ரத்தினமாலை (24) பகர்வது இக்கருத்திற்கு அரண் சேர்ப்பதாகும்.

ஆண்டாள் தாம் கண்ணாற் காணுகின்ற இயற்கைப் பொருள்கள் யாவற்றிலும் இறையைக் காண்கிறார். பார்க்குமிட மெல்லாம் பரம்பொருளாகவே இவர்க்குக் காட்சி வழங்குகின்றது.

வைணவப் பிரபந்தங்களில் மயர்வற மதிநலம் பெற்றிருந்த பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மையார் திருப்பாவை. "இந்நூல் அஞ்ஞானத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஆன்மாக்களுக்கு ஞானம் ஊட்டி இறையோடு கலந்து இன்பந்துய்க்கச் செய்தலை விளக்குகிறது எனக் கொள்க. அன்றியும் எங்ஙனம் ஓம் என்னும் பிரணவம், திருமந்திரம், துவயம், சரமஸ்லோகம் ஆகிய மூன்று மந்திரங்களின் பொருள்களையும் தன்னுள் கொண்டுள்ளதோ, அங்ஙனமே இந்நூலின் 'மார்கழித் திங்கள்' எனத் தொடங்கும் முதல் பாசுரமும் மற்ற முப்பது பாசுரங்களின் பொருளையும் தன்னகத்துக் கொண்டுள்ளது. இவ்வொரு பாசுரத்தைக் கொண்டே எல்லாப் பொருள்களையும் அறியலாம். மற்றப் பாசுரங்கள் இதை நன்கு விளக்கி அழகுபடுத்தாநிற்கின்றன. இந்நூல் அறிஞருக்குப் பெருவிருந்தாகும். அன்றியும், இந்நூலை ஒரு விதைக்கு ஒப்பிடலாம். ஏன்? வேர், இலை, பூ, காய், கனி களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு சிறு உருவத்தில் காணப் படும் விதையைப் போன்று இதுவும் பல பொருள்களைப் பொதிந்து

வைத்துக் கொண்டு சிறுவடிவில் காட்சி அளிக்கிறது; எளிய நடையும், உயர்நோக்கும் உள்ளது; தொடுந்தோறும் நீர் ஊறும் மணற்கேணியன்ன, ஆயுந்தோறும் பொருள் சுரக்கும் இயல் புடையது; எளியார்க்கு எளியது; அரியார்க்கு அரியது; அழகின் அமைப்பு; ஆனந்த ஊற்று; யாப்பின் இலக்கணம்; அணிக்குச் சான்று; ஆன்ம ஆக்கம்; அறநிலையம்; பொருட்பேழை; இன்பத் தேக்கம்; விடுதலை வேட்கை; பாகவதர் பாராயணம்; மார்கழியின் மாண்பு; தூய நோன்பு; பிரபந்தர் உயிர் நிலை; வைணவத் தத்துவம்; கைங்கரியத்திலுற்ற களையறுக்கும் அரிவாள்; அஞ்ஞான மயக்கங்களுக்கு மருந்து; கடவுளைக் காட்டும் விளக்கு; இறைக் காதலை ஊட்டும் இன்னமுது. இதன் சீர்மை இதழில டங்குவதன்று. இதன் ஆராய்ச்சி தனிப்பட்டதாகும். நூலைக் கொண்டு ஆசிரியர் பெருமையை உணர்தற்கு இஃதொரு தக்க கருவியாகும்'' என்று பாராட்டியுள்ளமை காண்க.

மேலும் தாய்லாந்தில் மன்னர் முடிசூடிக் கொள்ளுங்காலை யில் திருவெம்பாவை இசைக்கப்படுகிறது என்பர் அறிஞர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்.

''இந்நூலில் பாயிரம், தோழியரைத் துயிலுணர்த்தல், எம் பெருமானையடைந்து பயன்பெறுதல் ஆகிய மூன்று பகுதிகள் உள்ளன. பாயிரமே ஒரு நூலிற்கு உயிர்நிலை. அது நூற் பொருளைத் தெளித்துக் காட்டற்கு ஓர் ஆடி என்னலாம். இந் நூலில் முதல் ஐந்து பாசுரங்களும் பாயிரம். இது முதற்பகுதி. செல்வம், செயல், குணங்களில் பத்துவகைப்பட்ட ஆயர்பாடிப் பெண்களை அஞ்ஞானத் துயிலிலிருந்து ஞான விழிப்பிற்குக் கொணர்வது இரண்டாம் பகுதி. அம்மகளிரை இறை கைங் கரியத்திற்குத் தகுதியுடையவராகச் செய்வது மூன்றாம் பகுதி. இப்பகுதி ஆழ்வார்கள் பதின்மருக்கும் ஊக்கமூட்டித் திருமாலின் அருளைக் குறிக்கிறதென்றும் அறிஞர் பகர்கின்றனர்'' என்பதும் நோக்கத்தக்கது.

(பெரியாழ்வார் பெண்கொடி: பக். 96, 97, 98).

ஒரு பெரிய காட்சியினை - தோற்றத்தினை - ஒரு சிறிய கண்ணாடி காட்டிவிடுவதைப் போலத் திருப்பாவையின் முதற் பாட்டே பலபல உண்மைகளை உணர்த்தி நிற்கின்றது. காலங்

கடந்தும் வாழும் இறவாக் கவிதைகள் என்று திருப்பாவை முழுவதையுமே அழைக்கலாம் என்றாலும் இம்முதற்பாடல் சாவா மூவாக் கவிதை எனச் சாற்றி விடலாம்.

அம்முதற்பாடலை நோக்குவோம்:

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்! போதுமினோ நேர்இழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏர்ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய்

— திருப்பாவை : 1

தமிழ்க்குடியின் பழமையினையும் பெருமையினையும் ஒருங்கே புலப்படுத்தும் வகையில் சேர இளவல் ஐயனாரிதனார் தம் புறப் பொருள் வெண்பாமாலையில் ‘குடிநிலை’ என்ற பகுதியில்,

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே — வாளொடு
முன்தோன்றி மூத்த குடி

— புறப்பொருள் வெண்பாமாலை; குடிநிலை

என்று குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தினையே இன்னும் எளிதாக வும் எழிலாகவும் எவர் மனத்திலும் பதியும் வகையில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள்,

திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் முகில்களோடும்
மங்குல்கடல் இவற்றோடும் பிறந்த
தமிழோடு பிறந்தோம்

— பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி

என்று பெருமிதத்துடன் பகர்வர். முதற் காப்பியமாம் சிலம்பு தந்த சேர இளவல் இளங்கோவடிகள் ‘குணவாயிற் கோட்டத்து அரசு துறந்து’ இருந்தவரேயானாலும் அழகு துறந்து இராதவர்.

ஆகையினாலே தம் எழிலார் காப்பியத்தையே, "திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்" என்றே தொடங்குகின்றார். "காப்பியத்தை மங்கலச் சொல்லாற் றொடங்க வேண்டும் எனவே திங்கள் என்று தொடங்கினார், திங்கள் மங்கலச் சொல்லாதலின்" என்ற பழையவுரைகாரரின் குறிப்பு ஈண்டு நோக்கத் தகுவதாகும். அம்முறையில் 'கண்ணபிரான் கீதையில் உ.கப்பாகப் பேசியிருக்கும் மாதமாகிய மார்கழியில் மங்கலச் சொல்லாம் திங்கள் அடுத்து அமையத் திருப்பாவையின் முதற்பாசுரம் தொடங்குகின்றது. 'மதிநிறைந்த நன்னாள்' எனப்படுவது முழுநிலா நாளினை - பௌர்ணமியினைக்-குறிக்கும். "எழுதரு மதியம் கடற்கண்டாங்கு" என்று குறுந்தொகை மதியின் மாட்சியினைப் புலப்படுத்தும்.

நீராடப் போதுவீர் போதுமினோ - பாவை நோன்பை முன்னிட்டு நீராட விருப்பமுள்ளவர்கள் வருவீர்களாக - என்ற அழைப்புடன் பாடல் தொடங்குகின்றது. திருப்பாவை பாடிய பாவை யாரை அழைக்கிறார் என்பது அடுத்துப் புலனாகி விடுகின்றது.

நேரிழையீர், சீர்மல்கும் ஆய்ப்
பாடிச் செல்வச் சிறுமீர்காள்

எவரை நாம் பணிகொள்ள வேண்டுமோ அவர்களை முன் னிலைப்படுத்தி, முகமன் கூறி, குளிர்ந்த சொற்களாற் குளிர்வித்து அழைத்தால்தான் அவர்கள் ஏற்று வருவர். இத்தகு விரகு ஆண்டாளின் உளவியற்பாங்கு உணர்ந்த திறத்தினைப் புலப் படுத்தா நிற்கும். திருப்பாவையின் பலவிடங்களில் இவ்விரகினை (technique) அவர் கையாள்வதனைப் பின்னரும் காணலாம். பிறி தொரு பாடலில்

சில்லென்று அழையேன்மின்

என்றொரு பெண் எதிர் பேசுவதாக வருவதனையும் நோக்குக.

அழகிய அணிகலன்களை அணிந்து அழகு துலங்குபவர்களாகப் பெருமை துலங்கும் ஆயர்பாடியின் அணியிழையார் - செல்வச் சிறப்புடன் விளங்கும் சிறுமியர் – காட்சி தருகின்றனர். இவர் ஏன் ஆயர் மகளிரை அழைக்கின்றார் என்பதனை முதற்கண் காண வேண்டும்.

மாயோன் மேய காடுறை யுலகமும்

— தொல்; அகத்திணையியல்:5

என்பர் தொல்காப்பியனார். காடும் காடு சார்ந்த நிலமும் முல்லை நிலம் எனப்படும். இது குறிஞ்சியாகிய வன்னிலத்திற்கும் மருத மாகிய மென்னிலத்திற்கும் இடைப்பட்ட நிலமான காரணத்தால் இடைநிலம் என்றும் வழங்கும். இவ் இடை நிலத்தில் வாழ்ந்த வர் இடையர் எனப்பட்டனர். இவர்கள் தொழில் பசுநிரை மேய்த்தலாகும். பாலும் வெண்ணெயும் இவர்களின் செல்வ வளப்பொருள்களாம். அந்நாளிற் பசுவைக் கொண்டே ஒருவர் தம் செல்வ வளம் கணக்கிடப்பட்டது. தலைமகள் ஒருத்தி, திருமணமாகித் தலைமகன் வீடு சென்ற காலையில் அப்புக்ககத்தில் ஒரு பசுவே கட்டப்பட்டிருந்தது. அவ்வொரு பசுவால் கிடைக்கும் எளிய வருவாயே (ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை) அக்குடும்பத் திற்கு வாய்ப்பதாயிருந்தது. ஆனால் இப்பொழுது இப்புதுப் பெண் வரவால் நாள்தோறும் விழவயரும் வீடாகத் திகழ்கின்றது. பலரும் விருந்தினராக வந்து உண்டு செல்கின்றனர். அக்குறுந் தொகைப் பாடல் வருமாறு:

உடுத்துந் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே யிஃதோ
ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற் றென்னுமில் வூரே.

— குறுந்தொகை:295

மேலும், 'வெட்சி நிரைகவர்தல்; மீட்டல் கரந்தையாம்' என்னும் புறப்பொருள் உணர்த்தும் தொடரும் பசுக்களின் செல்வ நிலை பகரும். பகைவர் நாட்டுப் பசுக்களைப் பிறிதோர் நாட்டு அரசன் தன் நாட்டிற்கு ஓட்டிவந்துவிடுவது போரின் தொடக்க மாகக் கருதப்பட்டதோடு பகைவன் நாட்டுச் செல்வ வளமும் கொண்டுவந்து சேர்த்து விட்டதாகக் கருதப்படும். எனவே அச் செல்வத்தை மீண்டும் தம் நாட்டிற் கொண்டு வந்து சேர்த்தலே தமக்குப் பொருளும் புகழும் சேர்க்கும் செயல் என்று பகையரசரும்

கருதிக் கரந்தை சூடிப் பகைவர் கவர்ந்த பசுமந்தைகளைத் திரும்பப் பெறுதற்கு முனைந்தனர். 'மாடு' என்ற சொல் செல்வம் என்னும் பொருளைக் குறித்து நிற்றலையும் ஈண்டுக் கருத்தில் கொள்ள வேண்டும்.

"கொடுங்கோல் மன்னன் நாட்டில் பசுக்கள் பால் தாரா; வேதம் வல்ல அந்தணர்கள் வேத நூல்களைக் கற்றலையும் கற்றதுரைப்பதனையும் மறந்து விடுவர்; செங்கோல் வேந்தன் செம்மையான முறையில் ஆட்சி நடத்தவில்லை யென்றால்" என்பர் திருவள்ளுவர்.

> "ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
> காவலன் காவான் எனின்" (திருக்குறள்: 560)

இளங்கோவடிகளும் தம் காப்பியத்தில்,

> "ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்
> கோவலர் வாழ்க்கை யோர்கொடும்பா டில்லை"
> — சிலப்பதிகாரம்; அடைக்கலக்காதை: 120, 121

எனக் கவுந்தியடிகள் கூற்றால் ஆயர் தம் வாழ்வைச் சிறப்பித்துச் சொல்லியுள்ளார். ஆண்டாளே,

> குற்றம் ஒன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே
> நற்செல்வன் தங்காய் — திருப்பாவை: 11

என்று குறிப்பிடக் காணலாம்.

ஆய மகளிர் குரவைக் கூத்தாடி,

> மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
> கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றத்
> தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
> நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
> நாராய ணாவென்னா நாவென்ன நாவே
> — சிலப்பதிகாரம்; ஆய்ச்சியர் குரவை:
> படர்க்கைப் பரவல்: 3

என்று நாராயணனைப் பாடிப் பரவசமடைந்த நிலையினை இளங்கோவடிகளும் இனிமை ததும்பு எடுத்தோதுகின்றார்.

சேவகன் சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே

—ஷை: 1

கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே

—ஷை: 2

என்றும் அவர் மேலும் கூறுதல் காண்க.

மேலும் கண்ணன் அவதாரம் செய்தது ஆயர்பாடியிலே அன்றோ'. கண்ணன் 'ஆயர் தம் கொழுந்தல்லவா?' எனவே அவன் மகிழ்ந்திருப்பதால் அவனைச் சுற்றிலும் இசை எழும்பு கின்றது; ஆடல் நிகழ்கின்றது. ஏங்கும் செல்வவளம்; எங்கும் இன்ப வெள்ளம். இதனையே பெரியாழ்வாரும்

ஓடுவார்விழுவா ருகந்தா லிப்பார்
நாடு வார்நம்பி ரானெங்குற் றானென்பார்
பாடு வார்களும் பல்பறை கொட்டநின்று
ஆடு வார்களும் ஆயிற்றாய்ப் பாடியே.

—பெரியாழ்வார் திருமொழி 1:2:2

ஆயர்பாடியிலுள்ள கன்னியர் கண்ணனோடு களித்திருந்த செயல் முதியோர் சிலருக்குச் சீற்றத்தை வரவழைத்தது. 'இச் செயலால் குலம் பழிபூணும்' என்று அவர்கள் கொண்டனர். எனவே இரு திறத்தாரையும் பிரித்து வைத்தனர். கன்னியர் நிலவறையில் அடைபட்டனர்; கண்ணன் யசோதையின் கட்டுப் பாட்டில் அகப்பட்டான். கண்ணனைக் காணாத கன்னியர் கலங்கினர்; கையற்று நெஞ்சழிந்தனர். அம்மகளிர் வயிறெரிந்தால் அந்நாட்டில் மாரிவளம் குன்றாதா? 'குலப்பெண் வயிறெரிந்தால் கொடிச்சீலையும் பற்றியெரியும்' என்பது பழமொழி. எனவே மாரி குன்றியது; பயிர்கள் பாழாயின; பசுக்கள் உணவின்றி நைந்தன; பால் வளம் அற்றது. பஞ்சம் பரவியது. மானிடர் மனங் குன்றினர். நாட்டின் வாட்டத்திற்குக் காரணம் கன்னியர் உகுத்த கண்ணீரே என்பதனை அனுபவத்தில் உணர்ந்த முதியவரும் மனம் திருந்தி மங்கையர் நோன்பு நோற்று மழை பொழிவிக்க வெளியே விடப்பட்டனர். அவர்களுக்கு வேண்டியவற்றை உதவக்

கண்ணனையே ஏவல் கொண்டனர். 'பத்தி வலையிற் படுபவ னல்லவா பரம்பொருள்' கண்ணன் தங்கள் கட்டிலிருந்து என்றென்றும் செல்லாமல் தடுக்க நோன்பு நோற்கத் தலைப் பட்டனர். மழை பொழிந்து ஆயர் பாடியும் வளம் பெற்றது; ஆய மகளிரும் வாழ்வு பெற்றனர். தம்மாட்டு அன்பு செலுத்து வாரைக் கண்டு, அவரோடு கலந்து கலந்து, அவர்கள் அன்பைப் பெருக்குவித்து அவர்கள் ஊனையும் உயிரையும் உருக்கித் தம் வயப்படுத்துவதன்றோ இறைவனது செயல்?

எனவே உடலாற் செயல்புரிந்து கண்ணனோடு கூடி மகிழ்ந்த ஆயகன்னியரைக் காட்டிலும் ஆண்டாள் பல படிகள் உயர்ந்து நிற்கிறார். காரணம் இவர் மனத்தாலன்றோ அம்மாயக் கண்ணனை வலிந்து இழுத்து வெற்றி காண்கிறார்.

ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரை ஆயர்பாடியாகவும், தம்மை இடைப்பெண்ணாகவும், தம் தோழியரை ஆயமகளிராகவும், வட பெருங்கோயிலுடையான் (வடபத்திரசாயி) சந்நிதானத்தை நந்த கோபன் இல்லமாகவும், அங்கு வாழும் பெருமானைக் கண்ண னாகவும் பாவனை செய்து கொண்டார் எனலாம். இடைக்குலத்து மங்கையர் நோன்பு தொடங்கிய 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளே' பாவை பாடிய பாவையார் பாவனையில் இயற்றும் நன்னாளாக அமைகின்றது. எம்பெருமான் தன் திருக்கலியாண குணங்களாகிற திருக்குளத்தில் மூழ்கிப் பேறு பெற்றுய்தற்குத் தவம், யோகம், யாகம் யாதும் இயற்றத் தேவையில்லை. நெஞ்சிற் கொண்ட உறுதியே கண்ணனையடைய வேண்டும் என்ற ஆசைப் பெருக்கே போதுமானதாகும். இதனையே பெரியோர் சேதனரை உய்விக்கும் சிறந்த கருவி என்றனர். அதாவது உலகோரைக் கடைத்தேற்றும் உயர்ந்த கருவியாகும். வைணவக் கோட்பாட்டின் உயிர்நிலை என்று வழங்கப்படுவதும் இதுவேயாகும். சிறுமியர் விளையாட்டின் மூலமாகவே இறையருளைப் பெறுவான் வேண்டி இந்நூல் இயற்றப்பட்டதோ என்று எண்ணுவதற்கும் இடந் தருவதாய் இந்நூல் (திருப்பாவை) அமைந்துள்ளது

எனவேதான் ஆண்டாள் தாம் பாடிய திருப்பாவையில் ஆயர் மகளிரைத் தம் தோழியாகக் கொண்டார் என்பது இதுகாறும் காட்டிய ஏதுக்களான் தெளிவுறும்.

அடுத்து, கண்ணனைப் பற்றிய வீரமும் எழிலும் விளங்க வுரைக்கப் படுகின்றன.

1. கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்.
2. ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
3. கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான், நாராயணன்.

வீரம் உள்ள இடத்தில்தான் காதல் விளையும். கலித் தொகையில் கொல்லுகின்ற தன்மையுடைய எருதுகளை எவ னொருவன் கொம்புகளைப் பிடித்து அடக்கவில்லையோ அவனை இந்தப் பிறவியில் மட்டுமின்றி மறுபிறவியின் காலையிலும் ஆயர்மகள் அணைத்துக் கொள்ள மாட்டாள் என்ற கருத்துப் புலப்பட,

கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்

— கலித்தொகை; முல்லைக்கலி 3 : 63-64

எனும் பகுதி காணப்படுகின்றது. எனவே போர்க்களத்தில் அஞ்சாது எதிர் வந்த பகைவர்களை அதிராது முடித்து வெற்றி வாகை சூடிய வீரர்களையே மறக்குலத்து மகளிர் - ஆயர் குலத்து அணிநல்லார் - கணவனாக வரித்துக் கொள்ளுதல் வழக்கு.

ஈண்டு, ஆயர்குலப் பெண்கள் பாடிப் பரவி நிற்கும் கண்ணன், கூர்வேலினைக் கொண்டவனும், போர்க்களத்திலே கொடுந்தொழிலாம் கொன்று குவிப்பதிலே வல்லவனுமான நந்த கோபனுடைய குமாரனாவான்; அழகெல்லாம் ஒருசேரத் திரண்டு விளங்கும் அழகிய கண்களையுடைய யசோதைப் பிராட்டியின் இளஞ்சிங்கமாகத் திகழ்கிறான் கண்ணன்; கரிய உடம்பினையும், கமல மலர் போன்று சிவந்த கண்களையும், ஒளி வீச்சில் கதிரவ னையும், குளிர்ப் பொழிவில் சந்திரனையும் ஒத்த திருமுக மண்டலத்தையுடையவனாகவும் விளங்குகின்றான்; அவனே பக வானாகிய நாராயணனுமாவான்.

கண்ணன் கழலினை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே

— திருவாய்மொழி

என்ற நம்மாழ்வார் கருத்துப்படி, கண்ணன் கழலினை அடைய வேண்டும் என்று அவாவுறும் மனத்தவர் உறுதியாக நினைக்க வேண்டுவது நாராயணாவென்னும் நாமமாகும். இங்குக் கண்ணனைக் 'கதிர் மதியம் போல் முகத்தான்' என ஆண்டாள் கூறியிருக்கக் காரணம், உலக உயிர்களை உதய காலத்தில் உறக்கத்திலிருந்து எழுப்புவது சூரியனே யன்றோ! மேலும் 'கதிர் மதியம் போல் முகத்தான்' என்று அக்கண்ணன் கூறப்பட்டிருப்ப தற்குக் காரணம் மக்கள் மனத்தில் ஒரு கிளர்ச்சியும், குளிர்ச்சியும், இதமும் தந்து அவர்களை மகிழ்ச்சியில் திளைக்கச் செய்பவன் சந்திரனேயாவன். சம்சார சாகரம் எனும் வாழ்க்கைப் பெருங் கடலில் மயங்கி ஆழ்ந்து உறங்கிக் கிடக்கும் உலக உயிர்களைத் தட்டியெழுப்பி, மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்யும் திறலுடை யவன் கண்ணனாம் நாராயணனே என்று கூறுவதற்காகவே 'கார் மேனிச்செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்' என்று முரண் தொடை அமைந்த இத்தொடரினை ஆண்டாள் ஆண்டுள்ளார் என்று கொண்டால் அவர்தம் கவிப்புலமையும், சமய நோக்கும், சமத்காரப் போக்கும் தெற்றெனப் புலனாகும்.

**"நாராயணனே நமக்கே பறை தருவான்"**

பாவை நோன்பினை முறையாக மேற்கொண்டிருக்கும் நமக்கு நாராயணனே அனுக்கிரகம், அதாவது அருள் செய்வான். அவனே நமக்கு அருள்பாலிக்கும் தகுதி வாய்ந்தவன்.

**"பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய்"**

பாவை போன்ற பெண்களே! உலகோர் நம்மைப் புகழ்கின்ற அளவில் நாம் பாவை நோன்பை நோற்க (அனுஷ்டிக்க) வேண்டும்.

இவ்வாறு கூறித் தோழியரை எல்லாம் திருப்பாவைச் செல்வியார் மார்கழி நீராட்டத்திற்கு அழைத்துப் பாவை நோன்பு நோற்கச் சொல்கிறார்.

இப்பாசுரத்தில் ஓர் உள்ளுறைப் பொருளும் உண்டு என்பர். இப்பாடலை வேதாந்தமாக விரித்துரைக்கவும் இடமுண்டு. 'நீராடல்' என்ற சொல் 'கலவி' என்னும் பொருண்மைத்தாகும். அகப்பொருளில் 'சுனையாடல்' என்றும் வரும். எனவே இப்

பாசுரம், கண்ண பரமாத்மாவுடன் பரம பாகவதர்கள் விரும்பும் பேரின்பக் கலவியைக் குறிக்கின்றது என்பர். அப்பேரின்பப் பொருள் கிட்டுவதற்கு ஒரு சாதனம் பாவைநோன்பாகும். அப்பாவை நோன்பினை நோற்றால் உலகத்துயிர்கள் (ஆன்மாக்கள் பரமாத்மாவாக விளங்கும் ஆண்டவன் அடியினை உறுதியாக அடைய முடியும். இவ்வாறு பிறரை ஆற்றுப்படுத்தி (வழிப்படுத்தி) ஆண்டவனிடம் அழைத்துச் செல்கிறார் ஆண்டாள் எனலாம்.

இனி இப்பாட்டு செல்வப்பாட்டு (Richest poetry) என்று சொல்லத்தகும் கீர்த்தி வாய்ந்தது என்றும் இயம்பலாம். காரணம் இப்பாட்டில் சிறந்த சொற்கள் சிறந்த இடங்களில் சிறந்த வகையில் அடுக்கப் பெற்றுள்ளன என்று குறிப்பிடலாம் (Best words, in the best place, in the best order). சொல்லாட்சிச் சிறப்பும் (diction) இப்பாடலில் நிரம்பவுண்டு. சுருங்கச் சொல்லின் முன்னர்க் குறிப்பிட்டவாறு மாணுயர் தோற்றத்தை ஆடியில் அடக்கிக் காட்டும் திறல் வாய்ந்த பெற்றித்தாய பாட்டு இதுவெனலாம்.

காட்சி ஓவியம்

அடுத்து, இயற்கைப் பொருளை இயல்பாகக் கிளத்தி, அதன்வழி ஓர் உயர்பொருளை உணர்த்தி, ஓவியம் அன்ன காட்சியினை வடித்து, காவியம் போன்று நெஞ்சில் நிலைக்கச் செய்யும் திறன் ஆண்டாளுக்குக் கைவந்த கலை என்பது பின்வரும் பாட்டால் விளக்கமுறும்.

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந் தாம்பல்வாய் கூம்பினகாண்
செங்கற் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடேலோர் எம்பாவாய்.

— திருப்பாவை: 14

வைகறை நேரம்; வீட்டின் பின்புறத்தே தோட்டம்; அங்கே ஒரு குளம்; அக்குளத்தில் செங்கழுநீர்ப் பூக்கள் மலர்கின்றன; அதே நேரத்தில் ஆம்பற் பூக்கள் வாய் குவிகின்றன. செங்காவியுடையுடுத்திய வெண்பற்களையுடைய தவச் சிரேட்டர்கள் தங்கள் திருக்கோயிலுக்குச் சங்கு முழக்கம் செய்யப் போகின்றார்கள். எங்களை முன்னதாக எழுப்புவதாக வீண் பெருமை பேசும் பெண்ணே! வெட்கமில்லாதவளே! இனிக்க இனிக்கப் பேசும் நாக்கையுடையவளே! சங்கு, சக்கரம் ஆகிய இவற்றைத் தன் கைகளிலே ஏந்தி நிற்கும், நீண்ட கைகளையுடைய கமலக் கண்ணனைப் பாட வேண்டும், எனவே எழுந்திருப்பாயாக!

இப்பாடலில் இயற்கைப் பொருள்களை உடலாகவும், அவற்றின் அழகை உயிராகவும், அவற்றினுள் இருக்கும் இறைவனை உயிருக்கு உயிராகவும் காணலாம். ஆண்டாள் பாசுரங்களில் சொற்பொருளினும் குறிப்புப்பொருளே விஞ்சி நிற்கும் என்னும் பெரியோர் வாக்கு உண்மையாகும்.

இந்நூற்றாண்டில் வாழ்ந்த மகாகவி பாரதியாரும்,

> காக்கைச் சிறகினிலே நந்தலாலா! நின்றன்
> கரிய நிறந் தோன்றுதையே, நந்தலாலா!
> பார்க்கும் மரங்களெல்லாம் நந்தலாலா! - நின்றன்
> பச்சைநிறந் தோன்று தையே நந்தலாலா;
> கேட்கும் ஒலியிலெல்லாம் நந்த லாலா - நின்றன்
> கீத மிசைக்குதடா, நந்தலாலா!
> தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா - நின்னைத்
> தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா
>
> — நந்தலாலா பாட்டு

என்று கூறியிருக்கக் காணலாம்.

"நோக்குவ எல்லாம் அவையே போறல்" என்ற அகப்பொருள் வழக்குப்படி ஆண்டாளுக்குக் காணும் பொருளெல்லாம் கண்ணனாகவே தெரிகின்றன. மேலே கண்ட பாட்டின் 'செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பின காண்" என்ற தொடரில், 'நெகிழ்ந்து', 'கூம்பின' என்ற முரண்பட்ட சொற்கள் வந்து முரண்தொடை அமைந்துள்ளன. இதுபோன்றே,

'செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்' என்ற தொடரில் 'செங்கல்' என்றும், 'வெண்பல்' என்றும் முரண்பட்ட சொற்கள் இடம் பெற்று முரண்தொடை கொள்ளுகின்றன. இவ்வாறு ஆண்டாள் 'பாடல்களில் ஆங்காங்கு இயற்கை வருணனையும், சொல்லாட்சிச் சிறப்பும் துலங்குவதனைக் கண்டின்புறலாம். சில சொற்களில் ஒரு காட்சியையே நம்முன் படைத்துக் காட்டிப் பரவசப்படுத்திவிடும் திறம் வாய்ந்தவராகப் பாவை பாடிய பாவை விளங்குவதனைத் திருப்பாவைப் பாடல்கள் முழுவதிலும் காணலாம்.

## முன்னிலைப்படுத்தலும் இடித்துரைத்தலும்

பாவை நோன்பியற்றுங்கால் ஆண்டாளுக்கு ஆயர் உடையும் ஆயர் நடையும் ஆயர் பேச்சும் அமைகின்றன என்றும், ஆயர் மங்கையர்மேல் வீசும் பால் மணமும் இவர் மேல் வீசிற்று என்றும் பெரியார் கூறுவர். திருப்பாவை ஆயர்பாடிச் சிறுமியர்களின் மன இயல்பையும் பேச்சையும், சொல்லையும் போக்கையும் வடித்துக் காட்டும் நிழற்படமாகத் திகழ்கின்றது. இவர் அவ்வாயர்பாடி மகளிரை முன்னிலைப்படுத்திப் பேசுவதும், சிற்சில சமயங்களில் விளையாட்டும் வேடிக்கையும் கலந்த சொற்களால் இடித்துரைத்துப் பேசுவதும், இவர் இடத்துக்கேற்றவாறு சொற்களைக் கையாண்டு, ஏற்ற வினையை எழிலுற முடிக்கும் திறலினைப் புலப்படுத்தா நிற்கின்றன.

இனிச் சான்றுகளைக் காண்போம்.

முதலாவது, நெஞ்சை நெகிழ்வித்து முன்னிலைப்படுத்தி ஆயர் மகளிர் உள்ளத்தை ஈர்க்குமிடங்கள்:

| | | | |
|---|---|---|---|
| 1. | நேரிழையீர், சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் | – திருப்பாவை: | 1 |
| 2. | வையத்து வாழ்வீர்காள் | ” | 2 |
| 3. | பிள்ளாய் | ” | 6 |
| 4. | நாயகப் பெண் பிள்ளாய் | ” | 7 |
| | தேசமுடையாய் | ” | 7 |
| 5. | கோது கலமுடைய பாவாய் | ” | 8 |

7. நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற
அம்மனாய், அருங்கலமே — திருப்பாவை : 10

8. குற்றமொன் றில்லாத கோவலர்தம்
பொற்கொடியே „ 11
புற்றரவல்குல் புனமயிலே „ 11

9. நற்செல்வன் தங்காய் „ 12

10. போதருக் கண்ணினாய் „ 13

11. நங்காய்! எழுந்திராய் „ 14

12. எல்லே இளங்கிளியே „ 15

13. பந்தார் விரலி „ 18
செந்தாமரைக் கையால் சீரார்
வளை ஒலிப்ப வந்து திறவாய் „ 18

14. திங்கள் திருமுகத்துச் சேயிழையார் „ 30

இங்குக் காட்டப்பெற்ற சொற்றொடர்கள் விளிகளாயமைந் தமை காண்க. அவர் மனங்கொளக் குளிர்வித்து நிற்கும் திறல் இதனால் தெளிவாகின்றது. ஆண்டாள் "எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ?" என்றவுடன் அச்சொல்லில் வலைப் பட்ட ஆயர்பாடிப் பெண்ணொருத்தி, "சில்லென்றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன்" என்று குளிர்ந்து பேசும் காட்சி யினையும் ஒருவர் திருப்பாவையிற் கண்டின்புற முடியும்.

இனி, ஆண்டாள் ஆழ்ந்த உறக்கத்தே ஆழ்ந்து அனந்தலாடிக் கொண்டிருக்கும் ஆயர் மகளிரை இடித்துரைத்து எழுப்பும் கருணைத்திறனும் காண்போம்:

1. புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?
பிள்ளாய்! எழுந்திராய். — திருப்பாவை: 6

2. கீசு கீசென்றெங்கும் ஆனைச்சாத் தன்கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ?
பேய்ப்பெண்ணே „ 7

3. கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ? „ 7

4. மாமீர்! அவளை எழுப்பீரோ? உம்மகள் தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?

—திருப்பாவை : 9

5. நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்
மாற்றமும் தாராரோ? வாசல்திறவாதார்
நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்பால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொருநாள்
கூற்றத்தின் வாய் வீழ்ந்தகும்ப கருணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?
ஆற்ற அனந்தல் உடையாய்? —திருப்பாவை : 10

6. சிற்றாதே பேசாதே செல்வப் பெண்டாட்டிநீ
ஏற்றுக்கு உறங்கும் பொருள்? „ 11

7. சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்
இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்
அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்

12

8. குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ? பாவாய்! நீ நன்னாளால்
கள்ளந் தவிர்ந்து கலந்தேலோர் எம்பாவாய் „ 13

9. எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய்! நாணாதாய்!

நாவுடையாய்! „ 14

10. எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ?
சில்லென் றழையேன்மின் நங்கைமீர் போதர்கின்றேன்
வல்லை உன்கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே! நானேதான் ஆயிடுக „ 15

இதுகாறும் கூறியவற்றான் திருப்பாவைச் செல்வியின் சொல்லாட்சித் திறம் விளக்கமுறக் காணலாம்.

அவதாரச் செயல்களில் ஈடுபாடு

திருமால் பல அவதாரங்கள் எடுத்திருந்தாலும் ஆண்டாள் மனத்தில் அவர் கண்ணனாய்ப் பிறந்து ஆயர்பாடியில் வளர்ந்து கம்சனை வதைத்து அடியவர் திறத்து அருள் வழங்கிய திறமே முன் நிற்கிறது. அடுத்து, இராமாவதாரம் அவர் மனக்கண் முன் நிழலாடுகிறது. எவ்வகையில் ஆண்டவனின் அவதாரச் செயல்களை ஆண்டாள் விவரிக்கின்றார் என்று காண்போம்.

(அ) கிருஷ்ணாவதாரம்

1. கூரிய வேலையும் போர்க்களத்துக் கொடுஞ்செயலுங் கொண்ட நந்தகோபனின் குமரன்; அழகிய கண்களையுடைய யசோதைப் பிராட்டியின் இளஞ்சிங்கம் போன்ற மைந்தன்; செங்கணும் கரிய கோல மேனியுமாகத் திகழ்ந்து கதிரும் மதியமும் ஒருங்கிணைந்தது போன்ற முகத்தையுடையவன்.

> கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
> ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
> கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
>
> — திருப்பாவை : 1

2. மாயன்; நிலைபெற்ற வடமதுரையில் வாழ்கின்ற மைந்தன்; தூய்மையான பேரளவு கொண்ட நீர்ப்பெருக்குடைய யமுனை யாற்றுத் துறைவன்; ஆயர்குடியில் அவதரித்த அணி விளக்கு; தான் பிறந்ததால் தாயின் வயிற்றை ஒளிபெறச் செய்த தாமோதரன்.

> மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
> தூய பெருநீர் யமுனைத் துறைவனை
> ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை
> தாயைக் குடல்விளக்கஞ் செய்ததா மோதரனை
>
> — திருப்பாவை : 5

3. அகங்கார மமகாரம் என்ற பூதனைப் பேயின் உயிரைப் பருகியவன்; காமக்குரோதமென்ற சகடாசுரனைக் கட்டுக்குலையும்

வண்ணம் முறித்தவன்; பாற்கடலில் பாம்பணைமேல் பள்ளி கொண்டுள்ள பரந்தாமன்.

> ... ... ... ... ... பேய்முலை நஞ்சுண்டு
> கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
> வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
>
> — திருப்பாவை : 6

4. குதிரையாக வடிவெடுத்து வந்து குழந்தைக் கண்ணனைக் கொல்ல வந்த கேசி என்ற அசுரனின் வாயைப் பிளந்து அவனை மாளச் செய்தவன்; கம்சன் தன்னைக் கொல்ல அனுப்பிய மறஞ் சான்ற மல்லர்களைக் கொன்று குவித்தவன்.

> மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
> தேவாதி தேவனை — திருப்பாவை : 8

5. பலம் பொருந்திய யானையான குவலயாபீடத்தைக் கொன்றவன்; எதிரிகளைப் போராடி அழிக்க வல்லவன் மாயம் உடைய கண்ணன்.

> வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
> வல்லானை மாயனை — திருப்பாவை: 15

6. சகடாசுரனைக் கட்டுக்குலைய உதைத்தான்; கன்று வடிவில் வந்த வத்சாசுரனைத் தூக்கி விளாமரத்தின் வடிவில் வந்திருந்த கபித்தாசுரன் மீது வீசி, வஞ்சம் செய் மாமன் கம்சன் ஏவலால் தன்னைக் கொல்ல வந்திருந்த இருவரையும் ஒரே நேரத்தில் ஒருசேரக் கொன்றான். பெருமழையால் வாடலுற்ற உயிர்களைக் காப்பான் வேண்டிக் கோவர்த்தன மலையைக் குடை யாகப் பிடித்துக் கோகுலத்தைக் காப்பாற்றியவனும் கண்ணனே யாவன்.

> பொன்றச் சகடமுதைத்தாய் புகழ்போற்றி
> கன்று குணிலா வெறிந்தாய் கழல் போற்றி
> குன்று குடையா வெடுத்தாய் குணம் போற்றி
>
> — திருப்பாவை : 24

7. தேவகிக்கு மகனாகப் பிறந்து அதே இரவில் யசோதைக்கு மகனாக ஒளிந்து வளர்ந்து வரவும், இதனைக் கண்டு பொறுக்காத கஞ்சன் என்னும் வஞ்சன் வயிற்றில் நெருப்புப் போல நின்று எக்காலத்தும் அவனை அச்சுறுத்திய பெருமான் கண்ணன் ஆவான்.

> ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
> ஒருத்தி மகனா யொளித்து வளரத்
> தரிக்கிலா னாகித் தான்தீங்கு நினைந்த
> கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
> நெருப்பென்ன நின்ற நெடுமாலே
>
> —திருப்பாவை : 25

8. எதிரிகளை வென்றே நிற்கும் வழக்கம் உடைய கோவிந்தன். கூடாரை வெல்லுஞ்சீர் கோவிந்தா

—திருப்பாவை : 27

9. மாடுமேய்த்து அதனாற் கிடைக்கும் வருவாயைக் கொண்டுள்ள சாதியிற் பிறந்துள்ளவன் கண்ணன்.

> பெற்றம் மேய்த்துண்ணும் குலத்திற் பிறந்துநீ
>
> —திருப்பாவை : 29

(ஆ) இராமாவதாரம்

1. இராமபிரானால் இறந்துபட்டவன் கும்பகருணன் உன் உறக்கத்திற்குத் தோற்று, அவன் உறக்கத்தையும் உனக்குத் தந்துவிட்டானோ?

> ... ... ... புண்ணியனால் பண்டொரு நாள்
> கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கருணனும்
> தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ
>
> —திருப்பாவை : 10

2. பொங்கிவந்த கோபத்தினால் தென்னிலங்கைக்கு அதிபதியாகிய இராவணனைக் கொன்றொழித்தவன் மனத்துக்கு இனியவனான இராமபிரான் ஆவன்.

> சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
> மனத்துக் கினியானை
>
> —திருப்பாவை : 12

3. நாங்கள் தேடிவந்த இதே திருவடிகள் முன்பு சீதைப் பிராட்டியின் பொருட்டுத் தென்னிலங்கை சென்று இராவணனை அழித்து அந்நகரை நீறாக்கிற்று.

சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி
—திருப்பாவை : 24

(இ) பிற அவதாரங்கள்

1. பாற்கடலுள் பையத் துயின்ற பரமன் —திருப்பாவை : 2
2. ஓங்கி உலகளந்த உத்தமன் „ 3
3. அன்றிவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி „ 24

ஆயர் மகளிர் வாழ்வு

அடுத்தபடியாக ஆயர்தம் வாழ்க்கையையும் அவர் விரும்பி வளர்க்கும் பசுக்களின் வளத்தினையும் காண்போம்.

ஆயர்மகளிர் வாழும் ஆய்ப்பாடி செல்வ வளம் மிக்குத் திகழ்கிறது. அவர்கள் வளர்க்கும் பசுக்கள், அவைகளின் பருத்த மடிகளைப் பற்றி இடையர் இழுத்த அளவில் வேண்டுமட்டும் குடங்களை நிறைக்கும் விருப்பமாய்ப் பாலைச் சொரிகின்றன.

.................. சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளற்பெரும் பசுக்கள்
—திருப்பாவை : 3

வைகறைக் காலத்தே நறுமணங் கமழும் அழகிய கூந்தல்களையுடைய ஆய்ச்சியர் கழுத்தில் கோத்துக் கட்டிய தங்கக் காசுகளும் குண்டுகளும் (காசு என்ற அச்சுத்தாலியும், பிறப்பு என்ற ஆமைத் தாலியும்) கலகலவென்று ஒலி செய்ய, கை சலிக்க மத்தினால் ஓசை செய்து கடையும் தயிரின் ஓசை கேட்க நிற்கின்றனர்.

காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினால்
ஓசைப் படுத்த தயிரரவம் கேட்டிலையோ
—திருப்பாவை : 7

கிழக்குத் திசையில் வானம் வெளுத்தது. ஆகவே எருமைகள் மேய்ச்சலை முன்னிட்டுச் சிறிது நேரம் அவிழ்த்துவிடப் பட்டதால் எங்கும் பரவிச்சென்றன. மார்கழி நீராட்டத்தில் அக்கறையுள்ள மகளிரும் நீர்நிலைகள் நோக்கிச் செல்லத் தொடங்குகின்றனர்.

> கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு
> மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
> போவான் போகின்றார்.
>
> —திருப்பாவை : 8

இளம் கன்றுகளுடைய எருமைகள் கனைத்துக் கொண்டு, அம்மாவென்றலரும் கன்றுகள்பால் இரக்கப்பட்டு, தங்கள் தங்கள் கன்றுகளை நினைந்த அளவிலேயே முலைக்காம்புகள் வழியே பாலைச் சுரப்பதனால், அப்பால் நனைத்து அம்மண்வீடுகளைச் சேறாக அடித்து விடுகின்றன. அத்தகு நிரம்பிய செல்வத்தைக் கொண்டவர்களாக ஆயர்கள் திகழ்கின்றார்கள்.

> கனைத்திளங் கன்றெருமை கன்றுக்கிரங்கி
> நினைத்து முலைவழியே நின்றுபால்சோர
> நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்
>
> —திருப்பாவை : 12

இவ்விடத்தில் புறநானூற்றில் இடம் பெற்றிருக்கும் கபிலர் பாடல் கருதத்தக்கது.

பெருங்குடிமக்களாகத் திகழ்ந்த பாரியின் பறம்புமலை வாழுநர், மண்டையென்னும் பிச்சைப் பாத்திரம் ஏந்தி வந்து இரந்து கேட்ட இரவலர்க்கு அப்பாத்திரத்தில் கள்ளை ஊற்றுகின்றனர். அப்பாத்திரம் நிரம்பியது ஊற்றுபவனுக்கும் தெரியவில்லை; ஊற்றப்படுவோனுக்கும் தெரியவில்லை. எனவே பாத்திரத்தினின்றும் வழிந்து கீழே இவர்ந்தோடும் கள், தரையில் உள்ள கற்களை உருட்டிச் செல்கின்றனவாம். அந்த அளவிற்கு இருவர்பாலும் கட்குடிமயக்கம் இருந்ததாம். பொய்யா நாவிற் கபிலர், புலனழுக்கற்ற அந்தணாளர் கபிலர், ஒருவாத புகழுடைய திருவாதவூர் அந்தணர் கபிலர் பாடுகின்றார். பாடல் வருமாறு:

ஒருசா ரருவி யார்ப்ப வொருசார்
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க வுக்க தேக்கட் டேறல்
கல்லலைத் தொழுகு மன்னே பல்வேல்
அண்ணல் யானை வேந்தர்க்கு
இன்னா னாகிய இனியோன் குன்றே

—புறநானூறு : 115

கறக்கும் பாலை வாங்கும் பாத்திரங்கள் எதிர்த்துப் பொங்கி மேலே வழியத் தங்கு தடையில்லாமல் பாலைச் சொரியும் கொடைத் தன்மை மிகுந்த பசுக்களை மிகுதியாகப் பெற்றிருக்கிறார்கள் ஆயர்கள்.

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தாள்

—திருப்பாவை : 21

இயற்கைப் புனைவு

இனி, ஆண்டாள் இயற்கையைப் புனைந்து பாடியுள்ள திறம் காண்போம். சிறந்த கவிஞர்கள் ஓர் அடியிலே, ஏன் ஓர் அடைமொழியிலே கூடப் படிப்பவர்தம் மனத்தின் முன் காட்சித் திரைகளை விரிக்கும் ஆற்றல் பெற்றவராவர். ("In a single line, sometimes in a simple epithet, the poet can flash upon our imagination a picture that shall seem filled with passionate emotion". (C. T. Winchester, Some Principles of Literary Criticism; p. 135)

அம்முறையில் திருப்பாவைச் செல்வியாரும் எங்கும் இலங்கும் இயற்கையின் இனிய பெற்றியினைப் படிப்பவர் மனங்கொள வருணித்துரைக்கும் பாங்கு பாராட்டற்பாலது. ஒன்றிரண்டு எடுத்துக்காட்டுகள் காண்போம் :

1. மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாள்

—திருப்பாவை : 1

2. ஓங்குபெருஞ் செந்நெல் ஊடு கயலுகள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப

—திருப்பாவை : 3

ஓங்கி வளர்ந்த பெரிய செம்மையான நெற்பயிர்களின் இடையே வயல்களில் தேங்கி நிற்கும் தண்ணீரில் மீன்கள் துள்ளி விளையாட, வரப்புகளில் முளைத்திருக்கும் கருநெய்தற் பூக்களில் ஒளிபொருந்திய வண்டுகள் மயங்கிப் படுத்திருக்கின்றன.

வண்டுகள் பூக்களில் தேனை உண்டுவிட்டு அங்கேயே மதுவுண்ட மயக்கத்தில் மயங்கிப் படுத்துறங்குகின்றன என்ற குறிப்பு, அந்நாட்டின் செல்வ வளனைச் சுட்டியதாகக் கொள்ளலாம்.

கவிச்சக்கரவர்த்தி கம்பநாடரும் கோசல நாட்டின் வளனை வருணிக்கப் புகுங்கால் இத்தகு விரகினைப் பின்பற்றியிருத்தலைக் காண முடியும்.

நீரிடை உறங்கும் சங்கம்
நிழலிடை உறங்கும் மேதி
போரிடை உறங்கும் அன்னம்
பொழிலிடை உறங்கும் தோகை
தூரிடை உறங்கும் இப்பி
துறையிடை உறங்கும் ஆமை
தாரிடை உறங்கும் வண்டு
தாமரை உறங்கும் செய்யாள்

—கம்பராமாயணம்; பாலகாண்டம்;

வைகறைப் போதில் பறவைகள் ஒலியெழுப்பிப் பறக்கின்றன (புள்ளும் சிலம்பின காண் -6) அந்நாட்காலையில் ஆனைச் சாத்தன் பறவைகள் (பாரத்வாஜப் பறவைகள் என்பர் சிலர்) கீசுகீசு என்று ஒலியெழுப்பி நிற்கின்றன.

கீசுகீ சென்றெங்கும் ஆனைச் சாத்தன் கலந்து
பேசின பேச்சரவம் கேட்டி லையோ!

—திருப்பாவை: 7

கிழக்கு வெளுத்தது. வைகறைப்போதில் கட்டவிழ்த்துவிடப் பெற்ற எருமைகள் பனிப்புல் மேய்வதன் பொருட்டு மேய்ச்சல் தரையை நாடிக் காட்டு வெளியில் பல திசைகளிலும் பரவிச் செல்கின்றன.

கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு
மேய்வான் பரந்தன காண் —திருப்பாவை: 8

தோட்டத்துக் குளத்தில் வைகறை நேரத்தில் மலரும் செங் கழுநீர்ப் பூக்கள் மலர்ந்து மணம் வீசி நிற்கின்றன. இரவில் மலர்ந்து வைகறையில் வாடிக் குவியும் அல்லி மலர்கள் இதழ் கூம்பி வாய் மூடின.

உங்கள் புழக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பின காண்
—திருப்பாவை : 14

கோழிகள் வைகறையில் எழுந்து சுற்றிலும் குரல் எழுப்பு கின்றன. குருக்கத்திக் கொடி படரும் பந்தல்மேல் குயில்கள் பல முறை கூவி விட்டன.

வந்தெங்கும் கோழி யழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
—திருப்பாவை:18

## வீரமும் காதலும்

ஆண்டாள் கண்ணனை வீரமும் காதலும் இணைந்த நிலையிற் காண்கிறார். ஒன்றிற்கொன்று பிறப்பிடங்களன்றோ!

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பந் தவிர்க்கும் கலியே —திருப்பாவை: 20

என்றும்,

செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்
—திருப்பாவை: 11

என்றும் வீரம் விளம்பப்படுதல் போன்று,

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டிலின்மேல்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா —திருப்பாவை: 19

என்று அவன்தன் காதலும் கவினுறக் காட்டப்படுகின்றது.

## நப்பின்னை

கண்ணனின் கண்கவர் வனப்பினைக் கொள்ளை கொண்டவனாய், அவனைத் தன்னிடத்திலேயே நிலையாகத் தங்கவைத்து நித்திய சுகம் அனுபவிப்பவளாய் ஆண்டாளால் அழகுற வருணிக்கப் பெறுபவள் நப்பின்னையே ஆவள். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளும்,

தொழுநை யாற்றினுள் தூமணி வண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென

– சிலப்பதிகாரம்

நப்பின்னைப் பிராட்டியின் நலத்தினைப் புனைந்துரைக்கக் காணலாம்.

திருப்பாவையில் நப்பின்னை பற்றி இடம் பெற்றிருக்கும் செய்திகள் வருமாறு:

மதநீரைப் பெருகவிடும் யானை நிகர்த்த பலமுடையவனும், போரிற் புறமுதுகிடாத தோள்வலி கொண்டவனுமான நந்த கோபாலனின் மருமகளான நப்பின்னைப் பிராட்டி நறுமணம் கமழும் கூந்தலையுடையவளாவள். அவள் சிவந்த கைகளில் அழகு மிகுந்த வளைகள் எப்பொழுதும் ஒலிசெய்தவாறு இருக்கின்றன.

உந்துமதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்
கந்தங்கமழுங் குழலீ.........
செந்தாமரைக் கையால் சீரார்வளை யொலிப்ப

– திருப்பாவை : 18

பள்ளியறையைச் சுற்றிலும் நிலைவிளக்குகள் ஒளியினைக் கால, யானையின் தந்தத்தால் கடையப் பெற்ற கால்களையுடைய கட்டிலின்மேல் மென்மையாயிருக்கும் பஞ்சணைமீது ஏறிக் கொத்துக் கொத்தாக மலர்ந்திருக்கும் பூக்களைச் சூட்டியுள்ள கூந்தலையுடைய நப்பின்னைப் பிராட்டியின் மார்பகத்தின் மேலே தலையைவைத்துத் துயில்கொண்ட அகன்ற மார்பினையுடையவன் கண்ணனாவன். மை தீட்டிய கண்களையுடைய நப்பின்னை தன் கணவனாகிய கண்ணனை நாழிகை எத்தனை

ஆனாலும் கண்விழிக்க விடமாட்டேன் என்கிறாள். ஏனெனில் கண்ணனின் பிரிவைக் கணநேரமும் தாங்க மாட்டாதவள் அவள். ஆனால் அது நியாயமும் ஆகாது; குணமாகவும் கொள்ளப்பட மாட்டாது என்று ஆயர்மகளிர் நப்பின்னையைப் பார்த்து உரைக்கின்றனர். இக்கருத்தடங்கிய திருப்பாவைப் பாட்டு அமைதியில் ஒளிரும் ஓர் அழகுக் காட்சியினைப் புலப்படுத்தி நிற்கக் காணலாம்.

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டிலின் மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினாய்! நீயும்உன் மணாளனை
எத்தனை போதும் துயில்எழ ஒட்டாய்காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவம் அன்று தகவேலோர் எம்பாவாய்.

(திருப்பாவை: 19)

செப்பு போன்ற மார்பகங்களையும் சிறுத்த இடையினையும் உடைய நப்பின்னையே! அழகியவளே! நீ உறக்கத்திலிருந்து எழுந்திரு! விசிறியையும் கண்ணாடியையும் கொண்டு உன் கணவனை எழுப்பி, எங்களை அவன் அன்புக் கடலில், அழகுக் கடலில், அருட்கடலில் திளைக்கச் செய் என்று ஆயமகளிர் அன்பாக வேண்டுகின்றவர்.

செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்
உக்கமும் தட்டொளியும் தந்துன்மணாளனை
இப்போதே யெம்மை நீராட்டேலோ ரெம்பாவாய்.

(திருப்பாவை: 20)

உள்ளக்கிழியில் உருவெழுதல்

'தொழும்பர் உளக்கோயிற்கேற்றும் விளக்கு' எனக் குமர குருபரர் இறைவனை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலே பாடி மகிழ்ந்தார். மழைபொழியும் மாட்சியாகிய ஒரு காட்சியினைத்

திருப்பாவைச் செல்வியார் நம் கண் முன் நிறுத்திக் காட்டும் அழகுதான் என்னே!

கடலுக்குள் புகுந்து நீரை மொண்டு கொண்டு, இடி இடித்து, ஆகாயத்தில் ஏறியும் அவனியிலுள்ள அனைத்துயிர்க் குலத்திற்கும் ஆதிமூலமான நாராயணனுடைய உருவத்தைப் போல உடல் கறுத்தும், விசாலமான அழகிய திருத்தோள்களையுடைய நாபிக் கமலத்தையுடைய பெருமாள் கையில் ஒளியுடன் திகழும் சக்கிராயுதம்போல் ஒளியுமிழ்ந்து மின்னியும், அவனது இடக்கையிலுள்ள வலம்புரிச் சங்கைப்போல நின்று உலகு கிடுகிடுக்கும்படி ஒலித்தும், காலக் கழிவு செய்யாமல் ஆண்டவனுடைய வில்லாகிய சாரங்கம் வேகத்துடன் விரைந்து வீசிய அம்புகளின் மழையைப் போலவே நீயும் உலக உயிர்கள் அனைத்தும் உய்ந்து வாழும் பொருட்டு மழையாகப் பொழிய வேண்டும். நாங்களும் மகிழ்ச்சியுடன் மார்கழி நீராடுகிறோம். மழைக்கு அதிபதியான வருணனே நீ உன் கொடைக் குணத்தினின்று ஒரு சிறிதும் கோடாமல் மழை பொழிவாயாக.

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொ டார்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து
பாழிஅந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழிநீ ராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்

(திருப்பாவை : 4)

மற்றுமொரு காட்சி:

தாமரை மலரைப் போன்ற செவ்விய கண்கள் எளிதாகச் சந்திரனும் சூரியனும் எழுந்திருப்பது திரும்பமாட்டாவோ போல அழகிய கண்கள் இரண்டினாலும் எங்கள் மேற் பார்வையை ஓடவிட்டால், எங்களுக்குள்ள வருத்தம் மறைந்தொழியும் என்று ஆயர்மகளிர் கண்ணனிடத்தில் கழறுகின்றனர்.

கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போல
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ
திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல்
அங்க ணிரண்டும்கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல்
எங்கள்மேற் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய்

– திருப்பாவை : 22

பிறிதொரு காட்சி வருமாறு:

மழைக்காலத்தில் மலைக் குகையில் படுத்துக் கிடந்து தூங்கிக் கிடக்கும் வீரஞ்செறிந்த சிங்கம் எழுந்து, தன் நெருப்புப் போன்ற சிவந்த கண்களைத் திறந்து, பிடரிமயிர் சிலிர்த்து உடம்பை நான்கு பக்கலிலும் முறித்து, உதறிக் கொண்டு கம்பீரமாக நிமிர்ந்து கர்ஜனை செய்து கிளம்பி வெளியில் வருவது போல, காயாம்பூப் போன்ற நீல நிறமுடையவனான நீயும் உன் கோயிலி லிருந்து புறப்பட்டு வந்து சிறந்த வேலைப்பாடுகள் பொருந்திய அரியணையில் அமர்ந்து நாங்கள் உன்னை நாடிவந்த காரணம் என்ன என்று உசாவி அருள வேண்டும் என்கின்றனர் ஆயப்பாடி மகளிர்.

மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா! உன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய்

– திருப்பாவை : 23

## ஒரு நாடகக் காட்சி

காட்சிகளை வருணிப்பதிலும், உரையாடல்களை வளர்த்திச் செல்வதிலும் ஆண்டாள் ஒரு நாடகக் காட்சியை நம் மனக்கண் முன் கொண்டு வருகின்றார் எனலாம்.

வைகறையில் கண்விழித்தெழுந்த மகளிர் கூட்டமாகச் சேர்ந்து சென்று சற்றுப் பிடிவாத குணமுள்ள ஒரு பெண்ணை எழுப்ப

முயலுகிறார்கள். வீட்டினுள்ளே எழுப்பப்படவேண்டிய பெண்ணும், வீட்டிற்கு வெளியே அவளை எழுப்புகின்ற பெண்களுமென நிற்கிறார்கள். உரையாடல் தொடங்குகின்றது.

வீட்டிற்கு வெளியிலிருப்போர்: இளமை பொருந்திய கிளிக்கு நிகரான பெண்ணே! இன்னுமா தூங்குகிறாய்? இஃது எங்கட்கு வியப்பை விளைவிக்கிறது.

வீட்டிற்கு உள்ளிருப்பவள்: அடி பெண்களே! மனம் சில்லென்று உறையும்படி என்னை அழைக்க வேண்டாம். இதோ நான் எழுந்து வந்து விடுகின்றேன்.

வீட்டிற்கு வெளியிலிருப்போர்: உன் கட்டுக்கதைகளை நாங்கள் அறிவோம். உன் வாய் வீச்சும் எங்களுக்குத் தெரியும். எனவே எழுந்து வா, விரைந்து புறப்படு.

வீட்டினுள்ளே இருப்பவள்: நீங்கள் பேச்சில் வல்லவர்களாகவே இருந்து விட்டுப் போங்கள், கவலையில்லை, நான் பேச்சில் சோடை போனவளாகவே இருந்துவிட்டுப் போகிறேன்.

வீட்டின் வெளியிலிருப்போர்: சரி, சரி! விரைவில் வா; மாயவனைப் பாடுதற்கு எல்லோரும் வந்துவிட்டோம். வேண்டுமானால் வெளியில் வந்து எங்களை எண்ணிப் பார்த்துக் கொள். அவனைப் பாடிப் பறைகொள்வதைவிட வேறென்ன பயனுடைய காரியம் இருக்கிறது உனக்கு?

இனிப் பாடலை நோக்குவோம்:

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ!<br>
சில்லென் றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன்<br>
வல்லைஉன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்<br>
வல்லீர்கள் நீங்களே நானே தான் ஆயிடுக<br>
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை<br>
எல்லாரும் போந்தாரோ? போந்தார் போந்தெண்ணிக்கொள்<br>
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க<br>
வல்லானை மாயனைப் பாடேலோர் எம்பாவாய்

— திருப்பாவை : 15

இனி இறுதியாகத் திருப்பாவை நோன்பு குறித்தும், அது நோற்கப்பட வேண்டிய முறை குறித்தும், எம்பெருமான் அருள வேண்டிய திறம் குறித்தும், அருள்பெற்றபின் ஆடிப்பாடி மகிழ்ந்து கூடியுண்ணும் ஆனந்தக் காட்சி குறித்தும் திருப்பாவை தெரிவிப்பனவற்றை ஒரு சேரத் தொகுத்துக் காண்போம்.

நோன்பு நோற்கும் முறை

"எல்லையில்லாப் பேரருள் நாம் எட்டிப் பிடிக்கும் அளவுக்குத் தன்னைத் தாழ்த்திக் கொண்டு இங்கே கண்ணனாக வந்தது. கோபியரின் பாக்யமே பாக்யம். பரமபதத்திலும் பெறமுடியாத இறைவன் கருணையை இங்கே இவர்கள் பெற்றார்கள். இதுவல்லவோ பெருவாழ்வு! ஆகவே, இவர்களே வையத்து வாழ்பவர்கள்" என்பர் பேராசிரியர் அ. சீநிவாச இராகவன் அவர்கள். (திருப்பாவை விளக்க உரை : ப. 3)

நோன்பை மேற்கொள்ளுவோர் இறைவனுக்கு இன்ப மூட்டுவனவற்றையே இயற்றுதல் வேண்டும். தமக்கு இன்பமளிக்கும் நெய், பால் முதலியவற்றை உண்ணாமல், வைகறையில் எழுந்து நீராடிக் கண்களுக்கு மையிட்டுக் கொள்ளாமலும், கூந்தலுக்கு மலர் சூடிக் கொள்ளாமலும், செய்யத் தகாதனவற்றைச் செய்யாமலும், குறளை மொழி - அதாவது புறம் பேசாமலும் இருந்து, பிச்சையும் ஏழ்மையை எண்ணிக் கொடுக்கும் பொருளையும் முடிந்த வரையில் பிறருக்கு வழங்கி, உய்யும் வழியை மனத்தில் சிந்தித்து, மேற்படிக் கொடையால் விளைந்த மகிழ்ச்சியுடன் பாவை நோன்பில் ஈடுபட வேண்டும் என்று பாவை பாடிய பாவையார் பகர்கிறார்.

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ; பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி
நெய்உண்ணோம் பால்உண்ணோம் நாட்காலை நீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்
செய்யா தனசெய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோர் எம்பாவாய்

— திருப்பாவை : 2

இந்நோன்புக் காலத்தில் திருமாலே, நீலவண்ணனே, பெரியோர்கள் மேற்கொண்டு வந்த மார்கழி நீராட்டத்தை மேற் கொள்ளுதற்கு வேண்டும் பொருட்களைக் கேட்பாயாகில் பூவுலக மெல்லாம் நடுங்க, ஒலிக்கும் பால் போன்ற வெண்ணிறமுடைய உன் பாஞ்சசன்னியம் என்கிற சங்கைப்போல் இருக்கும் சங்குகளும், சிறப்பு வாய்ந்த மிகப் பெரிய தோற்கருவிகளும், பல்லாண்டு பாடுவோரும், அழகிய விளக்குகளும் கொடிகளும் அவற்றிற்கு மேல் கட்ட வேண்டிய சீலைகளும் வேண்டும். ஆலிலைமேல் கண் வளர்பவளே! இவையனைத்தையும் எங்களுக்குத் தருவாயாக.

மாலே! மணிவண்ணா! மார்கழி நீர்ஆடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பால்அன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலின் இலையாய்! அருளேலோர் எம்பாவாய்

—திருப்பாவை : 26

நோன்பு முடிந்ததும் மகளிர் புனைந்து மகிழும் கோலம் "கூடாரை வெல்லுஞ் சீர்க் கோவிந்தா" எனத் தொடங்கும் திருப்பாவைப் பாடலிற் சொல்லப்பட்டுள்ளது.

எதிரிகளை வெற்றி கொள்ளும் வழக்கமுள்ள கோவிந்தா, உன்னைப் பாடிப் பயனடைந்து அதன் விளைவாக நாங்கள் பெறும் பரிசு யாதெனில், நாட்டிலுள்ளவர் புகழ்வதற்கு அருகதையாகவுள்ள கைவளை, வங்கி, கம்மல், மாட்டல், காலணி என்று இப்படி வகை வகையான பலவகை அணிகலன்களையும் நாங்கள் அணிந்து கொள்வோம். நல்ல பட்டாடைகளை உடுப்போம். அதற்குப் பிறகு நிறைய ஊற்றப்பட்டிருப்பதால் முழங்கை வரை வழிந்தோடும் நெய்யுடைய பாற்சோறும் அகார அடிசிலை எல்லோருமாகக் கூடியிருந்து உண்டு, உள்ளம் குளிர இருப்போம்.

கூடாரை வெல்லும்சீர் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறும் சன்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாம்அணிவோம்
ஆடை உடுப்போம் அதன்பின்னே பால்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்

— திருப்பாவை : 27

ஆயர் மகளிர்க்கு இப்பயன் விளைவதோடு, அவர்கள் மேற்கொண்ட நோன்பால் மழைபெய்து நாடு செழித்துப் பசுக்கள் பல்கிப் பால்வளம் தருகின்றனவாம் என்க. அப்பாடல் வருமாறு:

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீர் ஆடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந்நெல் ஊடு கயலுகள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய்

— திருப்பாவை : 3

ஆயமகளிர் பாவை நோன்பு நோற்பதனால் ஒப்பற்ற உயர் தலைவனாம் எம்பெருமானையே எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் கணவனாக அடைவர் என்பதாம்.

மிகவும் விடியற்காலையில் வந்து உன்னைப் பணிந்து தொழுது, பொன்னாற் செய்யப்பட்ட தாமரை மலருக்கிணையான உன் திருவடிகளைத் துதிக்கும் காரணத்தைக் கோவிந்தனே நீ கேட்டுக்கொள்! மாடு மேய்த்து வாழும் சாதியிற் பிறந்துள்ள நீ, எங்களை உன் கைங்கரியத்துக்கு ஏற்றுக் கொள்ளாமல் போகக் கூடாது. பசுக்களைக் காப்பவனே! இன்றைக்கு மட்டும் உன் அருளைப் பெற்று நாளைக்கு விலகி விடும் நோக்கில் நாங்கள் எங்கள் கோரிக்கையை உன்முன் வைக்கவில்லை. என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்னோடு ஒன்றுசேர்ந்தவர்களாகவே யிருப்போம். உனக்கு மட்டுமே அடிமைகளாக அமைந்து பணி

செய்வோம். நீ எங்களுடைய மற்ற ஆசைகளை அகற்றிவிட வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துஉன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம் உமக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்

—திருப்பாவை : 29

இத்திருப்பாவை இறுதியிற் குறித்த பயனையே, மணிவாசகப் பெருந்தகையார் பாடிய திருவெம்பாவையிற் காணலாகும் கீழ்க் காணும் இரு பாடல்களும் குறிப்பிடக் காணலாம்:

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே!
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம்; ஆங்கவர்க்கே பாங்காவோம்;
அன்னவரே எங்கணவ ராவார்; அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்;
இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல்,
என்ன குறைவுமிலோ மேலோர் எம்பாவாய்

—திருவெம்பாவை : 9

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்று
அங்கப் பழஞ்சொல் புதுக்குமெம் அச்சத்தால்,
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போம்கேள்;
எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க;
எங்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க;
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க;
இங்கிப் பரிசே எமக்கு எங்கோன் நல்குதியேல்,
எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய்

—திருவெம்பாவை : 19

இறைவனைத் தூயோமாய் அமைந்து அவன் மலரடிகளில் மலர்களை இட்டு அருச்சித்துத் தொழுது, வாயினால் அவன் புகழ் பாடி, மனத்தினால் அவன் அளக்கலாகா அருட்டிறத்தினைச்

சிந்தித்தால் செய்த பிழைகளும் அறியாமையால் இனிச்செய்ய விருக்கும் பிழைகளும் நெருப்பினுள் தூசு எரிந்து மடிவது போல மாய்ந்தழியும் என்று ஆண்டாள் செப்புகின்றார்.

தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோர் எம்பாவாய்

—திருப்பாவை : 5

மேலும் ஆண்டாள் "குலத்தைத் தள்ளி ஞானத்தையே கொள்ளுதல், உயிரை உரமுறச் செய்ய இயற்றும் நோன்பில் களையறுத்தல், காதல் மனத்திற்குக் கால்கோள் செய்தல், இறைவனை இயற்கை அர்ச்சைகளின் வாயிலாக வழிபட்டுப் பிறவிப் பயனை எய்துதல் ஆகிய இவற்றுள் தோய்ந்த சீர் திருத்தத்தைத் தெளித்துத் தெளித்துக் காட்டுவதாகப்" பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மையார் பகர்வர் (பெரியாழ்வார் பெண்கொடி: ப. 174).

இவ்வாறாகப் பாவை பாடிய பாவையராகத் திகழும் ஆண்டாள் தாம் இயற்றிய திருப்பாவை முப்பதுபாடல்களையும் சங்கத் தமிழ் மாலை என்று சாற்றுகின்றார். இம்முப்பது பாடல்களையும் நாள்தோறும் தவறாமற் பாடும் திறம் பெற்றவர்கள் "ஈரிரண்டு மால் வரைத்தோள், செங்கண் திருமுகத்துச்செல்வத் திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்" என்று உறுதியாகப் பறை சாற்றுகின்றார், 'பட்டர்பிரான் கோதை சொன்ன சங்கத் தமிழ்மாலை' என்ற தொடரும், 'திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே' என்ற தொடரும் உன்னி மகிழத் தக்கனவாம்.

எங்கும் பரந்திலங்கும் எம்பெருமானின் எளிய இனிய பெற்றியினை அழகும் அருமைப்பாடும், உறுதியும் உயர்வுங் கூட்டும் ஒப்பற்ற தமிழால் திருப்பாவை என்னும் திவ்விய நூலாற் காட்டிய திருவாடிப்பூரத் துதித்த ஆண்டாளின் தமிழ், அகிலம் உள்ள வரை நின்று நிலைபெறும் பெற்றித்தாகும்.

பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும் - கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பது வம்பு.

( 3 )

# கோதில் தமிழ் உரைத்த கோதை

"மொழி என்பது எண்ணங்களை ஏற்றிச் செல்லும் வண்டி" (Language is a vehicle of thought) என்பர் வெண்டிரி என்னும் மொழி நூலறிஞர். இது குறித்தே "மொழியின் வாயிலாக வாழ்க்கையை வடித்துக் காட்டுவதே இலக்கியம்" (Literature is thus fundamentally an expression of life through the medium of language) என்று வில்லியன் ஹென்றி ஹட்ஸன் என்னும் மேற்புல அறிஞரும் சுட்டுவாராயினர். இவ்வாறு மேனாட்டறிஞர்கள் மொழியையும் இலக்கியத்தையும் எடுத்துக் கொண்டாலுங் கூடத் தமிழர்க்கு, மொழியெனப்படுவது கருவியாக மட்டும் இல்லாமல் உயிராகவும் உயிர்க்குயிராகவும் துலங்கக் காணலாம்.

> தமிழுக்கும் அமுதென்று பேர் - அந்தத்
> தமிழ் எங்கள் உயிருக்கு நேர் [1]

என்று புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் அவர்களும் பகர்ந்திடக் காண்கிறோம். இக்காலத்திற்குச் சற்று முற்காலத்தே வாழ்ந்த தமிழ்விடுதூது ஆசிரியர் அவர்களும்,

> இருந்தமிழே உன்னால் இருந்தேன் - இமையோர்
> விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன் [2]

என்று இயம்பியிருக்கக் காணலாம். பதினேழாம் நூற்றாண்டின் பெரும்புலவராய்த் திகழ்ந்த குமரகுருபரர் தமிழை இறைவனோடு இணைத்துப் பேசியிருப்பதைக் காணலாம்.

"பழமறைகள் முறையிடப் பைந்தமிழின் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலே" என்று அவர் திருமாலின் ஆறாத தமிழ்க் காதலை அளவிட்டுக் காட்டினார். இடைக் காலத்தே வாழ்ந்த குன்றை முனிவரரும், தெய்வப்புலமை மிக்கவரும், பக்திச் சுவை

நனிசொட்டச் சொட்டப் பாடிய கவிவலவருமான சேக்கிழார் பெருமான்,

ஞான மளந்த மேன்மை தெய்வத் தமிழ்

என்று தமிழைத் 'தெய்வத் தமிழ்' என்று தெளிவுபடக் குறிப்பிட்டார். கவிச் சக்கரவர்த்தி கம்பநாடரும் அகத்திய முனிவரைக் குறிப்பிடும்பொழுது,

தமிழெனும் அளப்பரும் சலதி தந்தவன்

என்றும்,

என்றுமுள தென்றமிழை இயம்பி இசை கொண்டான்[3]

என்றும் தமிழிற்குத் தனிப்பெருமை சாற்றிக் குறிப்பிட்டிருக்கக் காணலாம். கோதில் தமிழுரைத்த கோதையாம் ஆண்டாளும் தாம் பாடியருளிய திருப்பாவையின் இறுதிப் பாடலில் தாம் பாடிய பாசுரங்கள் அனைத்தையும் "சங்கத் தமிழ்மாலை" என்னும் பெயரிட்டு அழைக்கிறார். மேலும் அவர் திருப்பாவையின் முப்பது பாடல்களையும் தப்பாமற் சாற்றுவோர் திருமாலின் அருளுக்கு இலக்காகி எங்கும் எப்போதும் அவர்தம் திருவருள் பெற்றுத் திகழ்வர் என்றும் எடுத்துரைக்கின்றார்.

இதுபோன்றே தாம் பாடிய நாச்சியார் திருமொழியின் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் தமிழைச் சிறப்பித்தும், அத் தமிழை உகக்கும் திருமாலைச் சிறப்பித்தும் அவர் பாடியிருக்கக் காணலாம். அவை வருமாறு :

பொருப்பன்ன மாடம்பொ லிந்து தோன்றும்
புதுவையர் கோன்விட்டு சித்தன்கோதை
விருப்புடை யின்தமிழ் மாலைவல்லார்
விண்ணவர் கோனடி நண்ணுவாரே[4]

வேதவாய்த்தொழி லார்கள் வாழ் வில்லி
புத்தூர்மன் விட்டு சித்தன்றன்
கோதைவாய்த்தமிழ் வல்லவர்குறை
வின்றிவைகுந்தம் சேர்வரே[5]

பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த
புதுவையர் கோன்பட்டன் கோதை
இன்னிசை யால்சொன்ன மாலை
ஈரைந்தும் வல்லவர் தாம்போய்
மன்னிய மாதவ னோடு
வைகுந்தம் புக்கிருப் பாரே [6]

ஊடல் கூட லுணர்தல் புணர்தலை
நீடு நின்ற நிறைபுக ழாய்ச்சியர்
கூட லைக்குழற் கோதைமுன் கூறிய
பாடல் பத்தும் வல்லார்க்கில்லை பாவமே [7]

பண்ணுறு நான்மறை யோர்புது வைமன்னன்
பட்டர்பி ரான்கோதை சொன்ன
நண்ணுறு வாசக மாலைவல் லார்நமோ
நாராய ணாயவென் பாரே [8]

ஆயனுக் காகத்தான் கண்டக னாவினை
வேயர்பு கழ்வில்லி புத்தூர்க்கோன் கோதைசொல்
தூயத மிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்
வாயுநன் மக்களைப் பெற்றும கிழ்வரே [9]

பாஞ்ச சன்னியத்தைப் பற்பநா பனோடும்
வாய்ந்த பெருஞ்சுற்ற மாக்கிய வன்புதுவை
ஏய்ந்தபுகழ்ப் பட்டர்பிரான் கோதைதமி ழீரைந்தும்
ஆய்ந்தேத்த வல்லாரார் அவரும ணுக்கரே [10]

போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதை தமிழ்
ஆகத்து வைத்துரைப்பார் அவரடியார் ஆகுவரே [11]

சந்தொடு காரகிலும் சுமந்துதடங் கள்பொருது
வந்திழி யும்சிலம்பா றுடைமாலிருஞ் சோலைநின்ற
சுந்தரனைச் சுரும்பார் குழல்கோதை தொகுத்துரைத்த
செந்தமிழ் பத்தும் வல்லார் திருமாலடி சேர்வர்களே [12]

வில்லி புதுவை விட்டுசித் தர்தங்கள் தேவரை
வல்ல பரிசு வருவிப்ப ரேலது காண்டுமே [13]

பொன்னியல் மாடம்பொ லிந்துதோன்றும்
புதுவையர் கோன்விட்டு சித்தன் கோதை
இன்னிசை யால்சொன்ன செஞ்சொல்மாலை
ஏத்தவல் லார்க்கிடம் வைகுந்தமே [14]

அல்லல் விளைத்த பெருமானை
ஆயர் பாடிக் கணிவிளக்கை
வில்லி புதுவைநகர் நம்பி
விட்டுசித்தன் வியன்கோதை
வில்லைத் தொலைத்த புருவத்தாள்
வேட்கை யுற்று மிகவிரும்பும்
சொல்லைத் துதிக்க வல்லார்கள்
துன்பக் கடலுள் துவளாரே [15]

பருந்தாட் களிற்றுக் கருள்செய்த
பரமன் றன்னைப் பாரின்மேல்
விருந்தா வனத்தே கண்டமை
விட்டுசித்தன் கோதைசொல்
மருந்தாமென்று தன்மனத்தே
வைத்துக்கொண்டு வாழ்வார்கள்
பெருந்தாளுடைய பிரானடிக்கீழ்ப்
பிரியா தென்று மிருப்பாரே. [16]

இதுகாறும் தொடுத்து எடுத்துக்காட்டப் பெற்ற கோதையார் தம் கோதில் தமிழுரைகள் தமிழின் ஏற்றத்தையும், தெய்வத்தோடு அத்தமிழ் இரண்டறக் கலந்து நிற்றலையும் எழிலுற எடுத்துரைக்கும்.

சைவர் கோயில் உற்சவங்களில் சிவபெருமான் முன்னே செல்லத் தேவார இசை பாடுவோர் பின்னே கைத்தாளமிட்டுப் பாட்டுப்பாடி வருவர். வைணவர் கோயில் உற்சவங்களில் வேத பாராயணக் குழுவினர் முன்னே செல்லப் பெருமாள் பின்னே உலா வருவர். தமிழறியும் பெருமாளாகத் - தமிழின் பின் விரும்பி நைந்து செல்லும் பச்சைப் பசுங்கொண்டலாகத்-திருமால் கருதப்படுகின்றார். 'கல்வியிற் கரையிலாத காஞ்சிமாநகரத்தில்' கணிகண்ணன் என்னும் வைணவ அடியார் ஒருவர் வாழ்ந்து வர, அவர்

நாடோறும் காஞ்சிப்பதிவாழ் பெருமாளை வணங்கி நிற்க, அவர் மேல் ஏதோ ஒரு காரணம் பற்றி அழுக்காறு கொண்ட அவ்வூர் அரசன் அவரை அவமதிக்க, அது பொறுக்கலாற்றாத கணி கண்ணன் நேரே தான் வணங்கும் பெருமாளிடம் சென்று,

கணிகண்ணன் போகின்றான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா - துணிவுடைய
செந்நாப் புலவன் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்[17]

என்று பாடிய அளவில், கணிகண்ணனின் கவினுறு தமிழுக்கும் பெட்புறு பக்திக்கும் உருகிநின்ற காஞ்சியுறை மணிவண்ணப் பெருமாள் அவ் அடியார் பின்னாலேயே அவ்வூரை விட்டுப் புறப்பட்டுப் போய் விட்டாராம். மறுநாள் திருக்கோயிலில் பெருமாள் இல்லாமை கண்டு மக்கள் மன்னனிடம் உரைக்க, மன்னன் நிகழ்ந்தது அறிந்து, தன் தவற்றினை உணர்ந்து, கணி கண்ணனாரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளக் கணிகண்ணனும் பின்வருமாறு பாடினாராம்.

கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டும் - துணிவுடைய
செந்நாப் புலவன் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்விரித்துக் கொள்[18]

இவ்வாறு ஒரு கதை வழங்குகின்றது. இக்கதை கொண்டு 'பைந்தமிழின் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலாக'த் திருமால் விளங்கும் திறம் தெளிவுறுகின்றது.

இனிக் கோதைப்பிராட்டியார் உரைத்துள்ள கோதில் தமிழ் உள்நுழைந்து காண்போம்.

சைவ உலகில் காரைக்காலம்மையாரைக் குறிப்பிடும்பொழுது,

பிறந்துமொழி பயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்து நின்சேவடியே சேர்ந்தேன்[19]

என்பதாகக் குறிப்பிடுவர். எனவேதான் காரைக்காலம்மையாரின் இறுதிக் காலத்தே திருவாலங்காட்டு அண்ணல் அவரை

"அம்மையே'' என்று விளிக்கும் பேறு பெற்றார். இது போன்றே நம் கோதையாரும் தாம் இயற்றியருளிய நாச்சியார் திருமொழியின் முதற்பத்திலேயே,

> அவரைப் பிராயந் தொடங்கி என்றும்
> ஆதரித் தெழுந்தவென் தடமுலைகள்
> துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்
> தொழுதுவைத் தேனொல்லை விதிக்கிற்றியே [20]

என்று குறிப்பிட்டிருக்கக் காணலாம். மேலும் இவர்,

> மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
> வாழகில் லேன்கண்டாய் மன்மதனே [21]

என்று உறுதி வாய்ந்த நெஞ்சத்துடன் உரைத்திருப்பதனை நோக்கும்பொழுது ''ஆளுடை நாயகன் உறையும் கயிலை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்'' எனச் சூளுற வெடுத்த திருநாவுக்கரசர் பெருமானின் திண்ணிய நெஞ்சம் புலனாகின்றது. எனவே,

> எண்ணியார் எண்ணியாங் கெய்துப எண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின் [22]

என்னும் திருவள்ளுவர் திருக்குறளுக்கு ஒள்ளிய உருவாய்த் துலங்கும் கோதையார் தம் நெஞ்சவுறுதியைக் காண்கிறோம்.

முன்பே கண்டது போல நற்கணவன் என்னும் நற்பேற்றினை அடைய வேண்டித் தையொரு திங்களில் காமனைத் தொழுதல் வழக்காக அன்றிருந்திருக்கின்றது. அம்முறையில் நம் ஆண்டாள் நாச்சியாரும் ''கண்ணனை இணக்கு'' என்று கேட்டுக் காமனைக் கைதொழுகின்றார். தைமாதம் முழுவதும் தரையைப் பெருக்கித் தூய்மை செய்து, நீர் தெளித்துக் கோலமிட்டுப் புதுமணல் பரப்பித் தெருவினை அணிசெய்து காமனையும் அவன் தம்பி சாமனையும் கைதொழுது, சங்கு சக்கரக் கையனாகிய வேங்கடவனுக்கு வாழ்க்கைப்பட வகை செய்ய வேண்டுமாய் வணக்கத்தோடு வேண்டுகோள் விடுக்கின்றார்.

தையொரு திங்களும் தரைவிளக்கித்
தண்மண் டலமிட்டு மாசிமுன்னாள்
ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக் கலங்கரித் தனங்கதேவா
உய்யவு மாங்கொலோ வென்றுசொல்லி
உன்னையு மும்பியையும் தொழுதேன்,
வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கட வற்கென்னை விதிக்கிற்றியே. 23

வெள்ளை நுண்மணலால் தெருவை அழகு செய்கிறார்; விடிவதற்கு முன் எழுந்து நீர்நிலைக்குச் சென்று நீராடுகிறார். முள்ளில்லாச் சுள்ளி விறகெடுத்து அதனை எரியவிட்டுக் காம தேவனைக் கைதொழுது நின்று, புள்ளின்வாய் பிளந்த புனிதனை வாழ்க்கையில் மணாளனாகக் கூட்டி வை என்று வேண்டி நிற்கிறார்.

வெள்ளைநுண் மணற்கொண்டு தெருவணிந்து
வெள்வரைப் பதன்முன்னம் துறைபடிந்து,
முள்ளுமில் லாச்சுள்ளி யெரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன் காமதேவா,
கள்ளவிழ் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கடல்வண்ண னென்பதோர் பேரெழுதி,
புள்ளினை வாய்பிளந் தானென்பதோர்
இலக்கினில் புகவென்னை யெய்கிற்றியே. 24

பூக்களால் எங்கும் கோவிந்தன் என்று பெயரெழுதி நிற்கிறார்.

கொத்தலர் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கோவிந்த னென்பதோர் பேரெழுதி 25

நெல், கரும்பு, கட்டியரிசி, அவல் முதலியன வைத்துப் படைக்கின்றனர். மறையவர் ஓதும் மந்திரங்களால் மன்மதனை வணங்குகின்றனர். திருவிக்கிரமவதாரம் எடுத்த திருமால் தன்னைத் திருமணத்தில் மணாட்டியாகக் கொள்ள வேண்டும் என்று வேண்டி மன்மதனை வணங்கி நிற்கிறார் கோதையார்.

காயுடை நெல்லொடு கரும்பமைத்துக்
கட்டி யரிசி யவலமைத்து,
வாயுடை மறையவர் மந்திரத்தால்
மன்மத னே! உன்னை வணங்குகின்றேன்,
தேயமுன் னளந்தவன் திரிவிக்கிரமன்
திருக்கைக ளாலென்னைத் தீண்டும்வண்ணம்,
சாயுடை வயிறுமென் தடமுலையும்
தரணியில் தலைப்புகழ் தரக்கிற்றியே 26

கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள் கோதை என்று பிறர் பேச, அப்பெரும்பேற்றினைத் தனக்குத் தருமாறு வேண்டி நைகின்றார் ஆண்டாள். இதன் பொருட்டே நோன்பு நோற்பதாகவும், எனவே அந்நோன்பிற்கிரங்கி அருள் செய்ய வேண்டும் என்றும் வாதாடுகின்றார் அணியரங்கன் நெஞ்சிற்புகுந்து கோதை பிராட்டியார்.

மாசுடை யுடம்பொடு தலையுலறி
வாய்ப்புறம் வெளுத்தொரு போதுமுண்டு,
தேசுடைத் திறலுடைக் காமதேவா!
நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள்கண்டாய்,
பேசுவ தொன்றுண்டிங் கெம்பெருமான்
பெண்மையைத் தலையுடைத் தாக்கும்வண்ணம்
கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள்
என்னுமிப் பேறென் கருளுகண்டாய் 27

இவ்வாறு நாச்சியார் திருமொழியின் முதற்பத்து முழுவதும் இரக்கக் குறிப்பினைத் தோற்றுவதாய், காமதேவனை வேண்டும் போக்கினைக் கொண்டதாய், திருமாலை நைந்துருகி வேண்டி நிற்பதாய் அமைந்திருக்கக் காணலாம்.

இரண்டாம் பத்து, "நாமமாயிரம்" என்று தொடங்கும் பாசுரத்தைத் தொடக்கமாகக் கொண்டதாகும். சிறுமியர் மாயனைத் தம் 'சிற்றில் சிதையேல்' என வேண்டிக்கொள்ளும் போக்கில் இப்பத்து அமைந்திருக்கக் காணலாம்.

உமையம்மை புவனமாகிய செப்புகளை வைத்து விளையாடுகின்றாராம். அப்போது சிவபெருமான் அப்பழங்கலங்களாகிய

செப்புகளைத் தன் காலினால் எற்றி விடுகிறாராம். அதனால் அக்கலங்கள் சிதைந்து ஓடுகின்றனவாம். ஆனாலும் அது குறித்துச் சிறிதும் கவலைப்படாமல் உமையம்மை மீண்டும் மீண்டும் அப்புவனமாகிய பெருங்கலங்களை எடுத்து அடுக்கு கின்றாராம். இதனைக் குமரகுருபரர்,

புவனப் பெருங்கலம் எடுத்து எடுத்து அடுக்கும்
நின் கருணைத் திறம் [28]

என்றுபாடுவர். இம்முறையில் ஆயர்பாடிச் சிறுமியர் தம் கைத் திறமெல்லாங் காட்டிச் சிற்றில் அமைக்கின்றனர். அதனைக் காலால் எற்றியுதைத்து இடர்ப்படுத்த வருகிறான் மாயன். இச் செயல் அடாது; தகாது; எனவே மாயனே எங்கள் சிற்றிலைச் சிதையேல் என்று கூறி அவனது அருளுடைமையினை அவாவி நிற்கின்றனர்.

பங்குனிக் கடைநாளில் காமன் நோன்பு நோற்கின்றனர். ஆனால் கிரீதரனோவெனில் சிற்றில் வந்து சிதைக்கத் தருணம் பார்த்துள்ளான். சிறுமியரோ தம் முதுகு நோவ முழுநாளும் உழைத்துச் சிற்றிலை உருவாக்கியிருக்கின்றனர். ஆர்வம் மிகக் கொண்டு அழகுறச் சிற்றிலை அக்கறையுடன் ஆக்கியுள்ளனர். அந்நிலையில் "அன்று ஆலிலையின்மேல் துயின்ற பாலனாகிய நீ, எங்கள் மேல் கழிவிரக்கம் காட்டாமற் போவது எங்கள் பாவமாகவே கொள்ளத் தக்கது" என்று சிறுமியர் பேசுகின்றனர்.

இன்றுமுற்றும் முதுகுநோவ
இருந்திழைத்தஇச் சிற்றிலை,
நன்றும்கண்ணுற நோக்கிநாங்கொளும்
ஆர்வந் தன்னைத் தணிகிடாய்,
அன்றுபாலக னாகியாலிலை
மேல்துயின்றவெம் மாதியாய்,
என்றுமுன்றனக் கெங்கள் மேலிரக்
கம்மெழாததெம் பாவமே [29]

வண்டல் நுண்மணலைக் கொண்டு தம் கைகளால் தொல்லை மேற்கொண்டு தாங்களே ஆக்கிய சிற்றிலைச் சிதைத்தல் எவ் வகையிற் பார்த்தாலும் அருளுடைமை ஆகாது எனப் பேசு கின்றனர்.

கண்ணனோ மாயத்தில் வல்லவனாய் விளங்குகின்றான். நீல மேகக் கருநிற வண்ணனாய்க் கோலங்காட்டி நிற்கிறான். ஆனால் அவனுடைய பேச்சு, சிறுமியரைப் பித்தேறச் செய்விக்கிறது; அவன் செய்கை அவர்களை அவன்பேரில் மையல்கொளச் செய்விக்கிறது. முகமோ மாயஞ் செய்யும் முகமாகத் திகழ்கிறது; மாய மந்திரஞ் செய்கிறது அச்சுந்தர முகம். செந்தாமரைக் கண்ணனே! எங்கள் சிறுவீட்டினை வந்து சிதைக்கும் தொழிலைச் செய்யாதே.

பெய்யுமாமுகில் போல்வண்ணா! உன்றன்
　　பேச்சும்செய்கையும், எங்களை
மையலேற்றி மயக்கவுன்முகம்
　　மாயமந்திரந் தான்கொலோ,
நொய்யர்பிள்ளைக ளென்பதற்குன்னை
　　நோவநாங்களு ரைக்கிலோம்,
செய்யதாமரைக் கண்ணினாயெங்கள்
　　சிற்றில்வந்து சிதையேலே. [30]

நாளெல்லாம் உழைத்துப் பாடுபட்டுச் சிறுமியர் நுண்ணிய வெள்ளிய மணலைக் கொண்டு சிற்றிலை அமைத்துள்ளனர்; அச்சிற்றில் வீதிகளெங்கும் அழகுறத் திகழ்கின்றது. கண்டவர் கண்களைக் கவர்வனவாயும் பார்ப்பவர் மனங்களைப் பாராட்டு ரைக்கச் செய்வனவாயும் செய்கின்றது. ஆனால் நீயோ நாங்கள் பாடுபட்டு உழைத்துச் சமைத்த சிற்றிலை அழிக்க வருகிறாய். அவ்வாறு ஒரு வேளை அழித்துவிட்டாலும், உன் மீது உள்ளம் ஓடி, அன்பு மிகுந்து உருகி நிற்போமேயல்லாமல் உன்னிடத்தில் நாங்கள் கோபமொன்றும் கொள்ளமாட்டோம். கள்ளத்தனம் வாய்ந்த மாதவனே! கேசவனே! உன் முகத்தில் உள்ளன கண்களா, அல்லவே என்கிறார்கள் ஆயப்பாடிச் சிறுமியர்.

வெள்ளைநுண்மணல் கொண்டுசிற்றில்
　　விசித்திரப்பட, வீதிவாய்த்
தெள்ளிநாங்களி ழைத்தகோல
　　மழித்தியாகிலும், உன்றன்மேல்
உள்ளமோடி யுருகலல்லால்
　　உரோடமொன்று மிலோங்கண்டாய்,
கள்ளமாதவா! கேசவா! உன்
　　முகத்தனகண்க ளல்லவே. [31]

இலங்கையைக் கோபத்தாலே சீரழித்த சிரீதரனே! இலங்கை செல்லச் சேதுப்பாலம் சமைத்த சேவகனே! அப்படிப்பட்ட நீ — பாலம் கட்டிய நீ, பாவம் — எங்கள் சிற்றிலை வந்து சிதைக் கலாமா? என்று நயம்பட வோர் வினா எழுப்பி, அவனுள்ளத்தில் ஓர் இரக்கவுணர்வை ஏற்படுத்தப் பார்க்கின்றனர்.

செற்று, இலங்கையைப் பூசலாக்கிய
சேவகா! எம்மை வாதியேல்[32]

சேதுபந்தம் திருத்தினாயெங்கள்
சிற்றில்வந்து சிதையேலே[33]

சிறுமியர் இரக்கக் குறிப்புடன் வேண்ட வேண்ட வேணு கோபாலனாம் கண்ணனுக்கும் நெஞ்சம் நெகிழ்ந்திருக்கும் போலும்! ஏனெனில் அவன் 'வேண்டத்தக்கது அறிவோனும் வேண்ட முழுதும் தருவோனும்' அல்லனோ! எனவே "கோழியழைப்பதன்" என்று தொடங்கும் மூன்றாம் பத்து, கன்னியரோடு கண்ணன் விளையாடிய செயலை விளக்கி நிற்கிறது. அருளுக்கு ஆட்பட்டு எளிவந்து நிற்கும் சௌலப்பியம் - எளிமை – இறைவன்பாலன்றோ குறைவற நிரம்பி நிற்கிறது. "கும்பிடுவார் யாரென்று தேடுகின்ற வனன்றோ கோவிந்தன்!". அவன் மக்களுக்கு "உண்ணுசோறும் பருகுநீரும் தின்னும் வெற்றிலையுமாய்த்" திகழ்கின்றான்.

கோழி வைகறைப்போதில் 'கொக்கரக்கோ' எனக் குரலெழுப்பி ஊர் மக்களை உறக்கத்திலிருந்து எழுப்பாத அவ்விடியற் காலைக்கும் முற்பட்ட இருள் பிரியாப் பொழுதிலேயே குளிர்ந்த குளத்தில் குதித்துக் குதித்து நீராடி, குடைந்து குடைந்து நீராடி, முகேர் முகேர் எனப் பாய்ந்து பாய்ந்து நீராடி வர வேண்டும் என்பதற்காக ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமியர் வந்தனர். ஆனால் வந்தவிடத்தில் அவர்கள் தங்கள் துகில் இழந்து பரிபக்குவப் பட்டு நின்றனர். இவையெல்லாம் சக்கரத்தைக் கையிலே தாங்கிய மாயன் செய்த மாயம்! பாம்பணை மேலே பள்ளி கொண்டு கண்வளரும் கண்ணன் செய்த கருமம். இனி யாங்கள் ஒருநாளும் பொய்கைக்குக் குளிக்கவென வாரோம். துகிலை

இழந்து நிற்கும் தோழியும் நானும் உன்னைக் கையெடுத்துக் கும்பிடுகின்றோம். நீ எங்களுக் கிரங்கி எப்படியேனும் எங்கள் துகிலைத் திருப்பித் தந்து எங்கள் மானத்தைக் காக்கவேண்டும்.

இவ்வாறு வேண்டுகின்றனர் ஆயர் சிறுமியர்.

கோழி யழைப்பதன் முன்னம்
குடைந்துநீ ராடுவான் போந்தோம்,
ஆழியஞ் செல்வ னெழுந்தான்
அரவணை மேல்பள்ளி கொண்டாய்,
ஏழைமை யாற்றவும் பட்டோம்
இனியென்றும் பொய்கைக்கு வாரோம்,
தோழியும் நானும் தொழுதோம்
துகிலைப் பணித்தரு ளாயே. 34

இங்கே என்ன நேர்ந்தது! நீ இந்தக் குளக்கரைக்கு எவ்வாறு வந்தாய்? துளசிமாலை அணிந்த தூயனே! திருமாலே! மாயனே! எங்கள் அமுதே! ஏதோ எங்கள் விதி! எங்கள் நேரம் சரியில்லை; இன்று வந்து உன்னிடம் சரியாக அகப்பட்டுக் கொண்டோம். காளிங்க நர்த்தனம் செய்த கண்ணபிரானே! வித்தகம் விளைவிக்கும் பிள்ளையே! நீ ஏறியிருக்கும் குருந்த மரத்திற் கொண்டுபோய் ஒளித்து வைத்திருக்கும் எங்கள் ஆடைகளையெல்லாம் எங்கட்கு அளிக்கமாட்டாயா?

இதுவென் புகுந்ததிங் கந்தோ!
இப்பொய்கைக் கெவ்வாறு வந்தாய்,
மதுவின் துழாய்முடி மாலே!
மாயனே! எங்க ளமுதே,
விதியின்மை யாலது மாட்டோம்
வித்தகப் பிள்ளாய்! விரையேல்,
குதிகொண் டரவில் நடித்தாய்!
குருந்திடைக் கூறை பணியாய். 35

அந்தோ! இஃதென்ன இளமைக் கொடுமை! எங்கள் வீட்டார் பார்த்தால் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். நீ செய்யும் செயல் உன் தகுதிக்கு அடாத செயல், தகாத செயல் என்பதனை நீ கருத மாட்டாயா? பூக்கள் நிறைந்த குருந்த மரத்திலேறிக்

கொண்டு உட்கார்ந்திருக்கிறாய்! கோதண்டம் எனும் வில்லால் வீரம் விளைவித்து இலங்கைமன்னன் இராவணனை அழித்த அழகனே! நீ என்னென்ன விரும்புகின்றாயோ, அவற்றை யெல்லாம் நாங்கள் உனக்கு உளமாரத் தருவோம். எவரும் காணாத நிலையில் நாங்கள் ஊர்க்குள் ஓடிவிடுகின்றோம். அதற்கு வாய்ப்பாக எடுத்து ஒளித்து வைத்திருக்கும் எங்கள் உடைகளை எங்களுக்கு அருள் உள்ளத்தோடு தந்துவிடு.

எல்லே யீதென் இளமை
எம்மனை மார்காணி லொட்டார்,
பொல்லாங்கீ தென்று கருதாய்
பூங்குருந் தேறி யிருத்தி,
வில்லாலி லங்கை யழித்தாய்! நீ
வேண்டிய தெல்லாம் தருவோம்,
பல்லாரும் காணாமே போவோம்
பட்டைப் பணித்தரு ளாயே. [36]

எவ்வளவு கூப்பாடுகள் போட்டாலும் அவையெல்லாம் விழலுக்கிரைத்த நீராயின. எனவே ''இரக்கமே லொன்றுமிலா தாய்'' என்று ஏசுகின்றனர். ஏசி என்ன பயன்? அவன் மனம் வைத்தால் தானே இவர்கள் மானம் காப்பாற்றப்படும். எனவே ''இலங்கை அழித்த பிரானே'' என்றும், ''குரக்கு அரசாவது அறிந்தோம்'' என்றும் எளியவர்க்காக வலியவர்களை அழித்து அவன் அருளிய திறத்தைப் பறைசாற்றிக் கூறித் தங்கள் உடையை வேண்டி நிற்கின்றனர்.

பரக்க விழித்தெங்கும் நோக்கிப்
பலர்குடைந் தாடும் சுனையில்,
அரக்கநில் லாகண்ண நீர்கள்
அலமரு கின்றவா பாராய்,
இரக்கமே லொன்று மிலாதாய்!
இலங்கை யழித்த பிரானே,
குரக்கர சாவ தறிந்தோம்
குருந்திடைக் கூறை பணியாய் [37]

நீர் நிலைகளில் கயல் மீன்களோடு வாளைமீன்கள் விரவி இவர்கள் கால்களிற் பட்டுத் துன்புறுத்துகின்றன. தாமரைப்

பொய்கையில் வளர்ந்திருக்கும் தாமரைக் கொடிகளின் அடித் தண்டுகள் பெண்களின் கால்களிற் பட்டு உரசிநின்று உறுத்து கின்றன; நீரிலே நெடுநேரம் நின்று சோர்ந்து போகிறார்கள். நேரம் ஆக ஆகப் பலரும் நீர்நிலைகளை நோக்கி வரும் அரவம் கேட்கின்றது. . ஆர்வத்தை யுனக்கே என வைத்து வாழும் நாங்கள் துன்பப்படலாமா? நீ நீதியல்லாதன செய்யலாமா? இது நல்லதல்ல; மிகவும் கொடிது என்றும் நாங்கள் சொல்லி விட்டோம். எனவே குருந்த மரத்திடை ஒளித்து வைத்திருக்கும் எங்கள் ஆடைகளைக் கொடுத்துதவி எங்கள் மானம் சீர்குலைவ தினின்றும் காப்பாற்றுவாயாக என்று ஆய்ப்பாடிச் செல்வியர் அழகு நயந்தோன்ற வேண்டுவதாக அமைந்துள்ளது மூன்றாம் பத்து.

கூடல் குறிப்பினை உணர்த்திநிற்பது நான்காம் பத்தாகும். இப்பத்து "தெள்ளியார் பலர்" எனத் தொடங்குகின்றது.

முதற்பாட்டின் முதலடியிலேயே கோதில் தமிழ் உரைக்கும் கோதையார் ஒரு தெளிந்த உயர்பொருளை உணர்த்தி நிற்கக் காணலாம். திருமாலைத் "தெள்ளியார் பலர் கைதொழும் தேவனார்" என்று குறிப்பிட்டுள்ளார். திருமாலிருஞ் சோலை மணாளராம் திருமாலை அறிவுத் தெளிவு பெற்றோர் அனை வரும் கைதொழுதேத்துகின்றனராம்.

கூடல் இழைத்தல் என்பது கண்ணை மூடிக்கொண்டு ஒரு வட்டம் போடக் கோடு போடத் தொடங்க, அக்கோட்டின் நீட்சி இரு முனைகளும் பிழையின்றி வட்டமாகப் போய்க் கூடி முடிவ தாகும். அவ்வாறு தொடங்கிய கோடு ஒழுங்காக வட்டத்தில் போய் முடிந்தால் பெண்கள் தாங்கள் நினைத்தது நடக்கும் என்று முடிவு செய்வர்; வட்டத்தில் முடியவில்லையானால் கொண்ட எண்ணம் ஈடேறாது; பிழைபடும் எனக் கருதுவர்.

'கூடலிழைத்த'லுக்கு இப்படியும் ஒரு விளக்கமுண்டு.

முதற்பாடலில் திருமாலிருஞ்சோலையைச் சொல்லியவர், இரண்டாவது பாடலில் திருவேங்கடத்தையும் திருக்கண்ண புரத்தையும் குறிப்பிட்டிருக்கக் காணலாம். இப்பத்து முழுவதிலும் பெரும்பாலும் புராணக் குறிப்புகளே இடம் பெற்றிருக்கக்

காணலாம். இரண்டாம் பாடலில் வாமனன் குறிக்கப் பெறுகிறார். மூன்றாம் பாடலில் தேவகி, வசுதேவர் இடம் பெற்றுள்ளனர். நான்காவது பாடலில் காளியன் என்னும் பாம்பின்மேல் நடம்புரிந்த பாதத்தினைப் புகழும் ஆண்டாளைப் பார்க்கிறோம். மாயனை, மன்னு வடமதுரை மைந்தனை, மாமத யானை யுதைத்த தீரனாக ஐந்தாம் பாடல் குறிப்பிடு கின்றது. கஞ்சன் வஞ்சனையை வென்ற மதுரைக்கிறைவனின் திறம் அடுத்த பாட்டில் உரைக்கப்படுகிறது. சிசுபாலனைப் பற்றிய குறிப்பு ஏழாவது பாட்டிலும், கன்றுகளை மேய்த்த கோபாலனைப் பற்றிய குறிப்பு எட்டாவது பாட்டிலும் இடம் பெற்றுள்ளன. குள்ள வாமன உருவம் எடுத்துச் சென்று, மாவலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண்கேட்டு இரந்து அண்டத்தையும் நிலத்தையும் ஓரடியாலும், ஆகாயத்தை இரண்டாவது அடியாலும் அளந்து, மூன்றாவது அடிக்கு இடமில்லையாகவே மாவலிச் சக்கரவர்த்தியின் தலையில் மூன்றாவது அடியை வைத்து, அவனை மண்ணுக்குள் அழுத்திய வரலாறு ஒன்பதாவது பாட்டில் பின்வருமாறு விரிவாகக் கூறப் பட்டுள்ளது.

> கொண்ட கோலக் குறளுரு வாய்ச்சென்று,
> பண்டு மாவலி தன்பெரு வேள்வியில்,
> அண்ட மும்நில னும்அடி யொன்றினால்,
> கொண்ட வன்வரில் கூடிடு கூடலே! [38]

ஆதிமூலமே என்று கதறி ஓலமிட்டழைத்த கசேந்திரன் என்னும் யானையைக் காப்பாற்றிய செய்தி ஈற்றயற்பாடலில் இடம்பெற்றுள்ளது.

மேலும், அன்புடையார் மனத்தேதான் ஆண்டவன் தங்கு வான் என்பதனை எட்டாம் பாடலில் ஆண்டாள் அழகுற உணர்த்தியிருப்பதனைக் காணலாம்.

> ஆவ லன்புடை யார்தம் மனத்தன்றி
> மேவ லன், விரை சூழ்துவ ராபதிக்
> காவ லன், கன்று மேய்த்து விளையாடும்,
> கோவ லன்வரில் கூடிடு கூடலே! [39]

''மன்னு பெரும்புகழ்'' எனத் தொடங்குவது ஐந்தாவது பத்தாகும். ''குயிற்பத்து'' என்று தலைப்பிடப்பட்டுள்ளது. மாணிக்கவாசகரும் திருவாசகத்தில் ''கீதம் இனிய குயிலே'' எனத் தொடங்கிப் பாடியிருக்கக் காணலாம். அதுபோல் ஆண்டாளும் ''குயிற்பத்து'' பாடியுள்ளார். இக்குயிற்பத்துள் நம் சிந்தையை முதலாவதாக அள்ளுவது இப்பாடல்களில் இடம் பெற்றிருக்கும் இயற்கை வருணனையேயாகும். குயில் வாழும் இடத்தைக் குயிலை விளிக்கும் போக்கிற் குறிப்பிடும் கோதையார் அக்குயிலின் இயற்கைச் சூழலை நயம்படக் கிளத்தியிருக்கக் காணலாம். இயற்கை வருணனைகள் சில வருமாறு:

புன்னை குருக்கத்தி ஞாழல் செருந்திப்
பொதும்பினில் வாழும் குயிலே 40

கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்
களித்திசை பாடுங் குயிலே 41

போதலர் காவில் புதுமணம் நாறப்
பொறிவண்டின் காமரங் கேட்டு, உன்
காதலி யோருடன் வாழ்குயி லே! 42

கொத்தலர் காவில் மணித்தடம் கண்படை
கொள்ளு மிளங்குயிலே 43

தேங்கனி மாம்பொழில் செந்தளிர் கோதும்
சிறுகுயிலே 44

பொங்கொளி வண்டிரைக் கும்பொழில்
வாழ்குயிலே! 45

என்றுமிக் காவி லிருந்திருந் தென்னைத்
ததைத்தாதே நீயும் குயிலே 46

மேலும் இப்பத்தில் சில இலக்கிய நயங்களையும் காணக்கூடும்.

மன்னு பெரும்புகழ் மாதவன் மாமணி
வண்ணன் மணிமுடி மைந்தன்
தன்னை உகந்தது காரண மாகஎன்
சங்கிழக் கும்வழக் குண்டே 47

என்னும் பாடலடிகள் அத்தகைய நயங்களில் ஒன்றைக் கொண்டுள்ளன. கண்ணனைக் காதலித்ததன் காரணமாக என் கைகளில் உள்ள சங்கு வளையல்கள் என் கைகளை விட்டு நீங்கக் காரணமாகிவிட்டன என்பதாம்.

வெண்மையான சங்கைக் கையிலே கொண்ட விமலன் கோதையாரின் உள்ளத்திற்புகுந்து நாள்தோறும் மெலிவித்து உயிரினைப் போக்கா நிற்கிறான். எலும்பு நெக்குருகிக் கருநெடும் வேற்கண்கள் இரண்டும் ஒன்றையொன்று பொருந்தாமல் பல நாட்கள் கழிந்துவிட்டமையால் துன்பம் என்னும் கடலில் மூழ்கி வைகுந்தம் என்பதோர் தோணி பெறாமல் துயருழக்கின்றேன்; அன்புடையாரைப் பிரிந்து வாழுதல் எத்துணை அருமைப்பாடுடைய செயல் என்பதனை, காதலியோடு வாழும் ஏ குயிலே! நீ அறிவாயல்லவா? என்று ஆண்டாள் அரற்றும் போக்கில் அமைந்துள்ளது நான்காவது பாட்டு.

என்புரு கியினி வேல்நெடுங் கண்கள்
இமைபொருந் தாபல நாளும்,
துன்பக் கடல்புக்கு வைகுந்த னென்பதோர்
தோணி பெறாதுழல் கின்றேன்,
அன்புடை யாரைப் பிரிவுற நோயது
நீயு மறிதி குயிலே
பொன்புரை மேனிக் கருளக் கொடியுடைப்
புண்ணிய னைவரக் கூவாய் [48]

சமத்காரம் அல்லது விரகுடன் பாடும் பாடலாய் ஐந்தாவது பாடல் அமைந்துள்ளது.

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத்தமிழ் மூன்றுந் தா [49]

என்பது பிற்கால ஔவையார் பாடிய பாட்டாகும். இதில் யானை முகத்தனார் விநாயகப் பெருமானுக்குப் பால், தேன், வெல்லப்பாகு, பருப்பு ஆகிய நான்கினையும் தருவதாகவும், அதற்கு மாற்றாகச்

சங்கத் தமிழ் என வழங்கும் இயல், இசை, கூத்து ஆகிய மூன்று தமிழினையும் தமக்குத் தர வேண்டும் என்றும் வேண்டுகின்றார். நான்கு பொருள் தந்துவிட்டு மூன்று பொருள்களை அதற்குப் பதிலாகப் பெற்றுக்கொள்வது வணிக நோக்கில் எளிதாகும். எனவே நான்கு தந்து விநாயகரிடமிருந்து மூன்று பெறும் சமத்கார - சதுரப்பாடான உத்தி இப்பாடலிற் காணப்படுகின்றது. இதுபோலவே மணிவாசகர்

'தந்தது உன்றன்னை கொண்டது என்றன்னை -
சங்கரா ஆர்கொலோ சதுரர்' 50

என்று கேட்கின்றார்.

அதுபோல் கீழ்க்காணும் ஆண்டாளின் பாடலில் இனிய சோறு, பாலமுது ஆகிய இரண்டனைக் குயிலுக்குத் த்ந்து, அதற்குப் பதிலாக அக்குயிலிடமிருந்து ஒன்றே ஒன்றை - உலகளந்த மாயன் கண்ணபிரான் இதோ வருகிறான் என்ற ஒரே ஒரு சொற்றொடரைக் கூவுமாறு கேட்டுக் கொள்கிறார்.

மென்னடை யன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத் தூருறை வான்றனை,
பொன்னடி காண்பதோ ராசையி னாலென்
பொருகயற் கண்ணினை துஞ்சா,
இன்னடி சிலொடு பாலமு தூட்டி
எடுத்தவென் கோலக் கிளியை,
உன்னொடு தோழமை கொள்வன் குயிலே!
உலகளந் தான்வரக் கூவாய் 51

மேலும் அத்தத்துவங்கடந்த தயாபரன் வருகிறான் என்று கூவினால் தம் தலையல்லது கைம்மாறாகத் தருவதற்கு வேறொன்றுமில்லை என்றும், பெருந்தரும வசப்பட்ட செயல் அதுவே ஆகுமென்றும், குறிப்பிடுகின்றார்.

தத்துவ னைவரக் கூகிற்றி யாகில்
தலையல்லால் கைம்மாறி லேனே 52

ஆழியும் சங்குமொண் தண்டும்
தங்கிய கையவ னைவரக் கூவிலநீ
சாலத் தருமம் பெறுதி 53

இப்பத்தின் எட்டாம் பாட்டு நயஞ்சிறந்து காணப்படுகின்றது.

"நான் பைங்கிளி வண்ணனாம் சிரீதரன் என்பவனின் பாச வலையிற்பட்டிருந்தேன். ஏ! குயிலே! நீ இதைச் சற்றுக் கவனமாகக் கேட்பாயாக! சங்கொடு சக்கரத்தைக் கையிலே தாங்கிக் கொண்டிருக்கும் திருமால் வருகிறார் என்று கூவுதல் வேண்டும்; இல்லையேல் என் கைகளினின்றும் கழன்றோடிப்போன என் பொன் வளைகளைக் கொண்டுவந்து தருதல் வேண்டும். இங்கிருக்கும் சோலையில் நீ நிரந்தரமாகத் தங்கி வாழக் கருதுவாயேயானால் இந்த இரண்டு காரியங்களில் ஒன்றைக் கட்டாயம் செய்ய வேண்டும்".

> பைங்கிளி வண்ணன் சிரீதர னென்பதோர்
> பாசத் தகப்பட்டி ருந்தேன்,
> பொங்கொளி வண்டிரைக் கும்பொழில் வாழ்குயி
> லே! குறிக் கொண்டிது நீகேள்,
> சங்கொடு சக்கரத் தான்வரக் கூவுதல்
> பொன்வளை கொண்டு தருதல்,
> இங்குள்ள காவினில் வாழக் கருதில்
> இரண்டத்தொன் றேல்திண்ணம் வேண்டும் [54]

"தென்றலும் திங்களும் என் உடம்பை அறுத்துக் கூறு போட்டு நலிவிக்கின்றன. என்றென்றைக்கும் இச்சோலையில் வாழ விரும்பினால் நீயும் என்னை மேலும் துன்புறுத்தாதே! நாராயணன் இன்று இங்கு வருவான் என்று கூவுவாயாக! இன்றேல் இங்கிருந்தும் உன்னை நிச்சயமாகத் துரத்துவேன்."

> அன்றுல கம்மளந் தானை யுகந்தடி
> மைக்கண வன்வலி செய்ய,
> தென்றலுந் திங்களு மூடறுத் தென்னை
> நலியும் முறைமை யறியேன்,
> என்றுமிக் காவி லிருந்திருந் தென்னைத்
> ததைத்தாதே நீயும் குயிலே,
> இன்றுநா ராயண னைவரக் கூவாயேல்
> இங்குத்தை நின்றும் துரப்பன் [55]

இவ்வாறாக, "விண்ணுற நீண்டடி தாவிய மைந்தனை வேற்கண் மடந்தை விரும்பி, 'கண்ணுற வென்கடல் வண்ணனைக் கூவு கருங்குயிலே' என்று கேட்டுக் கொண்ட வேண்டுகோளே இலக்கிய நயம் இயைய ஐந்தாம் பத்தாக உருக்கொண்டுள்ளது எனலாம்."

தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் "தூது" என்பதும் ஒன்றாகும். ஒருவர் தம் கருத்தை இன்னொருவருக்குத் தெரிவிக்க இடையே பிறிதொருவரை அனுப்புவது தூது எனப்படும். "A kind of poem in Kali Venba which purports to be a message of love sent through a companion, a bird etc., to effect a reconciliation". என்ற ஆங்கில விளக்கம் தமிழ்ப் பேரகராதியாற் பெறப்படுகின்றது.

அரசர்கள் பகையரசர்கள் மாட்டுத் தூதனுப்புவதும், புலவர்கள் வள்ளல்களிடத்துத் தூதனுப்புவதும், தலைவர்கள் தலைவியரிடத்தில் தூதனுப்புவதும், தலைவியர் தலைவர்களிடத்துத் தூதனுப்புவதும் இயல்பு என்பதனைப் பழந்தமிழ் நூல்கள் கொண்டு தெளியலாம்.

சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழில்படுத் தடக்கியும் [56]

என்னும் தொல்காப்பிய நூற்பா காமமிக்க கழிபடர்கிளவியினைச் சுட்டுவதனை உய்த்துணரலாம். பின்வரும் நூற்பாக்கள் தூதிலக்கணம் கிளத்துவனவாம்.

பயிறருங் கலிவெண் பாவி னாலே
உயர்திணைப் பொருளையும் அஃறிணைப் பொருளையும்
சந்தியின் விடுத்தல் முந்துறு தூதெனப்
பாட்டியல் புலவர்கள் நாட்டினர் தெளிந்தே [57]

எகினமயில் கிள்ளை எழிலியொடு பூவை
சகிகுயினெஞ் சந்தென்றல் வண்டு - தொகைபத்தை
வேறுவேறா கப்பிரித்து வித்தரித்து மாலைகொண்டன்பு
ஊறிவா வென்றல் தூது [58]

இயம்புகின்ற காலத்து எகினமயில் கிள்ளை
பயம்பெறுமே கம்பூவை பாங்கி - நயந்தகுயில்
பேதைநெஞ்சம் தென்றல் பிரமரம் ஈரைந்துமே
தூதுரைத்து வாங்கும் தொடை [59]

புறநானூற்றில் பிசிராந்தையார் என்னும் புலவர் கோப்பெருஞ் சோழனிடத்தில் ஓர் அன்னச் சேவலைத் தூது விடுத்தார் என்பதும், அதியமான் தன் பகைமன்னனாம் தொண்டைமானிடத்தே ஒளவையாரைத் தூது விடுத்தான் என்பதும் அறியப்படும் செய்திகளாகும். நற்றிணையில் நாரை விடுதூது, கிளி விடுதூது, வண்டு விடுதூது, குறுந்தொகையில் வண்டு விடுதூது, ஐங்குறு நூற்றில் நெஞ்சு விடுதூது, அகநானூற்றில் நண்டு விடுதூது குறித்துப் பாடல்களைக் காணலாம். தேவாரத்தில் அன்னம், அன்றிற்பறவை, குயில், குருகு, கிளி, நாரை, பூவை, வண்டு, வாரணம், தென்றல், சேவல், கொண்டல் முதலியனவற்றைத்தூது விட்டதாக நாயன்மார்கள் பாடியுள்ள பாடல்களைக் காணலாம். திருக்கோத்தும்பியும் குயிற்பத்தும் திருவாசகத்தில் தூது எனும் போக்கில் அமைந்திருக்கக் காணலாம். ஆழ்வார்கள் பாடல்களில் மேக விடுதூது, குயில் விடுதூது, செம்போத்து விடுதூது, நாரை விடுதூது, வண்டு விடுதூது முதலியன இடம் பெற்றுள்ளன. பிற் காலத்தே ஓர் இலக்கியமாக எழுந்தது எனச் சொல்லத்தக்கது கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியார் இயற்றிய நெஞ்சுவிடு தூது என்னும் நூலாகும்.

பணவிடுதூது, தமிழ் விடுதூது, மான்விடுதூது, வனசவிடுதூது, சவ்வாதுவிடுதூது, நெல்விடுதூது, புகையிலைவிடுதூது, விறலி விடுதூது, துகில் விடுதூது, காக்கை விடுதூது, கழுதை விடுதூது, பழையது விடுதூது, அன்பு விடுதூது, செருப்பு விடுதூது முதலான 'தூது' கள் பிற்காலத்தே எழுந்தன.

இப்பின்னணியில் நாச்சியார் திருமொழியில் இடம் பெற்றுள்ள மேக விடுதூதினைக் காண்போம்.

'விண்ணிலை மேலாப்பு' எனத் தொடங்கும் பத்து திருவாய் மொழியில் எட்டாம் பத்தாய் இலங்குகின்றது. நாச்சியார் வேங்கடமலையின் உச்சிமீதும் செல்லும் மேகங்களைப் பார்த்து

வேங்கடவனிடம் தூது செல்லுமாறு வேண்டுகின்றார். இந்தப் பத்தில் ஆண்டாளின் உணர்ச்சிவெள்ளத்தினையும், கற்பனைச் சிறப்பினையும் நயங்கெழுமிய கருத்துகளையும் கண்டு இன்புற லாம்.

இத்திருவேங்கடம் சங்ககாலந்தொட்டே தமிழ் இலக்கியங் களில் கவிஞர்களால் பாடப் பெற்று வரும் தலமாகும். ஒருசில பாட்டுகளைக் காண்போம்.

ஈன்று அணிமை கழிந்த மெல்லிய நடையழகு கொண்ட இளைய பெண் யானையினுடையவும் அதன் கன்றினுடையவு மான பசியினைப் போக்குவதற்காகப் பசிய கண்ணினையுடைய ஆண்யானை மூங்கிலின் முற்றாத முளையினைக் கொண்டு உண் பிக்கும் மலைச் சாரலையுடையது திரையன் காக்கும் வேங்கட மலையாகும்.

சாரல்
ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை
முற்றாத மூங்கில் முளைதரு பூட்டும்
வெள்வேல் திரையன் வேங்கட நெடுவரை [60]

கண்ணனார் என்னும் புலவர் பாடிய பாட்டு இது. நக்கீரர் பெருமானும் வேங்கடமலையைத் தம் பாடலொன்றுள் பாடி யிருக்கக் காணலாம். வேங்கை மரத்தின் பூக்கள் பல புள்ளிகளைத் தன் உடம்பிற்கொண்ட புலியின் நிறத்தையொப்பக் கீழே உதிர்ந்து கிடக்கின்றன. வேங்கை மரங்களின் இடையிடையே நாரத்தை மரங்களும் வளர்ந்துள்ளன. இம்மரங்களிடையே குரங்குகள் பாய்ந்து தாவுதலால் நாரத்தையின் புது மலர்கள் உதிர்கின்றன. தேன்நாறும் மலையுச்சி கொண்டது வேங்கட மலை என்கிறார் அவர்.

பல்பொறிப்
புலிக்கேழ் உற்ற பூவிடைப் பெருஞ்சினை
நரத்த நறும்பூ நாண்மலர் உதிரக்
கலைபாய்ந்து உகளும் கல்வேல் வேங்கைத்
தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய
வேங்கட வைப்பிற் சுரனிறந் தோரே [61]

பழம்பெரும்புலவர் மாமூலனார் புல்லி ஆண்ட நாடு என்பர்.

நிரைபல குழிஇய நெடுமொழிப் புல்லி
தேன்தூங்கு உயர்வரை நன்னாட்டு உம்பர்
வேங்கடம் இறந்தனர் ஆயினும் ஆண்டுஅவர்
நீடலர் [62]

கல்லாடனார் எனும் புலவரும்,

காம்புடை நெடுவரை வேங்கடம் [63]

என்று குறிப்பிடுவர்.

சிலப்பதிகாரத்து இளங்கோவடிகள் செங்கண் நெடியோனின் நின்ற வண்ணத்தைப் பின்வருவாறு குறிப்பிடுகின்றார்.

வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலயத்து உச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக் கோடியுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும் [64]

இடைக்காலத்தில் திருப்பதி மேலும் புகழ் பெற்றது.

திருப்பதி மிதியாப் பாதம்
சிவனடி வணங்காச் சென்னி
இரப்பவர்க் கீயாக் கைகள்
இனியசொற் கேளாக் காது
புரப்பவர் தங்கள் கண்ணீர்
பொழிதரச் சாகாத் தேகம்
இருப்பினும் படுபனென்? காட்டில்
எரிப்பினும் இல்லை தானே. [65]

மலைகளில் வேங்கடமலையே தாம் விரும்புவது என்கின்றார் முதலாழ்வார்களில் ஒருவரான பூதத்தாழ்வார்.

நெறியார் குழற்கற்றை முன்னின்று பின்தாழ்ந்து
அறியாது இளங்கிரி என்(று)எண்ணி – பிரியாது
பூங்கொடிகள் வைகும் பொருபுனற் குன்றென்றும்
வேங்கடமேயாம் விரும்பும் வெற்பு [66]

பலருக்கும் தெரிந்த அர அரி வடிவத்தை இயைத்துப் பேயாழ்வார் பாடிய பாடல் வேங்கடம் பற்றியதாகும்.

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும் தோன்றுமால் — சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து [67]

"பல மலைகளின் பெயர்களைச் சொல்லிவரும் அளவிலே வேங்கடமலை என்ற பெயரும் என் வாயில் வந்துவிட்டது. இதனால் எனக்குப் பரமபதமும் சித்தித்து விட்டது" என்கிறார் திருமழிசையாழ்வார்.

வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன் [68]

குலசேகரர் வேங்கடமலைமாட்டுக் கொண்ட ஈடுபாடு பெரிதாகும்.

தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச்சு னையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே [69]

பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துச்
செண்பகமாய் நிற்குடம் திருவுடையேன் ஆவேனே [70]

எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலையில்
தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே [71]

வெறியார் தண்சோலைத் திருவேங் கடமலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையே னாவேனே [72]

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன் பவளவாய் காண்பேனே [73]

இந்தப் பெருமாள் திருமொழியினை நன்கு மனத்திற் பதித்துக் கொண்ட பிற்காலப் புலவரான வீரராகவ முதலியார் தாம் இயற்றிய திருவேங்கடக் கலம்பகத்தில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

மாடாக நிழற்றுசெழு மரனாகத் தவச்சிறிய
பீடாகக் குழைத்தநறும் புதலாக வழிப்படுவேன்
ஓடாகப் பெறுவமெனில் உயிர்காணற் கதிபெறலாம்
வீடாகத் திருநெடுமால் வீற்றிருக்கும் வேங்கடத்தே. [74]

இவ்வாறு கவிஞர் பலரும், அருளாளர் பலரும் பாடிய வேங்கட நெடுவரையைக் கருத்திற்கொண்டே அம்மலைமுகடு நோக்கிச் செல்லும் மேகக் கூட்டங்களை விளித்து ஆண்டாள் வேங்கடத்தானிடம் தூது செல்லுமாறு கேட்டுப் பாடுகிறார்; அப் பாடற் கருத்துகள் வருமாறு:

"மேகங்களே! விண்ணிற்கு மேலாப்பு விரித்தாற்போல் வான வீதியிற் செல்லும் வனப்புடைய மேகங்களே! உங்களோடு வேங்கடத்து எம்பெருமானும் வந்தானோ! என் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி முலைத்தடத்தின் வழியே இழிகின்றது. பெண்ணின் பெருமையைப் பீடழிக்கும் நிலை அவனுக்குப் பெருமை சேர்க்காதே" என்று குறிப்பிடுகின்றார்.

விண்ணீல மேலாப்பு
விரித்தாற்போல் மேகங்காள்,
தெண்ணீர்பாய் வேங்கடத்தென்
திருமாலும் போந்தானே?
கண்ணீர்கள் முலைக்குவட்டில்
துளிசோரச் சோர்வேனை,
பெண்ணீர்மை யீடழிக்கும்
இதுதமக்கோர் பெருமையே? [75]

மேலும் கோதையார் தொடர்கிறார். "மாமுகில்களே! வேங்கடவன் மாட்டு யான் கொண்ட காமத்தீ என்னுள்ளே புகுந்து என்னை அலைக்கழித்து வாட்டுகின்றது. இந்நிலையில் நள்ளிரவில் என் நோயை நலிவிக்கும் தென்றலுக்கு இலக்காகித் தவிக்கிறேன். அத்தென்றற்காற்று என் காமத்தீயிற்குத் துணை போய் என் அளவுபடாத நோயை மேலும் மிகுவிக்கின்றதே! என் செய்வேன்?" என அரற்றுகின்றார் ஆண்டாள் பிராட்டியார்.

மாமுத்த நிதிசொரியும்
மாமுகில்காள், வேங்கடத்துச்
சாமத்தின் நிறங்கொண்ட
தாடாளன் வார்த்தையென்னே!
காமத்தீ யுள்புகுந்து
கதுவப்பட்டு இடைக்கங்குல்,
ஏமத்தோர் தென்றலுக்கிங்
கிலக்கா நா னிருப்பேனே 76

இத்துன்பத்திலிருந்து விடுபட ஒரு வழி இருப்பதை எண்ணி மகிழ்கிறார் அவர். என் துன்பம் கையிகந்து பெருகினால் வேங்கடத்துறை எம்மானாம் கோவிந்தனின் குணம்பாடி என் உயிரைக் காத்து நிற்பேன் என்கிறார்.

ஒளிவண்ணம் வளைசிந்தை
உறக்கத்தோ டிவையெல்லாம்,
எளிமையா லிட்டென்னை
ஈடழியப் போயினவால்,
குளிரருவி வேங்கடத்தென்
கோவிந்தன் குணம்பாடி,
அளியத்த மேகங்காள்!
ஆவிகாத் திருப்பேனே. 77

என்னதான் தம்மைத் தேற்றிக் கொண்டாலும் ஆற்றாமை மீதூரத்தானே செய்யும். எனவே கூறுகிறார்; என் மார்பகங்கள் அவரைப் புல்லுதற்கு விரும்புகின்றன; எனவே இவ்வென் விழைவையாவது அவரிடத்தே போய் அறிவியுங்கள் என்கிறார்.

மின்னாகத் தெழுகின்ற
மேகங்காள்! வேங்கடத்துத்
தன்னாகத் திருமங்கை
தங்கியசீர் மார்பற்கு,
என்னாகத் திளங்கொங்கை
விரும்பித்தாம் நாடோறும்
பொன்னாகம் புல்குதற்கென்
புரிவுடைமை செப்புமினே 78

வானை நோக்கித் திரண்டெழுந்து செல்லும் மேகங்களே! வேங்கடத்தில் தேன்நிறைந்த மலர்கள் சிதறும் வண்ணம் மழை பொழிவீர்கள். வேங்கடவனோ தன்னுடைய கூர்மையான நகங் கொண்டு இரணியன் உடலத்தைக் கிழித்து அடியவர்க்கு அருள் சுரந்தான். ஆயினும் என்பால் அவனுக்கு அன்போ அருளோ இல்லை. என்னிடமிருந்து பெற்றுக் கொண்ட வளைகளை மீண்டும் என்கைகளிற் பொருந்தத் தர வேண்டும் என்கிறார்.

வான்கொண்டு கிளர்ந்தெழுந்த
மாமுகில்காள்! வேங்கடத்துத்
தேன்கொண்ட மலர்சிதறத்
திரண்டேறிப் பொழிவீர்காள்,
ஊன்கொண்ட வள்ளுகிரால்
இரணியனை யுடலிடந்தான்,
தான்கொண்ட சரிவளைகள்
தருமாகில் சாற்றுமினே. 79

ஓர் அழகிய உவமை வாயிலாகவும் தம் நிலைமையைச் சாற்று கின்றார் கோதையார். விளாம்பழம் வெளியிற் காண்பதற்கு அழகாகவே தோற்றமளிக்கும்; ஆனால் உடைத்துப் பார்த்தால் தான் உள்ளீடு ஒன்றுமில்லாதது தெரியும். 'வேழம் உண்ட விளங்கனி' என்றும் கூறப்படும். அவ்வாறு பெயரளவிற்கு வாழும் என் காதல் நோயினை நாரணற்குத் தெரிவியுங்கள் "என்கிறார் ஆண்டாள்.

சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த
தண்முகில்காள்! மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே
நிரந்தேறிப் பொழிவீர்காள்,
உலங்குண்ட விளங்கனிபோல்
உள்மெலியப் புகுந்து, என்னை
நலங்கொண்ட நாரணற்கென்
நடலைநோய் செப்புமினே 80

எல்லோருக்கும் கதியாக வரம் தந்து வாழ்வளிக்கும் வள்ளலாக விளங்குகிறான் வேங்கடத்து எம்பெருமான். அத் தகையவன் ஒரு பெண்கொடி (பெரியாழ்வார் பெற்ற பெண்

கொடி) யாம் ஆண்டாளை வதை செய்தார் என்னும் சொல் எழுமானால் அதனை உலகத்தார் எவ்வாறு மதிப்பரோ அறியேன் என்கிறார் ஆண்டாள்.

மதயானை போலெழுந்த
மாமுகில்காள், வேங்கடத்தைப்
பதியாக வாழ்வீர்காள்!
பாம்பணையான் வார்த்தையென்னே,
கதியென்றும் தானாவான்
கருதாது, ஓர் பெண்கொடியை
வதைசெய்தான்! என்னும்சொல்
வையகத்தார் மதியாரே. 81

ஆண்டாள் ஆண்டவன் அர்ச்சையாய் அமர்ந்திருக்கும் தலங்கள் பலவற்றுள்ளும் திருமாலிருஞ்சோலை, திருவேங்கடம், திருவரங்கம் ஆகிய மூன்று பதிகளையே பாடினார் என்பர். அவற்றுள் முதலாவதாகத் திருமாலிருஞ்சோலை உறை சுந்தரனைப் பாடிய திறத்தினை முன்னரே உணர்ந்தோம். "சிந்துரச் செம்பொடி" எனத் தொடங்கும் ஒன்பதாம் பத்து, திருமாலிருஞ் சோலை எம்பெருமானை வழிபடும் போக்கில் அமைந்திருக்கக் காணலாம். மலைத்தலங்கள் என்றாலே ஆண்டு இயற்கை களி நடம் புரிவது இயற்கை. முருகன் அல்லது அழகைக் குன்று தோறும் ஆடிவரும் குமர வடிவேலனாகக் கண்டனர் பழந்தமிழர். அறுமுகவொருவனின் திருவருளைப் பரவிப் பாடிய அருணகிரி யாரும் " பலகுன்றிலும் அமர்ந்த பெருமாளே " என்றே பாடிப் பரவினார். அம்முறையில் திருமாலிருஞ்சோலை காண்போர் கண்ணுக்குக் குளிர்ச்சியையும் அகமகிழ்வையும் ஒருங்கே தருவ தாகும். சிந்துரச் செம்பொடியினை எங்கும் தூவி இறைத்தது போன்று இந்திரகோபப் பூச்சிகள் எங்கும் பரவிப் பறக்கின்றன. முல்லைக்கொடிகள் பூத்துக்குலுங்கித் தம் வெண்மலரால் ஒளிநகை புரிகின்றன. கருவிளை மலர்களும், காயாம்பூக்களும் எங்கும் பரந்து பரவசக் காட்சி வழங்குகின்றன.

ஆனால் வேங்கடத்தே வாழும் குயில்களும், மயில்களும், கருவிளை மலர்களும், களங்கனிகளும், காயாம்பூக்களும் ஐம்பெரும் பாதகர்களாகின்றன. இறையோடு நம்மைச் சேரவொட்டாது

தடுக்கும் ஐம்புலன்களைப் போல இவை பாதகஞ்செய்து நிற்கின்றன. திருமாலிருஞ்சோலை எம்பெருமானின் திருமுகங் களுக்கு இவை ஈடாகுமா? என்கிறார் ஆண்டாள்.

பைம்பொழில் வாழ்குயில்காள்!
மயில்காள்! ஒண் கருவிளைகாள்!
வம்பக் களங்கனிகாள்!
வண்ணப்பூவை நறுமலர்காள்,
ஐம்பெரும் பாதகர்காள்!
அணிமாலிருஞ் சோலைநின்ற,
எம்பெரு மானுடைய
நிறமுங்களுக் கென்செய்வதே? 82

"திருமாலின் திருவுருப்போலும் மலர்மேல் மதுவுண்டு கிடக்கும் வண்டினங்கள் காட்சி வழங்குகின்றன. அத்தகைய வண்டினங்களே! பூஞ்சுனைகளே! அப்பூஞ்சுனைகளில் மலர்ந்து மணம்வீசிக் கொண்டிருக்கும் செந்தாமரை மலர்களே! எனக்கு உய்யும் வழி ஒன்று காட்டுவீர்களாக!'' என்று கைகடந்து சென்று நிற்கும் ஆற்றாமை மீதூர ஆண்டாள் பாடுகிறார்.

துங்க மலர்ப்பொழில்சூழ்
திருமாலிருஞ் சோலைநின்ற,
செங்கட் கருமுகிலின்
திருவுருப் போல், மலர்மேல்
தொங்கிய வண்டினங்காள்!
தொகுபூஞ்சுனை காள்! சுனையில்
தங்குசெந் தாமரைகாள்!
எனக்கோர் சரண் சாற்றுமினே 83

ஒருவரை வயப்படுத்துவதற்குச் சாம, பேத, தான, தண்டம் எனும் நான்கு முறைகளில் ஒன்றைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பர். இங்குத் தானமுறையைக் - கொடை முறையைக் - கைப் பிடிக்க முனைகிறார் ஆண்டாள்.

"மணமிக்க மலர்ச்சோலைகள் நிறைந்த திருமாலிருஞ்சோலை இறைவற்கு நான் நூறு தடாக்களில் அவன் விரும்பியுண்ணும் வெண்ணெயைப் பரப்பி வைத்தேன். மேலும் நூறு தடாக்களில்

அவன் மகிழ்ந்து சாப்பிடும் அக்கார வடிசிலை வட்டித்து வைத்தேன். திரு நிறைந்த அத்திருவாளன் - அம்மணவாளன் - இன்று இங்கு வந்து இவற்றை ஏற்றுக் கொள்ளுவாரோ?'' என்று அங்கார்ந்த எதிர்பார்ப்புடன் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியார் வாய்அரற்றி நிற்கிறார்.

நாறு நறும்பொழில்மா
 லிருஞ்சோலை நம்பிக்கு, நான்
நூறு தடாவில்வெண்ணெய்
 வாய்நேர்ந்து பராவிவைத்தேன்,
நூறு தடாநிறைந்த
 அக்கார வடிசில்சொன்னேன்,
ஏறு திருவுடையான்
 இன்றுவந்திவை கொள்ளுங்கொலோ ! 84

திருமாலிருஞ்சோலையப்பன் இன்று இங்கு வந்து இத்தனையும் அமுது செய்து அருளினால் நான் ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னாளிலும் வழங்குவேன். அவன் என் மனத்தே வந்து நேர்ப்பட்டு உறைய வேண்டும் என்கிறார் ஆண்டாள்.

இன்றுவந் தித்த னையும்
 அமுதுசெய் திடப்பெறில், நான்
ஒன்றுநூ றாயிரமாக்
 கொடுத்துப்பின் னாளும்செய்வன்,
தென்றல் மணங்கமழும்
 திருமாலிருஞ் சோலைதன்னுள்
நின்றபிரான், அடியேன்
 மனத்தேவந்து நேர்படிலே85

காலையிலிருந்தே கரிய குருவிக் கூட்டங்கள் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. அவை திருமாலின் வரவைக் கட்டியங்கூறிச் சொல்லி நிற்கின்றன. 'சோலை மலைப்பெருமான், துவராபதி யெம்பெருமான், ஆலினிலைப் பெருமான்' வருவான் என்னும் வார்த்தையினையே அவை தொடர்ந்து ஒலித்துக்கொண்டிருக்கின்றன.

கோங்கலரும் சோலைகள் நிறைந்த திருமாலிருஞ்சோலையில் கொன்றைமலர்கள் மாலைகளாய்த் தொங்குகின்றன. அவற்றோடு

உடனாய் நின்று நானும் தொங்குகிறேன். எம்பெருமான் வாயினின் றும் ஒலியெழுப்பும் சங்கும், கையிலிருந்து ஒலியெழுப்பும் வில்லும் எப்பொழுது என்னை வந்து ஆட்கொள்ளும் என்கிறார் ஆண்டாள்? அதாவது சங்கு சக்கராயுதங்களுடன் எம்பெருமான் எளியவள்பால் அருள்நோக்கம் செலுத்துவது எக்காலம் என ஏக்கமுறுகிறார் அவர்.

கோங்கல ரும்பொழில்மா
 லிருஞ்சோலையில் கொன்றைகள்மேல்
தூங்குபொன் மாலைகளோ
 டுடனாய்நின்று தூங்குகின்றேன்,
பூங்கொள் திருமுகத்து
 மடுத்தூதிய சங்கொலியும்,
சார்ங்கவில் நாணொலியும்
 தலைப்பெய்வதெஞ் ஞான்றுகொலோ? [86]

அடுத்து, ஆண்டாளின் பார்வை ஆண்டு மலர்ந்திருக்கும் கார்க்கோடல் பூக்கள்பாற் செல்லுகின்றது. துன்பக்கடலில் அமிழ்ந்து நிற்பவர் ஒரு சிறு துரும்பு கைக்குக் கிடைத்தாலும் அதனைப் பற்றிக் கரையேற வேண்டுமென்று விரும்புவார் களன்றோ? அம்முறையில் கார்க்கோடல் பூக்களைப், பார்க்கிறார். "கார்க்கோடல் பூக்களே! கண்ணன் என்மேல் உங்களைப் போர் செய்யுமாறு பணித்துவிட்டு எங்குப் போய்விட்டான்? அந்தப் பாம்பணையான் படுத்திருக்கும் பாம்புக்கு இரண்டு நாக்குகள் இருப்பதுபோல் அவனுக்கும் இரட்டை நாக்குதான்" என்கிறார், சொன்ன சொல்லை மறந்து விடுவது என்றபடி.

கார்க்கோடல் பூக்காள்! கார்க்கடல்
 வண்ணனென் மேல் உம்மைப்
போர்க்கோலம் செய்து போர
 விடுத்தவன் எங்குற்றான்? [87]

பாவியேன் தோன்றிப் பாம்பணை
 யார்க்கும்தம் பாம்புபோல்
நாவு மிரண்டுள வாய்த்து
 நாணிலி யேனுக்கே [88]

"முல்லைப் பிராட்டியே! நீ உன் முறுவலால் எங்கட்கு அல்லல் விளைவிக்காதே! நாங்கள் உன் அடைக்கலம்; சூர்ப்பணகையை

மூக்கரிந்தவர் சொல்லும் பொய்த்துவிடுமேயானால் நான் பிறந்தது கூடப் பொய்யேயாகிவிடும்.

முல்லைப் பிராட்டி! நீயுன்
முறுவல்கள் கொண்டு, எம்மை
அல்லல் விளைவியே லாழிநங்
காய்! உன்ன டைக்கலம்,
கொல்லை யரக்கியை மூக்கரிந்
திட்ட குமரனார்
சொல்லும் பொய்யானால், நானும்
பிறந்தமை பொய்யன்றே.[89]

ஒல்லையூர்கிழான் மகன் பெருஞ்சாத்தான் என்பவன் சங்க காலத்தே வாழ்ந்த வள்ளல்களில் ஒருவன். அவன் இரப்போர்க்கு இல்லையென்னாது வழங்கியவன். அவன் இறந்த பிறகு அவன் ஊருக்குச் சென்றார் குடவாயிற்கீரத்தனார் என்னும் புலவர். முல்லை மலர்கள் பூத்துக் குலுங்குவதைக் கண்டார். அவர் மனம் பொறுக்கவில்லை.

வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே[90]

என்று பாடினார். இம்முறையில் நம் ஆண்டாள்பிராட்டியாரும் பாடும் குயில்களைப் பார்க்கிறார். "பாடுங் குயில்களே! நல்வேங் கடம் உறையும் நம் நாதனார் நமக்கொரு வாழ்வு தந்தால் நீங்கள் பாடுங்கள். கருடக்கொடியைக் கையிலேயுடைய கருணை வள்ளலாம் கண்ணனார் வந்து அருள்செய்து என்னைக் கூடிடுவ ரேயானால் நீங்கள் பாட்டுக்களைக் கூவி மிழற்றுங்கள். நான் அவற்றை விருப்புற்றுக் கேட்கிறேன்' என்கிறார் கோதையார்.

பாடும் குயில்காள்! ஈதென்ன
பாடல், நல் வேங்கட
நாடர் நமக்கொரு வாழ்வுதந்
தால்வந்து பாடுமின்,
ஆடும் கருளக் கொடியுடை
யார்வந் தருள்செய்து,
கூடுவ ராயிடில் கூவிநும்
பாட்டுகள் கேட்டுமே. [91]

அடுத்து மயில்களை விளித்துப் பேசத் தொடங்குகிறார். ''கூட்டங்கூட்டமாய் நடமாடும் மயில்களே! நீங்கள் கண்ணபிரான் போன்று நடனஞ்செய்கின்றீர்கள். பாம்பணையில் பலகாலமும் பள்ளி கொண்டிருக்கின்ற மணமானவர் நம்மை வைத்திருக்கும் நிலைமையைக் காண்பீராக''. ''ஏ மயில்களே! உங்கள் நடமாட் டத்தை இனிக் காணும் பேறு எனக்கு வாய்க்காது. என் நெஞ்சங் கவர்ந்து என் உடையினையும் பிற செல்வங்களையும் கவர்ந்து கொண்ட கோவிந்தன் என்னளவில் செங்கோலோச்சும் நல் லிறைவன் எனப் படமாட்டாது''.

''ஏ மழையே! வேங்கடத்துள் நல் ஊற்றெடுக்க மழையாய்ப் பொழியும் மழையே! என் நெஞ்சில் வேங்கடத்தழகனார் சூடிக் கொண்டார். நான் அவரை அணைக்கும் வண்ணம் அவரோடு என்னை நெருக்குவித்து அதன்பின் பொழியவல்லாயோ நீ''.

''ஓ கடலே! தனக்குப் படுக்கையிடமாக வாய்ந்த உன்னை மந்தர மலையிட்டுக் கடைந்து கலக்கி, உன் உடலிலே புகுந் திருந்து சாரமான அமுதத்தைக் கொண்டவராய், என் உடலிலும் புகுந்திருந்து என் உயிரை அறுக்குமவருமான எம்பெருமானுக்கு விண்ணப்பிக்கும் போக்கில் என் துக்கங்களையெல்லாம் அவர் படுக்கையாக விளங்கும் அனந்தாழ்வானிடத்தில் நீ போய்ச் சொல்லுவாயா?''

இவ்வாறெல்லாம் கார்க்கோடல் பூக்களையும், முல்லை மலர்க ளையும், குயில்களையும், மயில்களையும், மழையையும், கடலையும் நோக்கிக் 'காமமிக்க கழிபடர் கிளவி' களாகக் கோதை உரைக்கும் தமிழ் கோதில் தமிழ் என்பது பின்வரும் இரண்டு பாடல்களால் தெளிவுறும்.

மழையே! மழையே! மண்புறம்
 பூசியுள் ளாய்நின்ற,
மெழுகூற்றி னாற்போல் ஊற்றுநல்
 வேங்கடத் துள்நின்ற,
அழகப் பிரானார் தம்மையென்
 நெஞ்சத் தகப்படத்
தழுவிநின்று, என்னைத் ததர்த்திக்கொண்
 டூற்றவும் வல்லையே? [92]

கடலே! கடலே! உன்னைக்
கடைந்து கலக்குறுத்து,
உடலுள் புகுந்துநின் றூறல்
அறுத்தவற்கு, என்னையும்
உடலுள் புகுந்துநின் றூறல்
அறுக்கின்ற மாயற்குஎன்
நடலைக ளெல்லாம் நாகணைக்
கேசென்று ரைத்தியே [39]

நள்ளிரவிலும் ஒலிக்கும் கடலைநோக்கிச் சங்க காலத் தலைவி யொருத்தி வினவுவதாக அமைந்திருக்கும் குறுந்தொகைப் பாடலொன்று ஈண்டு ,ஒப்புநோக்கி மகிழ்தற்குரியது.

யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
வெள்வீத் தாழை திரையலை
நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே [94]

ஆண்டாள் முதலில் திருமாலிருஞ்சோலை மலையானைப் பாடினார்; பின் திருவேங்கடமலையானைப் பாடினார். அத்திருத் தலத்துறை திருமாலழகரும், திருவேங்கடநாதரும் அருள்பாவித் தார்களில்லை. எனவே அவர்தம் நெஞ்சத்தினைப் பெரிதும் பிணித்துக் கவர்ந்த திருவரங்கத்துறை அம்மானைக் காணும் கருத்துடையவராகிறார் கோதையார். திருவரங்கத்துச் செல்வனைக் காமுறும் முறையில் பாடல்களை உவந்து உவந்து பாடுகின்றார். திருவரங்கத்தமுதனாரைப் பாடும் பொழுது அவர் உள்ளம் நெகிழ்ந்து இன்புறுகின்றது; உணர்ச்சிகள் கொப்புளித்து வருகின்றன. எனவே உணர்ச்சியலைகள் உந்தித் தந்த பாடல்களைப் பாடி நிற்கிறார்.

“நல்ல அணிகலன்களை அணிந்துள்ள நங்கைமீரே! நான் மகிழ்ந்து தரித்துக் கொண்டிருக்கிற என் கையில் வளைகள், அவர் உகந்து தரித்துக் கொண்டிருக்கிற தன் கையில் சங்கோடு ஒப்புமைப்படாவோ! பாம்பணைமேல் பள்ளிகொண்டு வாழும்

அரங்கநாதன் எளியேனாகிய என் முகத்தை இரக்கத்தோடு நோக்குகின்றாரில்லை. ஐயோ! அந்தோ! அந்தோ'' என்று அரற்றுகின்றார் ஆண்டாள்.

> தாமுகக்கும் தம்கையில் சங்கமே போலாவோ,
> யாமுகக்கு மெங்கையில் சங்கமு மேந்திழையீர்!
> தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்,
> ஆமுகத்தை நோக்காரால் அம்மனே! அம்மனே! 95

வாய் அள்ளூறித் தித்திக்கத் தித்திக்கத் திருவரங்கனைப் புகழ்ந்து பேசுகிறார் திருப்பாவை அருளிய செல்வியார். அவர் அரங்கத்து இன்னமுதராம்; குழலழகராம்; வாயழகராம்; கண்ணழகனார்; தாமரைப் பூவழகராம்; ஆனாலும் 'கழல்வளை' என்று இடுகுறியாற் பெயர் பெற்ற கைவளையை அவர் 'கழன்றொழிகிறவளை' என்று காரணப்பெயர் பெற்ற வளையாக ஆக்கிக் காட்டிவிட்டாராம். ஆற்றாமை மீதூரப் பொங்கிப் பொங்கியெழும் சோகத்தில் மீறிட்டுக் கிளம்புகிறது பாடல்.

> எழிலுடைய வம்மனைமீர்! என்னரங்கத் தின்னமுதர்,
> குழலழகர் வாயழகர் கண்ணழகர், கொப்பூழில்
> எழுகமலப் பூவழக ரெம்மானார், என்னுடைய
> கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே 96

இராமன் முடிபுனைவதற்கு முன் கைகேயி ஏவல்வழி அவளைக் காணச் செல்கிறான். அவனைத் தேரோடும் தெருவிற் கண்ட நிற்கும் திரளான மங்கையர், "இராமன் செங்கோலன் என்கிறார்கள்; ஆனால் எங்களைப் பொறுத்தவரையில் அவன் கடுங்கோலனே. காரணம், எங்கள் காதலை ஏற்று எங்கள் துன்பத்தைப் போக்கும் அருளுடைமை அவன்பால் அமைந்திருக்கவில்லை என்று கூறுவதாக நயம் மிக்கதோர் பாடலைக் கம்பநாடார் அமைத்துள்ளார். அப்பாடல் வருமாறு:

> அங்கண னவனி காத்தற் காமிவ னென்ன லாமோ
> நங்கணன் பிலனென் றுள்ளந் தள்ளுற நடுங்கி நைவார்
> செங்கணுங் கரிய கோல மேனியுந் தேரு மாகி
> எங்கணுந் தோன்று கின்றார் எவரோ விராம னென்பார் 97

இதே போக்கில் ஆண்டாளும் நயம்படக் கிளத்தல் என்னும் விரகமைத்துச் சில பாடல்களைப் பதினோராம் பத்திற் பாடியுள்ளார். அவர்தம் விழுமிய கற்பனையினையும் குழந்தைத் தனமான பேச்சினையும் இப்பத்திற் கண்டின்புறலாம்.

"அலையெறியும் கடல்சூழ்ந்த இம்மண்ணுலகையும் பாகவதர்களுக்கு மாறா மகிழ்ச்சி நல்கும் பரமபதத்தையும் சிறிதும் குறைவு வராதபடி நிர்வாகஞ் செய்துகொண்டு போகிற எம்பெருமான் செங்கோல் செலுத்தலில் வல்லவராய்த் திகழ்ந்தும், அத்திருவரங்கனார் போயும் போயும் என் கைவளைகளாலே தம் குறைகளெல்லாந் தீர்ந்து நிறைவு பெறுவரென்றால் – என் வளைகளைக் கொள்ளை கொண்டு அவர் நிறைவு பெறுவரென்றால் – அவ்வாறு பெற்றுவிட்டுப் போவாராக".

> பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்,
> அங்காதுஞ் சோராமே யாள்கின்ற வெம்பெருமான்,
> செங்கோ லுடைய திருவரங்கச் செல்வனார்,
> எங்கோல் வளையா லிடர்தீர்வ ராகாதே![98]

அடுத்த பாடல் மேலும் நயமுடைத்தாய்த் துலங்குகின்றது.

"மேல்தளங்களாலே அழகு செய்யப்பட்ட மாடங்களையும் மதில்களையுமுடைய திருவரங்கத்திலே எழுந்தருளியிருப்பவராய், முன்பு வாமனாவதாரம் மேற்கொண்டவராய், பெரிய பெருமாளாய், மாவலிச் சக்கரவர்த்தியிடம் கேட்ட பிச்சையிலே குறை ஏற்பட்டு, அக்குறையைத் தீர்த்துக் கொள்வதற்காக, என் கைகளில் அணியப் பெற்றிருக்கிற வளைகள் மேல் விருப்பமுடையவரானால், இத்தெருவழியாக எழுந்தருளி, என் வளைகளைக் கைக்கொண்டு, அக்குறையினை முடித்துக் கொள்ள மாட்டாரோ".

> மச்சணி மாட மதிளரங்கர் வாமனனார்,
> பச்சைப் பசுந்தேவர் தாம்பண்டு நீரேற்ற,
> பிச்சைக் குறையாகி யென்னுடைய பெய்வளைமேல்,
> இச்சை யுடையரே லித்தெருவே போதாரே?[99]

> நல்லார்கள் வாழும் நளிரரங்க நாதனையான்
> இல்லாதோம் கைப்பொருளு மெய்துவா னொத்துளனே[100]

என்ற அடிகளில் சிலேடை நயம் அமைத்துப் பாடுகிறார் ஆண்டாள்.

என் கைம்முதலான பொருள்களைக் கொள்ளை கொள்ளும் நோக்கில் திருவரங்கனார் திகழ்கின்றார் என்னும் கருத்துப் புலப்படக் காண்க.

காவிரிபுரக்கும் திருவரங்கத்துச் செல்வனார் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்கின்றார். ஒருவர்க்கும் கைப்படாமல் நான்கு வேதங்களிலுள்ள சொற்களுக்கும் பொருளாய் நிற்பவருமான பெரிய பெருமாள், ஏற்கெனவே என் கையிலுள்ள பொருள்களையெல்லாம் கொள்ளை கொண்டவராக இருக்க, இப்போது என் உடம்பாகிற பொருளையும் கொள்ளை கொண்டு விட்டார் என்கிறார் ஆண்டாள்.

> கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார், காவிரிநீர்
> செய்ப்புரள வோடும் திருவரங்கச் செல்வனார்,
> எப்பொருட்கும் நின்றார்க்கு மெய்தாது, நான்மறையின்
> சொற்பொருளாய் நின்றாரென் மெய்ப்பொருளும்
> கொண்டாரே [101]

இவ்வாறு தன் கள்ளமில்லாக்காதலை வெளிப்படுத்தும் பாங்கில் பளீரிடும் பாவையின் பாடல்களில் குற்றமொன்றில்லாக் கோதில் தீர் தமிழ் துலங்கக் காணலாம்.

இவ்வாறு இரவும் பகலும் எம்பெருமான்தன் நினைவன்றி வேறொன்றும் இல்லாத கோதையார் இராப்போதில் ஒரு சிறிது கண்ணயரக் கனாவொன்று காணுகின்றார். எண்ணத்தின் திண்ணிய நிலையில் கனவு வெளிப்படுதல் இயல்பேயன்றோ! அவ்வகையில் இனிய கனவுக் காட்சிகள் அவர் உள்ளத்திரையில் விரிகின்றன. அக்காட்சிகளைக் கவின்மிகு ஓவியங்களாக்கு கின்றார் கோதையார். கோதை கண்ட கனவு கோவிந்தனை மணக்கும் கனவன்றோ! எனவே ஆய்ந்தெடுத்த சொற்களில், அழகுக் குவியலாய்த் தோற்றம் தரும் அக்கவிஞர் கவிதை, காலம் கடந்தும் கால வெள்ளத்தில் அழியாத அமரத் தன்மை வாய்ந்த பாடல்களாகத் திகழ்கின்றன. 'வாரணமாயிரம்' எனத் தொடங்கும் அவ் ஆறாந்திருமொழி அழகுக் கவிதை ஊற்று எனலாம்; சந்தமார் கவிதைகளின் சாரமெனலாம்; குற்றமில்லாக் கவிதைகளின் கொலுவெனலாம்; சுருங்கச் சொன்னால் ஏது உயர் கவிதை எனக்

கேட்டால், இதுவே உயர்கவிதை எனக் காட்டக் கூடிய தகுதியும் கீர்த்தியும் வாய்ந்த கவிதை எனலாம். மேலும் கோதையார் தாம் கண்ட கனவிலே நாராயணன் நம்பியைக் கைப்பிடித்ததாகக் கழறுகிறார். அக்காலத் திருமண முறையையும் ஒருங்கே ஒழுங்காகக் குறிப்பிடும் போக்கில் இப்பாடல்கள் அமைந்திருக்கக் காணலாம்.

உயிர்த்தோழி ஒருத்தியிடம் தான் கண்ட கனவினை ஆண்டாள் உரைக்கும் போக்கில் ஆறாந் திருமொழி அமைந்துள்ளது.

"என் உயிர்த்தோழியே ! ஆண் குலத்தினில் உயர்ந்த குணங்கள் கொண்டவனான நம்பியாம் நாராயணன், ஆயிரம் யானைகள் சூழ்ந்துவர, வலமாக நடக்கின்றான் என்று எதிரே பொன்னாலான பூரண கும்பங்களை வைத்துப் பட்டணம் முழுவதும் தோரணங்கள் கட்டியிருக்க நான் கனாக் கண்டேன்."

வாரண மாயிரம் சூழவ லம்செய்து
நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிர்,
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்,
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீநான் [102]

"தோழியே! நாளைக்குத் திருமணம் என்று உறுதிசெய்து, பாளைகளோடு கூடின பாக்கு மரங்களாகிய அலங்காரங்களை யுடைய மணப்பந்தலின் கீழே, நரசிம்மனென்றும், மாதவனென்றும் கோவிந்தனென்றும் திருப்பெயர்கள் பூண்ட ஒரு காளையானவன் உள்ளே நுழைய நான் கனாக் கண்டேன்".

நாளைவ துவைம ணமென்று நாளிட்டு,
பாளைக முகுப ரிசுடைப் பந்தற்கீழ்,
கோளரி மாதவன் கோவிந்த னென்பான், ஓர்
காளைபு குதக்க னாக்கண்டேன் தோழீநான் [103]

"தோழீ! இந்திரன் முதலான தேவர்களெல்லாம் இம் மண்ணுலகத்திற்கு இழிந்து வந்து, என்னைத் திருமணப் பெண் என்று குறிப்பிட்டு ஒரு வார்த்தை சொல்லி, அதற்குமேல் சம்பந்திகள் ஒருவர்க்கொருவர் செய்து கொள்ள வேண்டிய ஏற்பாடுகள் தொடர்பாக யோசித்து முடிவு செய்து கொண்டு, துர்க்கை என்கிற நாத்தனார் எனக்குத் திருமணக் கோடிப்

புடவையை உடுத்தி, மணம் மிக்க மலர்களையும் சூட்டிவிட நான் கனவு கண்டேன்''.

இந்திர னுள்ளிட்ட தேவர்கு ழாமெல்லாம்,
வந்திருந் தென்னைம கட்பேசி மந்திரித்து,
மந்திரக் கோடியு டுத்திம ணமாலை,
அந்தரி சூட்டக்க னாக்கண்டேன் தோழீநான் 104

''தோழீ! சிற்றேவல் செய்யும் பிராமணச் சிறுவர்கள் நான்கு திசைகளிலுமிருந்து தீர்த்தங்களைக் கொண்டுவந்து நன்றாகத் தெளித்து, ஒலிக்கக் கூறி, மங்களா சாசனமும் செய்து, மலர்கள் பல புனைந்த மாலையையுடையனாய்ப் பரம புண்ணியனான கண்ணபிரானோடு என்னை ஒன்று சேர்த்துக் கங்கணங்கட்ட நான் கனவு கண்டேன்''.

நாற்றிசைத் தீர்த்தங்கொ ணர்ந்துந னிநல்கி,
பார்ப்பனச் சிட்டர்கள் பல்லாரெ டுத்தேத்தி,
பூப்புனை கண்ணிப்பு னிதனோ டென்றன்னை,
காப்புநாண் கட்டக் கனாக்கண்டேன் தோழீநான் 105

''தோழீ! அழகிய இளம் பெண்கள் கதிரவனுடைய ஒளியினை நிகர்த்த மங்கல தீபத்தையும், பொற்கலசங்களையும் கையில் ஏந்திக் கொண்டு எதிர் கொண்டுவர, வடமதுரை அரசர்பிரானாம் கண்ணன் பாதுகைகளைச் சாத்திக் கொண்டு, தரைநிலம் அதிரும் படியாக எழுந்தருளக் கனாக் கண்டேன் நான்''.

கதிரொளி தீபம்க லசமு டனேந்தி,
சதிரிள மங்கையர் தாம்வந்தெ திர்கொள்ள,
மதுரையார் மன்னன டிநிலை தொட்டு, எங்கும்
அதிரப்பு குதக்க னாக்கண்டேன் தோழீநான் 106

''தோழீ! மத்தளங்கள் முழங்கவும், இரேகைகள் பொருந்திய உத்தம வலம்புரிச் சங்குகளை ஊதவும், மைத்துனன் முறையை யுடையவனாய் நின்றிலங்கும் கண்ணபிரான், முத்துக்களையுடைய மாலைத்திரள்கள் தொங்கவிடப்பெற்ற பந்தலின் கீழே வந்து' என்கையினைப் பற்றி நிற்க நான் கனாக் கண்டேன்''

மத்தளம் கொட்டவ ரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமநி ரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பிம துசூதன் வந்து, என்னைக்
கைத்தலம் பற்றக்க னாக்கண்டேன் தோழீநான் 107

''தோழீ! நல்லபடி மறைகளை ஓதும் வைதிகச் செல்வர்கள் சிறந்த மறைத்தொடர்களை உச்சரிக்க, அந்தந்தக் கிரியைகளுக்கு இசைந்த மந்திரங்களைக் கொண்டு, பசுமை தங்கிய இலைகளை யுடைத்தான நாணற்புல்லைப் படுக்க வைத்து, சமித்துகளை இட்டு, ஆண்யானை போன்ற செருக்குடைய வீரனாம் கண்ணபிரான் என் கையைப் பிடித்துக் கொண்டு நெருப்பைச் சுற்றிவர நான் கனவு கண்டேன்''.

வாய்நல்லார் நல்லம றையோதி மந்திரத்தால்
பாசிலை நாணல்ப டுத்துப் பரிதிவைத்து,
காய்சின மாகளி றன்னானென் கைப்பற்றி,
தீவலம் செய்யக் கனாக்கண்டேன் தோழீநான் 108

"ஏ தோழியே! இப்பிறவிக்கும் இனிமேலுள்ள பிறவிகள் எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடாய் இருப்பவனாய், நமக்கு ஆட் செய்பவனாய், எல்லா நற்குணங்களும் இயையப் பெற்றவனாய் உள்ள நாராயணனான கண்ணபிரான், செவ்விய தனது திருக் கையினால் எனது காலைப்பிடித்து அம்மியின்மேல் எடுத்து வைக்க நான் கனவு கண்டேன்''.

இம்மைக்கு மேழேழ்பி றவிக்கும் பற்றாவான்,
நம்மையு டையவன் நாராய ணன்நம்பி,
செம்மையு டையதி ருக்கையால் தாள்பற்றி
அம்மிமி திக்கக்க னாக்கண்டேன் தோழீநான் 109

''தோழீ! அழகிய வில்போன்ற புருவத்தையும் ஒளிபொருந்திய முகத்தையும் உடையவர்களான என் தமையன்மார்கள் வந்து, நெருப்பை நன்றாகக் கொழுந்துவிட்டு எரியச் செய்து, அந்த நெருப்பின் முன்னே என்னை நிறுத்தி, இரணிய வதத்தின் பொருட்டு நரசிம்மனாய் அவதாரம் செய்த கண்ணபிரானுடைய திருக்கையின்மேலே என்னுடைய கையை வைத்துப் பொரிகளை அள்ளிப் பரிமாற நான் கனவு கண்டேன்.''

வரிசிலை வாள்முகத் தென்னைமார் தாம்வந்திட்டு
எரிமுகம் பாரித்தென் னைமுன்னே நிறுத்தி,
அரிமுக னச்சுதன் கைம்மேலென் கைவைத்து,
பொரிமுகந் தட்டக்க னாக்கண்டேன் தோழீநான் 110

"தோழீ! குங்குமக் குழம்பை உடம்பெல்லாம் பூசி, குளிர்ந்த சந்தனத்தை மிக அதிகமாக மேலே தடவி, பீடுடைய களிற்றின் மேலே அக்கண்ணபிரானோடு கூடியிருந்து, திருமண விழாவினைக் கொண்டாடும் பொருட்டு அலங்காரங்கள் திகழ்ந்து தோன்றும் தெருக்களிலே ஊர்வலம் வந்து மணம் மிகுந்த நீரினால் எங்கள் இருவரையும் திருமஞ்சனம் பண்ணுவதாக நான் கனவுகள் கண்டேன்".

குங்கும மப்பிக்கு ளிர்சாந்தம் மட்டித்து,
மங்கல வீதிவ லம்செய்து மணநீர்,
அங்கவ னோடுமு டன்சென்றங் கானைமேல்,
மஞ்சன மாட்டக்க னாக்கண்டேன் தோழீநான் 111

இந்த ஆறாந்திருமொழிப் பாடல்கள் முற்றும் பாடப்பெறாமல் இன்றும் திவ்விய வைணவர் குடும்பங்களில் திருமணம் நடைபெறாது. 'திருப்பூட்டு' என்ற சொல் தாலி கட்டலைக் குறிக்கும். திருப்பூட்டு, சாத்தமுது, அக்காரவடிசில், திருக்கண்ணமுது முதலான நல்ல தமிழ்ச் சொற்கள் அக்குடும்பங்களில்தான் இன்றும் வழங்குகின்றன.

மேலும் இத்திருமொழியினை ஓதுவதால் உண்டாகும் பயனைக் குறிப்பிடும் ஆண்டாள், இத்திருமொழி குறித்துத் தாமே சற்றுச் சிறப்பாகவே சாற்றியிருப்பதாகத் தோற்றுகின்றது.

வேயர் குலத்தவரால் புகழப்பட்டவராய்த் திருவில்லிபுத் தூருக்குத் தலைவரான பெரியாழ்வாருடைய திருமகளாரான ஆண்டாள், தான் கோபாலகிருட்டிணனுக்கு வாழ்க்கைப்பட்டதாகக் கனாக் கண்டபடியைக் குறித்து அருளிச்செய்த தூய தமிழ்த் தொடையலான இப்பத்துப் பாடல்களையும் ஓதவல்லவர்கள் நற்பண்புகள் வாய்ந்த சிறந்த பிள்ளைகளைப் பெற்று மகிழ்வர்.

ஆயனுக் காகத்தான் கண்டக னாவினை,
வேயர்பு கழ்வில்லி புத்தூர்க்கோன் கோதைசொல்,
தூயத மிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்,
வாயுநன் மக்களைப் பெற்றும கிழ்வரே [112]

''நோக்குவ எல்லாம் அவையே போறல்'' என்றோர் தொடர் அகப்பொருள் இலக்கணங்களில் அமையும் சங்ககாலத் தலைவி யொருத்தி, தலைவன் வாழும் மலையைக் கண்டாலும், அவனையே கண்ட மகிழ்வை - உள்ளுணர்வைப் பெறுகின்றாள். அவள் வாழும் குன்றத்தை நோக்கினாலே அவன் பிரிவால் பசலையுற்ற நெற்றி மீண்டும் பழைய நிலைமைக்கு ஒளிபெற்று விளங்குகின்றதாம்.

இனமயில் அகவும் மரம்பயில் கானத்து
நரைமுக வூகம் பார்ப்பொடு பனிப்பப்
படுமழை பொழிந்த சாரல் அவர்நாட்டுக்
குன்றம் நோக்கினென் தோழி
பண்டை யற்றே கண்டிசின் நுதலே [113]

வாழைதந் தனையாற் சிலம்புபுல் லெனவே [114]

தலைவன் நாட்டு மலையில் வாழைமரம் கண்டு வாட்டமுற் றிருந்த தலைவி பற்றிய பாட்டு இது.

இம்முறையில் ஆண்டாளும் பதுமநாபன் கையில் பல காலமும் பிரியாமல் திகழும் பாஞ்சசன்னியம் என்னும் சங்கினை எம் பெருமானோடு சுற்றமாக்கிப் பேசுகின்றார். ''கருப்பூரம் நாறுமோ?'' என்று தொடங்கும் ஏழாந் திருமொழிப் பாடல் சிறந்த சொற்களின் அணிவகுப்பாய், உயரிய கற்பனைகளின் உறைவிடமாய், உணர்ச்சி வெள்ளங்களின் வடிகாலாய்த் திகழக் காணலாம். முதற்பாடலே இதற்குச் சான்றெனலாம்.

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ,
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்தி ருக்குமோ,
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்,
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே [115]

''ஏ! அழகிய சங்கே! நீ கடலிற் பிறந்து, அங்கு நின்றும் பஞ்சஜனன் என்ற அசுரனுடைய உடம்பிற்போய் வளர்ந்து,

இப்படிப் பிறந்த இடத்தையும் மறந்து, வளர்த்த இடத்தையும் நினையாமல் எம்பெருமானுடைய கைத்தலமாகிற உயர்ந்த இடத்திலே குடிபுகுந்து, கொடியவர்களான அசுரர்கள் துன்பப்படும்படி ஒலியெழுப்பும் மேன்மையினைப் பெற்றுள்ளாய். உன் பெருமையே பெருமை''.

கடலில்பி றந்துக ருதாது பஞ்சசனன்
உடலில்வ ளர்ந்துபோ யூழியான் கைத்தலத்
திடரில்கு டியேறித் தீயவ சுரர்கள்,
நடலைப்ப டமுழங்கும் தோற்றத்தாய் நற்சங்கே! 116

உயர்ந்த உள்ளம் உயர்ந்த காட்சிகளையே காணும் என்றபடியும் ''உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை'' என்னும் தொல்காப்பியனார் உவமை பற்றிய கருத்துப்படியும் ஆண்டாள் மனத்திரையில் பளிச்சிடும் ஓர் அழகுக் காட்சி வருமாறு:

இளவேனிற் காலத்து இன்ப முழுநிலா பெரிய உதயகிரிமேல் தோன்றினாற்போன்று, பால்வெண் சங்கமும் வடமதுரையிலுள்ளார்க்கு அரசனான கண்ணபெருமானுடைய திருக்கையில் குடிபுகுந்து மேன்மை கொள்ள வீற்றிரா நின்றது.

தடவரை யின்மீதே சரற்கால சந்திரன்,
இடையுவா வில்வந்தெ ழுந்தாலே போல், நீயும்
வடமதுரை யார்மன்னன் வாசுதே வன்கையில்,
குடியேறி வீற்றிருந்தாய் கோலப்பெ ருஞ்சங்கே! 117

''ஏ வலம்புரிச் சங்கே! கண்ணபிரானுடைய திருக்கையில் சந்திரமண்டலம் போல இடைவிடாது இருந்து கொண்டு அவனுடைய காதில் ஏதோ ரகசியம் பேசுவதுபோல் எப்போதும் விளங்குகின்றாய். செல்வத்தில் மிக்கவனென்று சிறப்பித்துக் கூறப்பெறும் இந்திரன் கூடச் செல்வச் சிறப்பில் உனக்கு இணையாகமாட்டான் என்பதாம்.''

சந்திர மண்டலம்போல் தாமோத ரன்கையில்,
அந்திர மொன்றின்றி யேறிய வன்செவியில்,
மந்திரம் கொள்வாயே போலும்வ லம்புரியே
இந்திரனு முன்னோடு செல்வத்துக் கேலாவே 118

''ஏ சங்கே! ஒரே கடலில் உன்னோடு கூடவே வாழப் பிறந்தவர்களான மற்றும் பலரை இவ்வுலகம் ஒருபொருட்டாக மதிக்கவில்லை. மாறாக நீ ஒருவன் மட்டும் என்றும் நிலைத்து நிற்கும் திருக்கண்ணனாம் திருவாயின் முகத்தைப் பலகாலமாகப் பருகா நின்றாய். ஆதலின் நீயன்றோ பேறுபெற்றவன் என்றபடி.

> உன்னோடு டனேயொ ருகடலில் வாழ்வாரை
> இன்னாரி னையாரென் றெண்ணுவா ரில்லைகாண்
> மன்னாகி நின்றம துசூதன் வாயமுதம்,
> பன்னாளு முண்கின்றாய் பாஞ்சசன் னியமே! [119]

காதற்பூசல் காரணமாகச் சங்கை ஆட்படுத்தி ஆண்டாள் பாடியிருக்கும் பாடல்கள் இரண்டு, உயர் கருத்துகள் கொண்டு விளங்குபவை எனலாம். அவ்விரு பாடல்களையும் நோக்குவோம்.

''சங்கே! நீ உண்பது என்னவென்றால், உலகங்களை அளந்தவனான எம்பெருமானுடைய திருவாயிலுள்ள அமிர்தமாகும்; நீ படுத்துக் கொள்வது எங்கே என்றால், கடல்போன்ற நிறத்தையுடையவனான அவ் எம்பெருமானுடைய திருக்கையிலே ஆகும். இவ்வாறாக உனக்கு ஊணும் உறக்கமும் அவனிடத்திலேயே வாய்த்திருக்கின்றன. இதனால் பெண்ணாகப் பிறவி எடுத்தோர் அனைவரும் உன்னை எதிர்த்துப் போர்க்குரல் எழுப்புகிறார்கள், எங்கள் வாழ்க்கையை இவன் ஒருவனே கொள்ளை கொள்கின்றானென்று பூசல் இடுகின்றார்கள்; கலாம் விளைவிக்கின்றார்கள். இவ்வாறு இரக்கத்திற்குரிய பெண்கள் வருந்தும் வண்ணம் நீ அநியாயமான செயலைச் செய்கிறாய். இச்செயல் எவ்வகையிற் பார்த்தாலும் உனக்குத் தகுதியுடையதன்று''.

> உண்பது சொல்லிலு லகளந்தான் வாயமுதம்,
> கண்படை கொள்ளில்க டல்வண்ணன் கைத்தலத்தே,
> பெண்படை யாருன்மேல் பெரும்பூசல் சாற்றுகின்றார்,
> பண்பல செய்கின்றாய் பாஞ்சசன் னியமே ! [120]

''பெரிய செல்வம் படைத்த சங்கமே ! பதினாறாயிரம் தேவிமார்கள் கண்ணபிரானுடைய வாயமுதத்தை நாம் பருக வேண்டும் என்று விரும்பி எதிர்பார்த்து நிற்கிறார்கள். பகவான் கண்ணனிடம் ஆரா அன்பு செலுத்துவோர் அனைவரும் உண்ணற்குரிய

பொருளாகப் பொதுவில் உள்ள அவ் எம்பெருமானது வாயமுதத்தை நீ ஒருவனே அடாது புகுந்து தேனை உண்கிறாப்போல் உண்டால், மற்றப் பேர்கள் எல்லோரும் உன்னோடு மாறிட மாட்டார்களா என்றபடி.

> பதினாறா மாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப,
> மதுவாயில் கொண்டாற்போல் மாதவன்றன் வாயமுதம்,
> பொதுவாக வுண்பதனைப் புக்குநீ யுண்டக்கால்,
> சிதையாரோ வுன்னோடு செல்வப்பெ ருஞ்சங்கே! [121]

இவ் ஏழாந் திருமொழியை அநுசந்திப்பவர்கள் எவ்வாறு பாஞ்ச சன்னியம் பதுமநாபனுக்கு அணுக்கனாய் விளங்குகின்றதோ அதுபோல் அணுக்கராய், அந்தரங்கராய் திகழும் பேறு பெறுவர் என்று ஏழாந் திருமொழியின் இறுதிப்பாடலில் தலைக் கட்டுகிறார் ஆண்டாள்.

> பாஞ்சசன் னியத்தை பற்பநா பனோடும்,
> வாய்ந்தபெ ருஞ்சுற்ற மாக்கிய வன்புதுவை,
> ஏய்ந்தபுகழ்ப் பட்டர்பிரான் கோதைதமி ழீரைந்தும்,
> ஆய்ந்தேத்த வல்லாரா ரவரும ணுக்கரே [122]

மைத்துனன் நம்பி மதுசூதனன் நம்பி, கைத்தலம் பற்றிடக் கனவு கண்ட பின்னரும், பாஞ்ச சன்னியத்தைப் பார்த்து அதன் சீரார்ந்த சிறப்பு நிலைக்கு மாறுபட்டு மணம் மறுகி நின்ற நிலையிலும் ஆண்டாளின் காதல் துயரம் கட்டையுடைத்துக் கொண்டு செல்கின்றது: கரை புரண்டோடிவரும் காட்டாற்று வெள்ளம்போல் அவர் காதல் வெள்ளம் கரையிலவாகிறது. எனவே கண்ணபிரான் விரும்பியுறையும் தலங்களிலே தம்மைக் கொண்டு போய்ச் சேர்க்குமாறு தம்மோடு இருப்பவர்களைப் பார்த்து வேண்டுகிறார் ஆண்டாள். பேதலித்து, அவலித்து அரற்றிஅழும் மனநிலையில் எழுந்த பாடல்கள் பன்னிரண்டாம் திருமொழியாக அமைந்துள்ளன.

துன்பத்தில் தோய்ந்த அவல உணர்வுகள் பொங்கிப் பீறிடும் நிலையைப் பின்வரும் பாடல்களிற் காணலாம்.

"என்னுடைய முடிவுக்கு மாறுபாடாக இருக்கிற உங்களுக்கு எதுவும் புரியாது. மாதவன்மாட்டு மாறாக் காதல் கொண்டு விட்ட எனக்கு நீங்கள் சொல்வதெல்லாம் ஊமையும் செவிடனும்

கூடி வார்த்தை சொல்லிக் கொள்வதுபோல் வீணாகும். இப்போது நீங்கள் எனக்குச் செய்யத்தக்கது என்னவென்றால் பெற்ற தாயாம் தேவகியை விட்டு நீங்கி, வேறொரு தாயாகிய யசோதைப் பிராட்டியின் வீட்டிலே வளர்ந்தவனும், மற்போரில் வல்லவனுமான கண்ணபிரான் உறையும் நகரமாகிய வட மதுராபுரிக்கு அருகில் ஏதேனும் ஒரு பகுதியில் என்னைக் கொண்டு சேர்த்து விடுங்கள்''.

மற்றிருந் தீர்கட் கறியலாகா
மாதவ னென்பதோ ரன்புதனை
உற்றிருந் தேனுக் குரைப்பதெல்லாம்
ஊமைய ரோடுசெவிடர் வார்த்தை
பெற்றிருந் தாளை யொழிவேபோய்ப்
பேர்த்தொரு தாயில் வளர்ந்தநம்பி,
மற்பொருந் தாமற் களமடைந்த
மதுரைப் புரத்தென்னை யுய்த்திடுமின் 123

''இனி வெட்கப்படுவதற்கு ஒன்றும் இல்லை ; காதல் வெள்ளம் கரை புரண்டோடுகிறது. ஊரார் என் காதற்செய்தியை அறிந்து கொண்டார்கள். நீங்கள் உள்ளபடியே என்னைக் காப்பாற்ற விரும்பினால் திருவிக்கிரமாவதாரம் எடுத்து இவ்வுலகளந்த கண்ணன் வாழும் திருவாய்ப்பாடியிலே கொண்டு சேர்த்து விடுங்கள். அப்போதுதான் என்நோய் தலைமடங்கும்''

நாணி யினியோர் கருமமில்லை
நாலய லாரும் அறிந்தொழிந்தார்,
பாணியா தென்னை மருந்துசெய்து
பண்டுபண் டாக்க வுறுதிராகில்
மாணி யுருவா யுலகளந்த
மாயனைக் காணில் தலைமறியும்,
ஆணையால் நீரென்னைக் காக்கவேண்டில்
ஆய்ப்பாடிக் கேயென்னை யுய்த்திடுமின் 124

''தகப்பனாரும் தாய்மாரும் மற்றுமுள்ள உறவினரும் இருக்கும்போது இவள் தான்தோன்றியாகத் தெருவிலே புறப்பட்டாள் என்ற வார்த்தையானது உலகில் பரவின பிறகு அப்பழியைத் தடுக்க முடியாது. கண்ணன் என் எதிரே வந்து தன்

வடிவழகு காட்டி என்னை மயக்குகின்றான். எனவே இப்பொழுது நீங்கள் செய்ய வேண்டுவது என்னவென்றால் பெண்களைக் குடி கெடுத்துக் குறும்புசெய்யும் பிள்ளையைப் பெற்றவனான நந்த கோபருடைய திருமாளிகை வாசலிலே நள்ளிரவிலே என்னைக் கொண்டு போய்ச் சேர்த்துவிடுங்கள்'' என்பதாம்.

தந்தையும் தாயுமுற் றாரும் நிற்கத்
தனிவழி போயினாள், என்னும்சொல்லு,
வந்தபின் னைப்பழி காப்பரிது
மாயவன் வந்துருக் காட்டுகின்றான்,
கொந்தள மாக்கிப் பரக்கழித்துக்
குறும்புசெய் வானோர் மகனைப்பெற்ற,
நந்தகோ பாலன் கடைத்த லைக்கே
நள்ளிருட் கணென்னை யுய்த்திடுமின்[125]

மேலும் ஆண்டாள் தன்னை யமுனைக் கரையிலும் காளிங்க நர்த்தனம் செய்த இடத்திலும், பந்தவிலோசனம் என்கிற இடத்திலும், பாண்டீரம் என்னும் ஆலமரத்தின் அருகிலும், கோவர்த்தன மலையின் அருகிலும், துவாரகைக்கு அருகிலும் கொண்டு போய்ச் சேர்த்திடுமாறு வேண்டும் கூற்றில் அவலம் இழையோடக் காணலாம்.

குலசேகராழ்வார் திருவேங்கடமலையில் கோனேரி வாழும் குருகாய்ப் பிறக்க வேண்டுமென எண்ணங்கொண்டார்; இரண்டா வதாகத் திருவேங்கடச் சுனையில் மீனாய்ப் பிறக்க வேண்டுமென நினைத்தார். வேங்கடக்கோன் தானுமிழும் பொன்வட்டிலாய்ப் பிறக்க மனம் பற்றினார். பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்தில் செண்பக மரமாய் நிற்கும் திருவிற்கு ஏங்கினார். எம்பெருமான் ஈசன் எழில் வேங்கடமலைமேல் தம்பகமாய் நிற்கும் தவத்தை அவாவினார். தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துள் பொற்குவடாகத் திகழத் திருவுளங்கொண்டார். தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடமலைமேல் கானாறாய்ப் பாயும் கருத்துக் கொண்டார். வெறியார் தண்சோலைத் திருவேங்கடமலை மேல் நெறியாய்க் கிடக்கும் நிலையினை நீள நினைந்தார். 'படியாய்க் கிடந்து பவளவாய் காண்பேனே' என்று துள்ளிவரும்

உவகைப் பெருக்கோடு உரைத்தார். இறுதியாகச் செம்பவள வாயான் திருவேங்கடமென்னும் எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே என்று குறிப்பிட்டார்.

இம்முறையிலேயே நாச்சியாரும் அச்சுதன் அணியும் பொருள்கள் கொண்டு தம் அவலத்தைத் தணிக்க வேண்டுமென்று தம்மைச் சுற்றியிருந்தோரைப் பார்த்துப் பேசுகின்றார். பதின் மூன்றாந் திருமொழி ''கண்ணனென்னும் கருந்தெய்வம்'' என்று தொடங்குகின்றது; சில அரிய உவமைகளைக் கொண்டு திகழ்கின்றது. நாச்சியார் படும் நலிவுகளை எல்லாம் நயம்படக் கிளத்தி நிற்கிறது.

கண்ணனென்னும் கருந்தெய்வத்தின் காட்சியில் பழகிக் கிடக்கிறாராம் ஆண்டாள். அப்போது 'புண்ணில் புளிரசத்தைப் பெய்து' கொடுமை சேர்த்தது போன்று பணிக்கை சொல்வதைத் தவிர்ந்து, பெண்ணின் வருத்தம் ஈதென்று அறியாத கண்ண பெருமானுடைய திருவரையிற் சாத்திய பீதாம்பரத்தைக் கொண்டு வந்து என் காதல் துன்பம் தணியும்படி என்மேல் வீசுங்கள் எனக் கேட்டுக் கொள்கிறார் கோதையார்.

பால்பாயும் பருவத்தையுடைய ஆலந்தளிரிலே கண் வளர்ந் தருளும் கண்ணபெருமானுடைய வலையிலே ஆட்பட்டுக் கொண் டிருக்கிற என்னைக்குறித்து வேலாயுதத்தை இட்டுத் துளைத்தாற் போல் உங்களுக்குத் தோன்றினபடியெல்லாம் கொடுமையாகக் கூறுவதைத் தவிர்த்து இடைப்பிள்ளாய் கையில் இடைச்சாதிக்கு உரியகோலைக்கொண்டு பசுக்கூட்டத்தை மேய்த்தவனாய், திருக் குடந்தையில் திருக்கண் வளர்ந்து அருளுபவனாய்க் குடக்கூத்தை நிகழ்த்தியவனுமான கண்ணபிரானுடைய பசுமையும் குளிர்ச்சியும் அழகுங்கொண்ட திருத்துழாயைக் கொண்டு வந்து நெறிப்புக் கொண்டதாயும் மென்மைத் தன்மை மிக்கதாயுமுள்ள என் கூந்தலிலே சூட்டுங்கள்.

கம்சனைத் தொலைத்தவனும் பெரிய வில்போன்ற புருவத்தை உடையவனும் அவன் கடைக்கண்ணாகிற சிறகையுடைய அம்பாலே நெஞ்சு முழுவதும் வெந்து போகும்படியாகப் பெற்று நிலைமை குலைந்து வருந்துகின்ற என்னைப் பார்த்து ''அஞ்சாதே''

என்றொரு சொல்லும் சொல்லாதவனாய் விளங்கும் அப்பெருமான் தனது திருமார்பில் சாத்தியருளிய வனமாலையை மோசம் செய்யாமல் கொடுத்தருள்வானேயாகில் அம்மாலையைக் கொண்டு வந்து என்னுடைய மார்பிலே நெஞ்சினுள் வெப்பம் போகுமாறு புரட்டுங்கள்.

திருவாய்ப்பாடி முழுவதையும் கொள்ளைகொண்டு அனுபவிக்கிற ஒரு கறுத்த காளைபோன்ற கண்ணன் துன்பப்படுத்த, அதனால் துன்பமுற்று, பலவகைகளிலும் பரிபவம் உழந்து நொந்து கிடக்கிற என்னை இவ்வுலகத்திலே தேறுதல் கூறி ஆறச் செய்பவர் யாருமிலர் எனும் நிலையில் எவ்வளவு குடித்தாலும் திகட்டாத அமிர்தம் போன்ற கண்ணபிரானுடைய அமிர்தம் சுரக்கின்ற திருவாயில் ஊறிக் கிடக்கிற அமுதநீரை உலராமல் பசையுடன் கொண்டுவந்து அதை நான் பருகும்படி செய்து என் களைப்பையும் இளைப்பையும் போக்குவீர்களாக எனத் தம் தாயாரை நோக்கிக் கூறுகிறார் ஆண்டாள்.

அழுதாலும் தொழுதாலும் தன் அழகிய வடிவைக் காட்டாதவனாயும் ''அஞ்சேல்'' என்ற சொல்லைச் சொல்லாதவனாயுமுள்ள கண்ணன் இங்கே வந்து என்னை நெருங்கியணைத்து முன்னும் பின்னும் சூழ்ந்து கொண்டிருந்து போகாமலிருக்கிறான். பசுக்கூட்டங்களின் பின்னே கண்ணன் ஊதிக் கொண்டு வரும் புல்லாங்குழலின் துவாரங்களில் உண்டாகிற நீரைக் கொணர்ந்து என்னுடைய முகத்திலே தடவிக் குளிர்ச்சியை ஊட்டுங்கள் என்கிறார் ஆண்டாள்.

மரியாதைகள் எல்லாம் மட்டுப்பட்டுக் கிடக்கிற இவ்வுலகத்தில் நந்தகோபன் மகன் என்ற பெயருடன் இரக்கமற்றவனாய், கொடியவனாய் விளங்கும் கண்ணனாலே அபலையான நான் மிகவும் துன்பப்படுத்தப்பட்டு இப்படி அப்படி அசைவதற்கும் இயலாமல் உள்ளேன். அவ்வாறு ஆயின பின்னை அக்கண்ணபிரான் திருவடி பட்டு மிதித்த இடத்திலுண்டான பாததூளியையாவது கொண்டுவந்து விட்டுப்பிரியாத உயிரையுடைய என் உடம்பிலே பூசுவீர்களாக.

எம்பெருமான் ஆணைக்குட்பட்ட இல்வுலகத்தில் அவனைப் பெற்ற தாயாகிய யசோதையானவள் வளர்த்தாள். என் மார்பகங்கள் அவன் திருத்தோள்களைத் தழுவவே துடிக்கின்றன என்றும் தம் துன்பத்தைத் கூறுகிறார் ஆண்டாள்.

அடுத்த பாட்டு ஆண்டாளின் ஆராத அவலத்தை அகழ்ந் தெடுத்துக் காட்டுகின்றது.

"உள்ளுக்குள்ளேயே கரைந்து நைந்து போகிற என்னைப் பற்றி "இருக்கிறாளா? இறந்துவிட்டாளா?" என்றும் கேளாதவனாய் என்னை முற்றும் கொள்ளை கொண்ட், பெண்கள் திறத்திலே பொல்லாங்கு செய்யுமவனான கண்ணபிரானை ஒருகால் நான் காணப்பெற்றேனேயாகில் பயனற்றதான என்னுடைய இந்த மார்பகங்களை வேர் முதலோடே பற்றிப் பிடுங்கி அந்தக் கண்ணனுடைய மார்பிலே எறிந்துவிட்டு என் துக்கத்தைப் போக்கிக் கொள்ளப் பெறுவேன்" என்கிறார் ஆண்டாள்.

உள்ளே யுருகி நைவேனை
உளளோ இலளோ வென்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக்
கோவர்த் தனனைக் கண்டக்கால்,
கொள்ளும் பயனொன் றில்லாத
கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட் டவன்மார்பில்
எறிந்தென் அழலைத் தீர்வேனே 126

அடுத்த பாடல் அவலத்திற்கு மேல் அவலம் கூட்டி நிற்கிறது.

"என் கிளர்ந்து பருத்த மார்பகங்களினுடைய குமைச்சல் தீரும்படி கண்ணபிரானுக்கு அந்தரங்கமான கைங்கரியத்தை இந்தப் பிறவியிலே செய்யாமல் இந்தப் பிறவி கழிந்த பின்பு செய்யக் கூடியதான தவந்தான் எற்றுக்கு? செம்மையுடைய திருமார்பிலே என்னை அவன் சேர்த்துக் கொண்டானேயாகில் நல்லது; ஒருநாள் என்முகத்தைப் பார்த்து மெய்யே சொல்லி "நீ எனக்கு வேண்டாம் போ" என்று தள்ளிவிட்டமை தோன்ற விடைகொடுப்பானாகில் அது மிகவும் உத்தமம்" என்கிறார் ஆண்டாள்.

கொம்மை முலைக ளிடர்தீரக்
கோவிந் தற்கோர் குற்றேவல்,
இம்மைப் பிறவி செய்யாதே
இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்,
செம்மை யுடைய திருமார்வில்
சேர்த்தா னேனும் ஒருஞான்று,
மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி
விடைதான் தருமேல் மிகநன்றே [127]

நாச்சியார் திருமொழியின் இறுதியாக அமையும் ''பட்டி மேய்ந்தோர்'' எனத் தொடங்கும் பதினான்காந்திருமொழி விருந்தாவனத்தே பரந்தாமனைக் கண்டமையைப் பகர்வதாகும்.

இத்திருமொழியின் சிறப்பு யாதெனில் முன்னிரண்டு அடிகளும் ஒருவர் வினவும் போக்கில் அமையப் பின்னிரண்டடிகள் அவ் வினாவிற்கு விடையாக அமைவதாகும்.

கண்ணபிரான் என்கிற கறுத்த காளையொன்று காவலின்றி எங்கும் சுதந்திரமாய்த் திரிந்து கொண்டும், பலராமனுக்கு ஒப்பற்ற தம்பியாய் மகிழ்ச்சி சுரப்பதற்கு ஒரு வடிகாலாய் அமைந்து விளையாடிக் கொண்டும் இந்தப் பக்கமாக வரப் பார்த்தீர்களோ? தனக்கு விருப்பமான பசுக்களைத் திருப்தியாக மடக்கி மேய்த்து, தண்ணீர் குடிப்பித்து இந்தப் பக்கமாக அவற்றை மேயவிட்டுக் கொண்டு அப்பெருமான் விளையாடி நிற்கும் பிருந்தாவனத்திலே கண்டு கைதொழுதோம் என்கிறார் ஆண்டாள்.

பட்டி மேய்ந்தோர் காரேறு
பலதே வற்கோர் கீழ்க்கன்றாய்,
இட்டீ றிட்டு விளையாடி
இங்கே போதக் கண்டீரே? —
இட்ட மான பசுக்களை
இனிது மறித்து நீரூட்டி,
விட்டுக் கொண்டு விளையாட
விருந்தா வனத்தே கண்டோமே. [128]

இவ்வாறு ஒவ்வொரு பாட்டும் அமைந்திருக்கக் காணலாம்.

"பாகவதர்களை முன்னிட்டே ஈஸ்வரனிடம் செல்ல வேண்டுமென்பது வைணவத்தின் வழக்கு. இது மற்றையோருக்கு ஒரோ இடத்தில் உருக்கொண்டுள்ளது. நம் சூடிக்கொடுத்த சுடர்க்கொடிக்கோ, இத்தத்துவம் திருப்பாவை முதற் பாசுரந் தொடங்கி நாச்சியார் திருமொழி இறுதிப் பாசுரம் வரையும் பொருந்தி இருத்தலைக் காணலாம். இவர் நூலை ஆராய்பவருக்கு இவர் இறைக்காதல், படிப்படியாய் வளர்ந்து உச்ச நிலையை அடைவது நன்கு புலனாகும்" என்பர் பண்டிதை எஸ். கிருஷ்ண வேணி அம்மையார்.[129] மேலும் இவர் 'நாச்சியார் திருமொழி' என்னும் பாடற்பகுதி குறித்த தம் கருத்தைப் பின்வருமாறு மொழிவர்.

"நாச்சியார் திருமொழி" ஓர் அழகிய ஓவியம். இஃது யாருடைய ஓவியம்? அழகே திரண்டதெனக் காணும் கண்ணன் ஓவியம். இதைத் தீட்டியவர் யார்? இவ்வுலகையே ஒரு படமாக வரைந்து காட்டும் ஓவியத் திறமை வாய்ந்த நம் கோதையார். ஓவியந் தீட்ட என்னென்ன வேண்டும்? எழுதப்படுவோர் உருவப் படமும், பல நிறங்களும், தீட்டும் கருவியும் வேண்டும். இவற்றுள் ஒன்று குறையினும் ஓவியம் உருப்பெற்றெழாது என்பது திண்ணம். ஓவியத்தில் அமைய வேண்டிய நம் கண்ணன் திருவுருவம், நம் ஆண்டாள் அகத்திலும் கண்ணிலும் பொருந்திக் காட்சி அளிக்கிறது. மலர்கள், மலைகள், பறவைகள், சங்கு, ஆர்வம் முதலியன பல நிறங்களாய் அமைகின்றன. இவர் ஞானமே சித்திரக் கோலாகிறது. இந்நிலையில் நம் நுட்ப மதியார் தம் ஞானக்கோலை இயற்கை யாகிற நிறங்களில் தோய்த்துத் தோய்த்துப் பெட்பு வாய்ந்த ஒரு கண்ணன் அழகு ஓவியத்தை வரிவடிவில் இறக்கியுள்ளார். இது யாவர் மனத்தையும் கவர்கிறது".[130]

ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலைகளே வடபத்திரசாயி - வட பெருங்கோயிலுடையான் ஆர்வத்துடன் அணிந்து இன்புறக் காரணமாக இருந்தமையின் பெரியோர் இவரைச் 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி' என வழங்கினர். 'திருப்பாவை' என்னும் பிரபந் தத்தைப் பாடியருளிய பாவையாதலின் இவரைச் 'செல்வியார்' என்று செப்பலுற்றனர். அங்ஙனமே பூமாலையைப் புனைந்து தந்ததனால் இவர் 'நாச்சியார்' என்றும் நவிலப் பெற்றார்.

'நாச்சியார்' என்ற சொல் 'தலைவியார்' என்னும் பொருண்மை சுட்டுவதாகும். உலக உயிர்களுக்கும் உயிர்களின் உள்ளுறையும் இறைவனுக்கும் இவரே தலைவியார் எனக்கொள்ளலாம். அருளே வடிவாக உருவெடுத்திருக்கும் ஆண்டாள் அம்மையார், மக்களிடம் பரிவு கொண்டு, இறைவனுக்கு நல்லுபதேசம் (புருஷகாரம்) செய்வதனைக் காணலாம். ஆண்டாள் தம் பெண்மைக் குணங்களிற் பெருமை பீறிட நிற்கும் அன்பு என்னும் அருங்குணத்தால் உலகத்தைத் தம் வயப்படுத்தி உயிர்களைத் திருத்தி அமைக் கிறார் என்பதாகும். பெண்மைக் குணங்களுள் அரும்பேறாம் அருளுடைமை காரணமாக உலக உயிர்களை இறைவனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிறார் என்றும் கொள்ளலாம்.

சேதனனை அருளாலே திருத்தும்
ஈஸ்வரனை அழகாலே திருத்தும் [131]

என்னும் ஸ்ரீவசன பூஷண வாக்கியங்களின்படி, தன்னிடம் நிறைந் தொளிரும் ஆன்ம அழகால் திருவரங்கப் பெருமானைத் தம்பால் இழுக்கிறார். இவர் திருவாய் மலர்ந்தருளிய நூற்பெயரும் இவர் பெயரையொட்டியே 'நாச்சியார் திருமொழி' என அமைந்தது பெரிய விசேடமன்றோ !

இனி ஆண்டாள் என்னும் சொல்லை நோக்குவோம். உலக உயிர்களையும் எம்பெருமானையும் ஆளும் திறமை பெற்றிருந்தவர் ஆனதனால் ஆண்டாள் எனப் பெற்றார். "நீர் எனக்கு மாமனார் ஆனீர்'' என்று திருவரங்கத்துப் பெரிய பெருமாளே மனம் உகந்து புதுவையர்கோனாம் பெரியாழ்வாரிடம் கூறுகின்ற அளவிற்குக் 'கோதை' என்னும் பிள்ளைத் திருப்பெயர் கொண்டு, சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாக வளர்ந்து, திருப்பாவை பாடியருளிய செல்வியராகத் திகழ்ந்து, நாச்சியார் திருமொழி நவின்ற நாச்சியாராய் நிறைவு பெற்று, வைணவ உலகில் என்றும் 'ஆண்டாள்' என்னும் திருப்பெயரால் அழைக்கப்பெறுபவராய் விளங்குகின்றார் என்பது ஒருதலை.

இதனால்தான் தொடக்கத்தில் பெரியாழ்வார்,

பேசவும் தெரியாத பெண்மையின்
பேதையேன் பேதையிவள் [132]

என்றும்,

பெரும்பெருத்த கண்ணாலங்கள் செய்து
பேணிநம் மில்லத்துள்ளே
இருத்துவான் எண்ணி நாமிருக்க
இவளும்ஒன் றெண்ணுகின்றாள் [133]

என்றும் பேசியவர், 'திண்ணார் மதிற்சூழ் திருவரங்கனார்' ஆண்டாளை மணமகளாக ஏற்றுக் கொண்டவுடன்,

ஒருமகள் தன்னை யுடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்
செங்கண்மால் தான்கொண்டு போனான்;
பெருமக ளாய்க்குடி வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமக ளைக்கண்டு கந்து
மணாட்டுப் புறஞ்செய்யுங் கொல்லோ [134]

என்றும்,

நல்லதோர் தாமரைப்பொய்கை
நாண்மலர் மேல்பனி சோர
அல்லியும் தாது முதிர்ந்திட்டு
அழகழிந் தாலொத்த தாலோ!
இல்லம் வெறியோடிற் றாலோ!
என்மக ளைஎங்கும் காணேன்
மல்லரை யட்டவன் பின்போய்
மதுரைப்பு றம்புக்காள் கொல்லோ! [135]

என்றும் அழுது புலம்புவதினின்றும் அவர்தம் ஆற்றாமையை உணரலாம். திருவரங்கத்து எம்பெருமானே ஆட்கொண்ட அளவிலும் கூடத் தாம் வளர்த்த மகள் ஆண்டாளின் பிரிவை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை என்றால், ஆண்டாளின் அரும் பண்புகள் இருந்தவாறு என்னே! ஆண்டாள் அருளிய இலக்கியமாம் திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் உலகம் உள்ளளவும் நிலைத்து நிற்கும் என்பது உறுதி.

———

## குறிப்புகள்

1. பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி, ப. 88.
2. தமிழ் விடுதூது, கண்ணி 151, ப. 29.
3. கம்பராமாயணம், பாலகாண்டம், தாடகை வதைப் படலம், பாடல் 34.
4. நாச்சியார் திருமொழி 1 : 10.
5. மேற்படி, 2 : 10.
6. " 3 : 10.
7. " 4 : 10.
8. " 5 : 11.
9. " 6 : 11.
10. " 7 : 10.
11. " 8 : 10.
12. " 9 : 10.
13. " 10 : 10.
14. " 12 : 10.
15. " 13 : 10.
16. " 14 : 10.
17. கணிகண்ணன் திருப்பாட்டு, தனிப்பாடல் திரட்டு, பாடல் எண் 38.
18. மேற்படி பாடல் எண் 39.
19. காரைக்காலம்மையார் புராணம், பாடல் 86.
20. நாச்சியார் திருமொழி 1 : 4.
21. " 1 : 5.
22. திருக்குறள், பொருள், வினைத்திட்பம், 6.
23. நாச்சியார் திருமொழி, 1 : 1.
24. " 1 : 2.
25. " 1 : 3.
26. " 1 : 7.
27. " 1 : 8.
28. குமர குருபரர், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ். பாடல் 35.
29. நாச்சியார் திருமொழி, 2 : 2.
30. " 2 : 4.

31. நாச்சியார் திருமொழி 2:5.
32. „ 2:6.
33. „ 2:7.
34. நாச்சியார் திருமொழி, 3:1.
35. „ 3:2.
36. „ 3:3.
37. „ 3:4.
38. „ 4:9.
39. „ 4:8.
40. „ 5:1.
41. „ 5:2.
42. „ 5:3.
43. „ 5:6.
44. „ 5:8.
45. „ 5:9.
46. „ 5:10.
47. „ 5:1.
48. „ 5:4.
49. ஔவையார் தனிப்பாடல் திரட்டு, 6.
50. மாணிக்கவாசகர், திருவாசகம், கோயில் திருப்பதிகம். 10.
51. நாச்சியார் திருமொழி, 5:5.
52. „ 5:6.
53. „ 5:7.
54. „ 5:9.
55. „ 5:10.
56. தொல்காப்பியம், பொருளியல், 2.
57. இலக்கண விளக்கப் பாட்டியல், 874.
58. பிரபந்தத் திரட்டுப் பாடல். 17.
59. இரத்தினச்சுருக்கம்.
60. அகநானூறு, 85.
61. „ 141.
62. „ 393.
63. „ 209.
64. சிலப். காடுகாண். 41—51.
65. விவேக சிந்தாமணி, 28.

66. நாலாயிர திவ்விய பிரபந்தம், இரண்டாம் திருவந்தாதி, 53.
67. நாலாயிர திவ்விய பிரபந்தம், மூன்றாம் திருவந்தாதி, 63.
68. நான்காம் திருவந்தாதி, 40.
69. பெருமாள் திருமொழி 4:2.
70. „ 4:4.
71. „ 4:5.
72. „ 4:8.
73. „ 4:9.
74. திருவேங்கடக் கலம்பகம், 72.
75. நாச்சியார் திருமொழி, 8:1.
76. „ 8:2.
77. „ 8:3.
78. „ 8:4.
79. „ 8:5.
80. „ 8:6.
81. „ 8:9.
82. „ 9:4.
83. „ 9:5.
84. „ 9:6.
85. „ 9:7.
86. „ 9:9.
87. „ 10:1.
88. „ 10:3.
89. „ 10:4.
90. புறநானூறு, 242 : 5–6.
91. நாச்சியார் திருமொழி 10:5.
92. „ 10:8.
93. „ 10:9.
94. குறுந்தொகை, 163.
95. நாச்சியார் திருமொழி, 11:1.
96. „ 11:2.
97. கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், கைகேயி சூழ்வினைப் படலம், 86.
98. நாச்சியார் திருமொழி, 11:3.

99. நாச்சியார் திருமொழி, 11 : 4.
100. „ 11 : 5.
101. „ 11 : 6.
102. „ 6 : 1.
103. „ 6 : 2.
104. „ 6 : 3.
105. „ 6 : 4.
106. „ 6 : 5.
107. „ 6 : 6.
108. „ 6 : 7.
109. „ 6 : 8.
110. „ 6 : 9.
111. „ 6 : 10.
112. „ 6 : 11.
113. குறுந்தொகை, 249.
114. குறுந்தொகை, 327.
115. நாச்சியார் திருமொழி, 7 : 1.
116. „ 7 : 2.
117. „ 7 : 3.
118. „ 7 : 4.
119. „ 7 : 5.
120. „ 7 : 8.
121. „ 7 : 9.
122. „ 7 : 10.
123. „ 12 : 1.
124. „ 12 : 2.
125. „ 12 : 3.
126. „ 13 : 8.
127. „ 13 : 9.
128. „ 14 : 1.
129. எஸ். கிருஷ்ணவேணியம்மையார், பெரியார் பெண்கொடி, [ப. 198.
130. மேற்படி, ப. 93.
131. ஸ்ரீ வசனபூஷணம்.
132. பெரிய திருமொழி 3 : 7 : 7.
133. மேற்படி, 3 : 7 : 10.
134. „ 3 : 8 : 4.
135. பெரிய திருமொழி, 3 : 8 : 1.

